கழக வெளியீடு-௨௭

உ

திருச்சிற்றம்பலம்

சமண முனிவர்கள்

இயற்றிய

# நாலடியார்



இது

சென்னைக் கிறித்தவ கலாசாலைத்

தமிழாசிரியர்

வா. மகாதேவ முதலியார் அவர்கள்

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி & சென்னை.
ருத்ரோத்காரி௵ மாசி௴

# பொருளடக்கம்

# முகவுரை

‘ஒண்டீந் தமிழ்,’ ‘பாலேய் தமிழ்,’ ‘பாட்டியற் றமிழ்,’ ‘மருவு வாய்மை வண்டமிழ்,’ ‘தண்டமிழ்,’ ‘பொங்கு தமிழ்,’ ‘முத்து முத்தமிழ்,’ ‘தமிழெழு மளப்பருஞ் சலதி’ யென ஆன்றோர் உற்ற துரைத்த பெற்றிமை சான்ற நற்றமிழ் நற்றமிழாமாறு ஆராய்ந்து வளர்த்த மதுரைச் சங்கங்கள் தலை, இடை, கடை யென மூன்று மென்ப. அவற்றுள் ஒவ்வொன்றி னின்றும் வெளிப்போந்த அரிய பெரிய நூல்கள் பற்பல. அவற்றுள்; தலைச் சங்க நூலொன்றேனு மிஞ்ஞான் றிலது, இடைச் சங்க நூல்களுள் ‘தொல்காப்பியம்’ ஒன்றுமே யுளது, கடைச் சங்க நூல்களுட் பல வுள.

வகை இப் பலவற்றுள்; மேற்கணக்கு நூல்களும், கீழ்க் கணக்கு நூல்களும் அடங்குவ. அவற்றுள், கீழ்க் கணக்கு நூல்கள் பதினெட் டென்ப. அதனை,

‘நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூல
இன்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு’

என்னும் பாவா னறிந்து கொள்க. இவை கீழ்க்கணக்கு நூலாய தென்னை யெனின், ஐந்தடியி னேறாத செய்யுட்கள் அறம் பொருள் இன்பங்கட் கிலக்கணங் கூறும்வழிப் பிற பொருளும் இடை யிடை தாவிச் செல்லச் சிலவெழுத்தாற் சிலவாக வருதலின்;

‘அடிநிமிர் வில்லாச் செய்யுட் டொகுதி
யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வகைத்
திறம்பட வருவது கீழ்க்கணக் காகும்’

என்னும் பன்னிரு பாட்டியற் சூத்திரத்தானும்,

‘வனப்பிய றானே வகுக்குங் காலைச்
சின்மென் மொழியாற் றாய பனுவலோ
டம்மை தானே யடிநிமிர் வின்றே’

என்னுந் தொல்காப்பியம் பொருளதிகாரம் செய்யுளியல் 23[illegible]-வது சூத்திரத்தாலும் அதற்குப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் வரைந்த வுரையாலுந் தெளிக வென்க. இக் கீழ்க்கணக்கு நூல்களையே ‘தாய பனுவல்’ எனவுங் கூறுப.

இவை பதினெட்டனு ளொன்று ‘நாலடி நானூறு’ எனவும் ‘நாலடியார்’ எனவும் வழங்கு மிந்நூல். அறம், பொருள், இன்பம் பற்றிச் சிலவாய மெல்லிய மொழிக ளான் ஐந்தடியி னேறாது நானூறு வெண்பாக்களி னமைத லின், இது கீழ்க்கணக்குநூ லாயினமை காண்க.

பெயர்க் காரணம்

நாலடி ’ என்பது ‘நான்காகிய அடிகளை யுடையது’ என விரிந்து வெண்பாவிற்குப் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெய ராய்; அதன்மேலும், வெண்பாவா னியன்ற நூற்குக் கருவி யாகுபெயராயிற் றென்க. ஆர் ’ என்பது சிறப்புப்பற்றி வந்த விகுதியாமென் றுணர்க.

வரலாறு

வற்கடஞ் சென்றமையின், அவரவர்க் குரிய நாட்டினை விட்டுப் பாண்டி நாடு புக்க எண்ணாயிரஞ், சமண முனிவர் களை வரவேற்று உக்கிரப் பெருவழுதி யென்பான் உண்டி உறையுள் முதலியன உதவிப் புரந்தனன். அவரவர் நாடு செழிப்புற்றமை தெரிந்தது. அம் முனிவர்கள் தத்தம் நாடு செல்லப் புரிந்து அரசனைத் தமக்கு விடை தருமாறு பன்முறை வேண்ட அவன் கல்வி யறி வொழுக்கங்களிற் சிறந்த அவரைப் பிரிய மனமின்றி விடை தாரா திருந்தனன். அஃதறிந்த முனிவர்கள் தலைக் கொரு பாவாக எண்ணாயிரம் பாக்க ளியற்றித் தத்தம

# முகவுரை

இருக்கையின் கீழிட்டுப் பிறர் அறியா வண்ணம் இரவின்கண் மதுரை நீங்கிச் சென்றனர். மறுநாட் காலை யரசன் அம் முனிவர்களைக் காணாது கவலை கொண்டு அவர்களிருக்கைகளை ஆராய்ந்துழி அவரவர் இருக்கையின் கீழ் ஒவ்வொரு பா வரைந்த ஏடு இருக்கக் கண்டு ஒன்றற் கொன்று ஒப்பு நோக்க ஒன்றோடொன்று கருத்து வகையான் ஒவ்வாமை யுணர்ந்து அவற்றை வையையாற்றின் எறியுமாறு ஏவினன். எறியுண்ட ஏடுகளுள் நானூறு எதிரேறிக் கரை சேர்ந்தன. அங்ஙனஞ் சேர்ந்தமை கேட்டு மன்னன் வியந்து அவற்றைத் திரட்டி ஒரு நூலாக்கி 'நாலடியார்' எனப் பெயர் புனைந்தனன்.

மன்னன் வழுதியர்கோன் வையைப்பே ராற்றின்
எண்ணா யிருநான்கோ டாயிரவ—ருண்ணி
யெழுதியிடு மேட்டி லெதிரே நடந்த
பழுதிலா நாலடியைப் பார்'

என்னும் வெண்பா இதற்குச் சான்று பகர்தல் காண்க.

பதுமனா ரென்பார் இந்நூலை மூன்று பால் பதினொ ரியல் நாற்பது அதிகாரம் ஆகப் பாகுபடுத்தா ரென்ப.

**பாகுபாடு**

அவர் அவற்றைத் தக்க காரணங் கொண்டே ஒரு முறையின் வைத்தா ரென்பது அங்கையி னெல்லியாம். அங்ஙனமாக, அவர் முறை பொருந்தா முறை யென்பர் ஒரு சிலர். பாயசம் பருகிப் பின் உண்ணப் புகுவாரு முலகி லுண்டாகலின், அவருரை வெற்றுரை யென விடுக்க. சில அதிகாரங்களில் அவற்றிற் குரிய பொருட் கேலாப் பாக்கள் தோன்றுகின்றன. இந் நூல் பல்லோ ரியற்றிய தொன் றாகலின், இத்துணைப் பொருட் பொருத்தமுற அமைந்ததே வியப்பென் றமைக. இனி, இப் பதுமனா ரென்பார் இந் நூற்கு ஓரிய வுரையும் வகுத்தன ரென்ப.

**காலம்** இந் நூற் காலம் கடைச் சங்க காலமென்பதற் கைய மின்று. இக் காலத்து ஆராய்ச்சி வல்லார் அஃது இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் என்ப.

‘ஆலும் வேலும் பல்லுக் குறுதி
நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி’

‘பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில்’

‘வெள்ளாண் மரபுக்கு வேத மெனச்சான்றோ
ரெல்லாருங் கூடி யெடுத் துரைத்த—சொல்லாய்ந்த
நாலடி நானூறு நன்கினிதா வென்மனத்தே
சீலமுட னிற்க தெளிந்து’

**சீர்** என்னும் பின்னோர் கொள்கைகளான் நூற் பெருமை இனிது விளங்குதல் காண்க.

விழுமிய சொல்லும், கெழுமிய பொருளுங் கொண்டு; செறிவு, தெளிவு முதலிய குணங்களும் தன்மை நவிற்சி, உவமை முதலிய அணிகளும் நிரம்பி; ஆண்மகன் தேடத் தக்கன வாகிய அறம் பொரு ளின்பம் வீடென்னும் நாற் பொருளையும் நன்கு விரிக்கும் இந் நூலின் சீர் கண்டன்றோ இதனைப் பாடங் கேட்டு நூலாக்கினர் தமிழகத்துப் பெரியார்.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தார் விரும்பியவாறு யான் இதற்கு ஓர் ‘அரும்பொருள் விளக்கம்’ எழுதினன். அதன்கட் குறை யேனுங் குற்றமேனுங் காணப்படின், அறிவுடை யுலகம் அவற்றைப் பாராட்டாது கொள்ளுமாறு வேண்டுகின்றனன்.

வா. ம.

# நாலடியார்

---

கடவுள் வாழ்த்து

நேரிசை வெண்பா

வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை—யாநிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று.

---

## க. அறத்துப்பால்

### க. துறவறவியல்

---

### முதல் அதிகாரம்—செல்வ நிலையாமை

அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கியுண் டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்.

தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா
வீழா விறக்கு மிவண்மாட்டுங்—காழிலா
மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகுந் தன்கைக்கோ
லம்மனைக்கோ லாகிய ஞான்று. (கச)

எனக்குத்தா யாகியா ளென்னையீங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றா—டனக்குத்தா
யாகி யவளு மதுவானாற் றாய்த்தாய்க்கொண்
டேகு மளித்திவ் வுலகு (கரு)

வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள குண்டன்ன மன்னு மகிழ்ச்சி
யறிவுடை யாளர்க ணில் (கசு)

பனிபடு சோலைப் பயன்மர மெல்லாங்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை—நனிபெரிதும்
வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளுங்
கோற்கண்ண ளாகுங் குனிந்து. (கஎ)

பருவ மெனைத்துள பல்லின்பா லேனை
யிருசிகையு முண்டீரோ வென்று—வரிசையா
னுண்ணுட்டங் கொள்ளப் படுதலால் யாக்கைக்கோ
ளெண்ணு ரறிவுடை யார். (கஅ)

மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா
னற்கா யுதிர்தலு முண்டு. (ககூ)

ஆட்பார்த் துழலு மருளில்கூற் றுண்மையாற்
றோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின்—பீட்பிதுக்கிப்
பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன்
கள்ளங் கடைப்பிடித்த லன்று. (௨௰)

---

## ௩ - ஆம் அதி.—யாக்கைநிலையாமை

மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத் தில். (௨௧)

வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅ தெழுதலால்—வாழ்நா
ளுலவாமு னொப்புர வாற்றுமின் யாரு
நிலவார் நிலமிசை மேல். (௨௨)

மன்றங் கறங்க மணப்பறை யாயின
அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
ஒலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம். (௨௩)

சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுண் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து. (௨௪)

கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னு முணர்வினாற் சாற்றுமே
டொண்டொண்டொ வென்னும் பறை. (உரு)

நார்த்தொடுத் தீர்க்கிலென் னன்றாய்த் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக் கால். (உ௬)

படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல். (உ௭)

யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையா லாய பயன்கொள்க—யாக்கை
மலையாடு மஞ்சுபோற் றோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும். (உ௮)

புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
இன்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப்படுத லால். (உ௯)

கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரான் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து. (௩௰)

## ச - ஆம் அதி.—அறன்வலியுறுத்தல்

அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி
மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத்
தவத்தாற் றவஞ்செய்யா தார். (௩க)

ஆவாநா மாக்கி நசைஇ யறமறந்து
போவாநா மென்னாப் புலைநெஞ்சே—யோவாது
நின்றுஞற்றி வாழ்தி யெனினுநின் வாழ்நாள்கள்
சென்றன செய்வ துரை. (௩உ)

வினைப்பயன் வந்தக்கால் வெய்ய வுயிரா
மனத்தி னழியுமாம் பேதை—நினைத்ததனைத்
தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை யிகந்தொருவு வார். (௩௩)

அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தாற்
பெரும்பய னுமாற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு. (௩ச)

கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர். (௩ரு)

இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம். (௩சு)

மக்களா லாய பெரும்பயனு மாயுங்கா
லெத்துணையு மாற்றப் பலவானுற் றொக்க
வுடம்பிற்கே யொப்புரவு செய்தொழுகா—தும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணப் படும். (௩எ)

உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும். (௩அ)

வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார். (௩௯)

மான வருங்கல நீக்கி யிரவென்னு
மீன விளிவினால் வாழ்வேன்ம—னீனத்தா
லூட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின். (௪0)

---

## ரு - ஆம் அதி.—தூய்தன்மை

மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர்
நோக்கார்கொ னொய்யதோர் துச்சிலை*—யாக்கைக்கோ
ரீச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல். (௪௧)

* புக்கிலை எனவும் பாடம்.

தோற்போர்வை மேலுந் தொளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானுன்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும். (சஉ)

தக்கோலந் தின்று தலைநிறையப் பூச்சூடிப்
பொய்க்கோலஞ் செய்ய வொழியுமே—யெக்காலு
முண்டி வினையு ளுறைக்கு மெனப்பெரியோர்
கண்டுகை விட்ட மயல். (சங)

தெண்ணீர்க் குவளை பொருகயல் வேலென்று
கண்ணில்புன் மாக்கள் கவற்ற விடுவேனே
உண்ணீர் களைந்தக்கா லுங்குருன் றிட்டன்ன
கண்ணீர்மை கண்டொழுகு வேன். (சச)

முல்லை முகைமுறுவல் முத்தென் றிவைபிதற்றுங்
கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவேனே
எல்லாருங் காணப் புறங்காட் டுதிர்ந்துக்க
பல்லென்பு கண்டொழுகு வேன்.' (சரு)

குடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு தோலு—மிடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்று
ளெத்திறத்தா ளீர்ங்கோதை யாள். (சசு)

ஊறி யுவர்த்தக்க வொன்பது வாய்ப்புலனுங்
கோதிக் குழம்பலைக்குங் கும்பத்தைப்—பேதை
பெருந்தோளி பெய்வளா யென்னுமீப் போர்த்த
கருந்தோலாற் கண்விளக்கப் பட்டு. (சஎ)

மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினைக்—கைவாய்க்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும். (நிகூ)

துன்பமே மீதூரக் கண்டுந் துறவுள்ளா
ரின்பமே காமுறுவ ரேழையர்—இன்ப
மிசைதொறு மற்றத னின்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதா மேல். (கூ0)

---

## எ - ஆம் அதி.—சினமின்மை

மதித்திறப் பாரு மிறக்க மதியா
மிதித்திறப் பாரு மிறக்க—மிதித்தேறி
ஈயுந் தலைமே லிருத்தலா லஃதறிவார்
காயுங் கதமின்மை நன்று. (கூக)

தண்டாச் சிறப்பிற்றம் மின்னுயிரைத் தாங்காது
கண்டுழி யெல்லாந் துறப்பவோ—மண்டி
அடிபெயரா தாற்ற விளிவந்த போழ்தின்
முடிகிற்கு முள்ளத் தவர். (கூஉ

காவா தொருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ்சொ
லோவாதே தன்னைச் சுடுதலா—லோவாதே
ஆய்ந்தமைந்த கேள்வி யறிவுடையா ரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து. (கூங

நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோ—ரோர்த்ததனை
உள்ளத்தா னுள்ளி யுரைத்துரா யூர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாங் கீழ். (கச)

இளையா னடக்க மடக்கங் கிளைபொரு
ளில்லான கொடையே கொடைப்பய—னெல்லா
மொறுக்கு மதுகை யுரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை. (கரு)

கல்லெறிந் தன்ன கயவர்வா யின்னாச்சொ
லெல்லாருங் காணப் பொறுத்துய்ப்ப—ரொல்லை
இடுநீற்றாற் பையவிந்த நாகம்போற் றத்தங்
குடிமையான் வாதிக்கப் பட்டு. (கசு)

மாற்றாராய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
ஆற்றாமை யென்னா ரறிவுடையா—ராற்றாமை
நேர்த்தின்னா மற்றவர் செய்தக்காற் றாமவரைப்
பேர்த்தின்னா செய்யாமை நன்று. (கஎ)

நெடுங்கால மோடினு நீசர் வெகுளி
கெடுங்கால மின்றிப் பரக்கு—மடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போற் றானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம். (கஅ)

உபகாரஞ் செய்ததனை யோராதே தங்க
ணபகார மாற்றச் செயினு—முபகாரந்
தாஞ்செய்வ தல்லாற் றவற்றினாற் றீங்கூக்கல்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கில். (கக)

கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்க டம்வாயான் மீட்டு. (எ0)

---

## உ. இல்லறவியல்

---

### அ - ஆம் அதி.—பொறையுடைமை

கோதை யருவிக் குளிர்வரை நன்னாட
பேதையோ டியாது முரையற்க—பேதை
உரைப்பிற் சிதைந்துரைக்கு மெல்லும் வகையான்
வழுக்கிக் கழிதலே நன்று. (எக)

நேரல்லார் நீரல்ல சொல்லியக்கான் மற்றது
தாரித் திருத்த றகுதிமற்—றோரும்
புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலஞ்
சமழ்மையாக் கொண்டு விடும். (எஉ)

காதலார் சொல்லுங் கடுஞ்சொ லுவந்துரைக்கு
மேதிலா ரின்சொலிற் றீதாமோ—போதெலா
மாதர்வண் டார்க்கு மலிகடற் றண்சேர்ப்ப
ஆவ தறிவார்ப் பெறின். (எரு)

அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
உறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனா
லின்புற்று வாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந்
துன்புற்று வாழ்த லரிது. (எச)

வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்காற்
றேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயி
னாற்றுந் துணையும் பொறுக்க பொறானாயிற்
றூற்றாதே தூர விடல். (எரு)

இன்னா செயினு மினிய வொழிகென்று
தன்னையே தானோவி னல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ள லரிது. (எசு)

பெரியார் பெருநட்புக் கோடறாஞ் செய்த
அரிய பொறுப்பவென் றன்றோ—அரியரோ
ஒல்லெ னருவி யுயர்வரை நன்னாட
நல்லசெய் வார்க்குத் தமர். (எஎ)

வற்றிமற் றாற்றப் பசிப்பினும் பண்பிலார்க்
கற்ற மறிய வுரையற்க—வற்ற
மறைக்குந் துணையார்க் குரைப்பவே தம்மைத்
துறக்குந் துணிவிலா தார். (எஅ)

இன்பம் பயந்தாங் கிழிவு தலைவரினு
மின்பத்தின் பக்க மிருந்தைக்க—வின்ப
மொழியாமை கண்டாலு மோங்கருவி நாட
பழியாகா வாறே தலை. (எகூ)

தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பி
னூன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல். (அய)

---

முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கு நோயுள—கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து. (கஉ)

நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால். (கந)

இம்மி யரிசித் துணையானும் வைகலு
நும்மி லியைவ கொடுத்துண்மின்—னும்மைக்
கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்
தடாஅ வடுப்பி னவர். (கச)

மறுமையு மிம்மையு நோக்கி யொருவர்க்
குறுமா றியைவ கொடுத்தல்—வறுமையா
லீத லிசையா தெனினு மிரவாமை
யீத லிரட்டி யுறும். (கரு)

நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்க
ளிடுகாட்டு ளேற்றைப் பனை. (கசு)

பெயற்பான் மழைபெய்யாக் கண்ணு முலகஞ்
செயற்பால செய்யா விடினுங்—கயற்புலால்
புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப
வென்னை யுலகுய்யு மாறு. (கஎ)

ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம்வரையா
ராற்றுதார்க் கேதா மாண்கட—னாற்றின்
மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகட னென்னும் பெயர்த்து. (௯௮)

இறப்பச் சிறிதென்னா தில்லென்னா தென்று
மறப்பயன் யார்மாட்டுஞ் செய்க—முறைப்புதவி
னையம் புகூஉந் தவசி கடிஞைபோற்
பைய நிறைத்து விடும். (௯௯)

கடிப்பிடு கண்முரசங் காதத்தோர் கேட்ப
ரிடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்ப
ரடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல். (௱)

## ௧௧ - ஆம் அதி.—பழவினை

பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. (௱௧)

உருவு மிளமையு மொண்பொருளு முட்கு
மொருவழி நில்லாமை கண்டு—மொருவழி
யொன்றேயு மில்லாதான் வாழ்க்கை யுடம்பிட்டு
நின்றுழிஞ் தக்க துடைத்து. (௱௨)

வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
அளந்தன போக மவரவ ராற்றான்
விளங்காய் திரட்டினா ரில்லைக் களங்கனியைக்
காரெனச் செய்தாரு மில். (௱௩)

உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா
பெறற்பா லனையவு மன்னவா மாரி
வறப்பிற் றருவாரு மில்லை யதனைச்
சிறப்பிற் றணிப்பாரு மில். (௱௪)

இனைத்துணைய ராகித்தந் தேசுள் ளடக்கிப்
பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்
நினைப்பக் கிடந்த தெவனுண்டா மேலை
வினைப்பய னல்லாற் பிற. (௱௫)

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவுங்
கல்லாதார் வாழ்வ தறிதிரேற்—கல்லாதார்
சேதன மென்னுமச் சேறகத் தின்மையாற்
கோதென்று கொள்ளாதாங் கூற்று. (௱௬)

இடும்பைகூர் நெஞ்சத்தா ரெல்லாருங் காண
நெடுங்கடை நின்றுழல்வ தெல்லா—மடம்பம்பூ
அன்னங் கிழிக்கு மலைகடற் றண்சேர்ப்ப
முன்னை வினையாய் விடும். (௱௭)

அறியாரு மல்ல ரறிவ தறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல்—வளியோடி
நெய்த னறவுயிர்க்கு நீள்கடற் றண்சேர்ப்ப
செய்த வினையான் வரும். (௱௮)

ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு மெத்துணையும்
வேண்டார்மற் றியாவிழைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது. (௱௯)

சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
உறுகாலத் தூற்றாகா வாமிடத்தே யாகுஞ்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனால்
இறுகாலத் தென்னை பரிவு. (௱ய)

---

## கஉ - ஆம் அதி.—மெய்ம்மை

இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து. (௱கக)

தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
எக்காலுங் குன்ற விலராவ—ரக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு. (௱கஉ)

காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவ—ரேலா
இடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட
தொடர்புடையே மென்பார் சிலர். (௱கங)

வடுவிலா வையத்து மன்னிய மூன்றி
னடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தாதா னெய்தும் உலைப்பெய்
தடுவது போலுந் துயர். (௱கச)

நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல். (௱கரு)

இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார்—தடங்கண்ணா
யுப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறா பேய்ச்சுரையின் காய். (௱கசு)

தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
என்னை யவரொடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
உறற்பால யார்க்கு முறும். (௱கஎ)

ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போ
லொருதன்மைத் தாகு மறநெறி யாபோ
லுருவு பலகொள லீங்கு. (௱கஅ)

யாஅ ருலகத்தோர் சொல்லில்லார் தேருங்கால்
யாஅ ருபாயத்தின் வாழாதார்—யாஅ
ரிடையாக வின்னாத தெய்தாதார் யாஅர்
கடைபோகச் செல்வமுய்த் தார். (௱ககூ)

தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு செல்வதுமற்
றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை—யாங்குத்தாம்
போற்றிப் புனைந்த வுடம்பும் பயமின்றே
கூற்றங்கொண் டோடும் பொழுது. (௩௨௰)

## கரு - ஆம் அதி.—தீவினையச்சம்

துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்குங் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு. (௩௨௧)

இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளாய்க்
கரும்பார் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்குங்
காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும்பூழுங்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார். (௩௨௨)

அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—யக்கா
லலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். (௩௨௩)

நெருப்புழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉ
மெரிப்பச்சுட் டெவ்வநோ யாக்கும்—பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோடாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து. (௩௨௪)

பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு. (௱உ௫)

சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்க ணில்லாயிற்—சார்ந்தோய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்ட துடைத்து. (௱உ௬)

யாஅ ரொருவ ரொருவர்த முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர்—சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு. (௱உ௭)

உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும். (௱உ௮)

ஒக்கிய வொள்வாடன் னொன்னார்கைப் பட்டக்கா
லூக்க மழிப்பதூஉ மெய்யாகு—மாக்க
மிருமையுஞ் சென்று சுடுதலா னல்ல
கருமமே கல்லார்கட் டீர்வு. (௱உ௯)

மனைப்பாசங் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
யெனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே—யெனைத்துஞ்
சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா
லுறுபயனோ வில்லை யுயிர்க்கு. (௱௩௰)

அறத்துப்பால் முற்றும்.

# ௨. பொருட்பால்

## ௧. அரசியல்

---

### ௧௪-ஆம் அதி.—கல்வி

குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு. (௱௩௧)

இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து. (௱௩௨)

களர்நிலத் துப்பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும். (௱௩௩)

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வா
ரெச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற. (௱௩௪)

கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதி
னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து. (௱௩௫)

தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்—காணா
யவன்றுணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல். (௱௩௬)

தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி. (௱௩௭)

கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீரமி லாளர் தொடர்பு. (௱௩௮)

கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி
னல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பி
னொண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. (௱௩௯)

அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில். (௱௪௰)

## க௫ - ஆம் அதி.—குடிப்பிறப்பு

உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றா
ரிடுக்கண் டலைவந்தக் கண்ணு மரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று. (௱௪௧)

சான்றாண்மை சாய லொழுக்க மிவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது—வான்றோயு
மைதவழ் வெற்ப படாஅ பெருஞ்செல்வ
மெய்தியக் கண்ணும் பிறர்க்கு. (௱௪௨)

இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று. (௱௪௩)

நல்லவை செய்யி னியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகு—மெல்லா
முணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணரு மொருவர்க் கெனின். (௱௪௪)

கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச—மெல்லா
மிரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார். (௱௪௫)

இனநன்மை யின்சொலொன் றீதன்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
குடிப்பிறந்தார் கண்ணே யுள. (௱௪௬)

செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்
பெய்யா வொருசிறை பேரி லுடைத்தாகு
மெவ்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை. (௱௪௭)

ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போற்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார். (௱௪௮)

செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்—புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோற்
பொருமுர ணாற்றுத லின்று. (௱௪௯)

எற்றொன்று மில்லா விடத்துங் குடிப்பிறந்தா
ரற்றத்தற் சேர்ந்தார்க் கசைவிடத்—தூற்றுவ
ரற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்காற்
றெற்றெனத் தெண்ணீர் படும். (௱௫௰)

---

## ௧௬ - ஆம் அதி.—மேன்மக்கள்

அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின். (௱௫௧)

இசையு மெனினு மிசையா தெனினும்
வசைதீர வெண்ணுவர் சான்றோர்—விசையி
னரிமா வுளங்கிழித்த வம்பினிற் றீதோ
வரிமாப் பிழைப்பெய்த கோல். (௩௬உ)

நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறார்—உரங்கவறா
உள்ளமெனு நாரினாற் கட்டி யுளவரையாற்
செய்வர் செயற்பா லவை. (௩௬௩)

செல்வுழிக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர்
தொல்வழிக் கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்
நல்வரை நாட சிலநா ளடிப்படிற்
கல்வரையு முண்டா நெறி. (௩௬௪)

புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்
பல்லாரு ணாணல் பரிந்து. (௩௬௫)

கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து. (௩௬௬)

கள்ளார்கள் ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர். (௩௬௭)

செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்
பெய்யா வொருசிறை பேரி லுடைத்தாகு
மெவ்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை. (௱௪௭)

ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போற்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார். (௱௪௮)

செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்—புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோற்
பொருமுரண் ணாற்றுத லின்று. (௱௪௯)

எற்றொன்று மில்லா விடத்துங் குடிப்பிறந்தா
ரற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத்—தூற்றுவ
ரற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்காற்
றெற்றெனத் தெண்ணீர் படும். (௱௫௰)

---

## ௧௬ - ஆம் அதி.—மேன்மக்கள்

அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கள்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின். (௱௫௧)

இசைய வெனினு மிசையா தெனினும்
[illegible] வெண்ணுவர் சான்றோர்—விசையி
னரிமா வுளங்கிழித்த வம்பினிற் றீதோ
வரிமாப் பிழைப்பெய்த கோல். (௱௫௨)

நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறார்—உரங்கவறா
உள்ளமெனு நாரினாற் கட்டி யுளவரையாற்
செய்வர் செயற்பா லவை. (௱௫௩)

செல்வழிக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர்
தொல்வழிக் கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்
நல்வரை நாட சிலநா ளடிப்படிற்
கல்வரையு முண்டா நெறி. (௱௫௪)

புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்
பல்லாரு ணாணல் பரிந்து. (௱௫௫)

கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
இடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து. (௱௫௬)

கள்ளார்கள் ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர். (௱௫௭)

பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல் யாது
மறங்கூற வேண்டா வவற்கு. (௱௫௮)

பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை
யென்னானும் வேண்டுப வென்றிகழ்ப—வென்னானும்
வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு. (௱௫௯)

உடைய ரிவரென் றொருதலையாப் பற்றிக்
கடையாயார் பின்சென்று வாழ்வ—துடைய
பிலந்தலைப் பட்டது போலாதே நல்ல
குலந்தலைப் பட்ட விடத்து. (௱௬௰)

---

## ௧௭ - ஆம் அதி.—பெரியாரைப்பிழையாமை

பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபி
னார்க்கு மருவி யணிமலை நன்னாட
பேர்க்குதல் யார்க்கு மரிது. (௱௬௧)

பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்து—மன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமி லறிவி னவர். (௱௬௨)

அவமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு
மிகைமக்க ளான்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார். (௱௬௩)

விரிநிற நாகம் விடருள தேனு
முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கு
மருமை யுடைய வரண்சேர்ந்து முய்யார்
பெருமை யுடையார் செறின். (௱௬௪)

எம்மை யறிந்திலி ரெம்போல்வா ரில்லென்று
தம்மைத்தாங் கொள்வது கோளன்று—தம்மை
அரியரா நோக்கி யறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள். (௱௬௫)

நளிகடற் றண்சேர்ப்ப நாணிழற் போல
விளியுஞ் சிறியவர் கேண்மை—விளிவின்றி
அல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு. (௱௬௬)

மன்னர் திருவு மகளி ரெழினலமுந்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா—துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லா
முழைதங்கட் சென்றார்க் கொருங்கு. (௱௬௭)

தெரியத் தெரியுந் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர்நோய் செய்யும்—பெரிய
உலவா விருங்கழிச் சேர்ப்பயார் மாட்டுங்
கலவாமை கோடி யுறும். (௱௬௮)

கல்லாது போகிய நாளும் பெரியவர்கட்
செல்லாது வைகிய வைகலு—மொல்வ
கொடாஅ தொழிந்த பகலு முரைப்பிற்
படாஅவாம் பண்புடையார் கண். (௱௬௯)

பெரியார் பெருமை சிறுதகைமை யொன்றிற்
குரியா ருரிமை யடக்கம்—தெரியுங்காற்
செல்வ முடையாருஞ் செல்வரே தற்சேர்ந்தா
ரல்லல் களைப வெனின். (௱௭௰)

---

## ௧௮ - ஆம் அதி.—நல்லினஞ்சேர்தல்

அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வு—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு. (௱௭௧)

அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல். (௱௭௨)

அடைந்தார்ப் பிரிவு மரும்பிணியுங் கேடு
முடங்குடம்பு கொண்டார்க் குறலாற்—றொடங்கிப்
பிறப்பின்னா தென்றுணரும் பேரறிவி னாரை
யுறப்புணர்க வம்மாவென் னெஞ்சு. (௱௭௩)

இறப்ப நினையுங்கா லின்னா தெனினும்
பிறப்பினை யாரு முனியார்—பிறப்பினுட்
பண்பாற்று நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்று
நண்பாற்றி நட்கப் பெறின். (௱௭௪)

ஊரங் கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்காற்
பேரும் பிறிதாகித் தீர்த்தமா—மோருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து. (௱௭௫)

ஒண்கதிர் வாண்மதியஞ் சேர்தலா லோங்கிய
அங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉங்
குன்றிய சீர்மைய ராயினுஞ் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின். (௱௭௬)

பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றாதாந்—தேரிற்
சிறியார் சிறுமையுந் தோன்றாதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. (௱௭௭)

கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபு
லொல்காவே யாகு முழவ ருழுபடைக்கு
மெல்லியரே யாயினு நற்சார்வு சார்ந்தார்மேற்
செல்லாவாஞ் செற்றார் சினம். (௱௭௮)

நிலநலத்தா னந்திய நெல்லேபோற் றத்தங்
குலநலத்தா லாகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும். (௱௭௯)

மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபனந் தீப்பட்டக் கால். (௱அ௰)

---

## ௧௧ - ஆம் அதி.—பெருமை

ஈத லிசையா திளமைசே ணீங்குதலாற்
காத லவருங் கருத்தல்லர்—காதலித்
தா தூஉ மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள். (௱அக)

இற்சார்வி னேமாந்தே மீங்கமைந்தே மென்றெண்ணிப்
பொச்சாந் தொழுகுவர் பேதையார்—அச்சார்வு
நின்றன போன்று நிலையா வெனவுணர்ந்தா
ரென்றும் பரிவ திலர். (௱அ௨)

மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து
சிறுமைப் படாதேநீர் வாழ்மின்—அறிஞராய்
நின்றுழி நின்றே நிறம்வேறுங் காரண
மின்றிப் பலவு முள. (௱அ௩)

உறைப்பருங் காலத்து மூற்றுநீர்க் கேணி
யிறைத்துணினு மூராற்று மென்பர்—கொடைக்கடனுஞ்
சாஅஅயக் கண்ணும் பெரியார்போன் மற்றையா
ராஅஅயக் கண்ணு மரிது. (௱அ௪)

உறுபுன றந்தல கூட்டி யறமிடத்துங்
கல்லூற் றுழியூறு மாறேபோற்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணுஞ் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை. (௱அரு)

பெருவரை நாட பெரியார்கட் டீமை
கருநரைமேற் சூடேபோற் றோன்றுங்—கருநரையைக்
கொன்றன்ன வின்னா செயினுஞ் சிறியார்மே
லொன்றூனுந் தோன்றாக் கெடும். (௱அசு)

இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட்
பசைந்த துணையும் பரிவா—மசைந்த
நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கட்
பகையேயும் பாடு பெறும். (௱அஎ)

மெல்லிய நல்லாருண் மென்மை யதுவிறந்
தொன்னாருட் கூற்றுட்கு முட்குடைமை யெல்லாஞ்
சலவருட் சாலச் சலமே நலவரு
ணன்மை வரம்பாய் விடல். (௱அஅ)

கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினு மனப்பிரிப்பொன் றின்றித்
துளக்க மிலாதவர் தூய மனத்தார்
விளக்கினு ளொண்சுடரே போன்று. (௱அகூ)

முற்றுத்துந் துத்தினை நாளு மறஞ்செய்து
பிற்றுத்துத் துத்துவர் சான்றவ—ரத்துத்து
மூக்குற்ற நீக்கி முடியு மளவெல்லாந்
துக்கத்து ணீக்கி விடும். (௱கூ0)

---

## உ௨ - ஆம் அதி.—தாளாண்மை

கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போற்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளா ளர்க் குண்டோ தவறு. (௱௯௧)

ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉங்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றான்
றாழ்வின்றித் தன்னைச் செயின். (௱௯௨)

உறுபுலி யூனிரை யின்றி யொருநாட்
சிறுதேரை பற்றியுந் தின்னு—மறிவினாற்
காற்றொழி லென்று கருதற்க கையினான்
மேற்றொழிலு மாங்கே மிகும். (௱௯௩)

இசையா தெனினு மியற்றியோ ராற்ற
லசையாது நிற்பதா மாண்மை—யிசையுங்கால்
கண்ட திரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று. (௱௯௪)

நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லைத்—தொல்சிறப்பி
னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
என்றிவற்றா னாகுங் குலம். (௱௯௫)

ஆற்றுந் துணையு மறிவினை யுள்ளடக்கி
யூக்க முரையா ருணர்வுடையா—ரூக்க
முறுப்பினா லாராயு மொண்மை யுடையார்
குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு. (௱௯௬)

சிதலை தினப்பட்ட வால மரத்தை
முதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்றான் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும். (௱௯௭)

ஈனமா யில்லிருந் தின்றி விளியினு
மானந் தலைவருவ செய்பவோ—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றா
ளரிமா மதுகை யவர். (௱௯௮)

தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்—கோங்கு
முயர்குடி யுட்பிறப்பி னென்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை. (௱௯௯)

பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
கருனைச்சோ றார்வர் கயவர்—கருனையைப்
பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரு மமிழ்தாய் விடும். (௨௱)

## ௨. நட்பியல்

### ௨௧-ஆம் அதி.—சுற்றந்தழால்

வயாவும் வருத்தமு மீன்றக்கா லேவுங்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்
கசாஅத்தா னுற்ற வருத்த முசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும். (௨௱௧)

அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா
நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போற்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் ம ற்குக் கடன். (உ௱உ)

அடுக்கன் மலைநாட தற்சேர்ந் தவரை
யெடுக்கல மென்னார் பெரியோர்—ரடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினு மில்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு. (உ௱௩)

உலகறியத் தீரக் கலப்பினு நில்லா
சிலபகலாஞ் சிற்றினத்தார் கேண்மை—நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்தா
லொற்கமி லாளர் தொடர்பு. (உ௱௪)

இன்ன ரினைய ரெமர்பிற ரென்னுஞ்சொ
லென்னு மிலரா மியல்பினாற்—றுன்னித்
தொலைமக்க டுன்பந்தீர்ப் பாரேயார் மாட்டுந்
தலைமக்க ளாகற்பா லார். (உ௱௫)

பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்க
லக்காரம் பாலோ டமரார்கைத் துண்டலி
னுப்பிலிப் புற்கை யுயிர்போற் கிளைஞர்மாட்
டெக்கலத் தானு மினிது. (உ௱௬)

நாள்வாய்ப் பெறினுந்தந் நள்ளாதா ரில்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்—கேளா
அபரானப் போழ்தி னடகிடுவ ரேனுந்
தமராயார் மாட்டே யினிது. (உ௱௭)

முட்டிகை போல முனியாது வைகலுங்
கொட்டியுண் பாருங் குறடுபோற் கைவிடுவர்
சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே
நட்டா ரெனப்படு வார். (௨௱௮)

நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ—விறுமளவு
மின்புறுவ வின்புற் றெழீஇ யவரோடு
துன்புறுவ துன்புறுக் கால். (௨௱௯)

விருப்பிலா ரில்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வா ரில்லுட் டயங்குநீர்த் தண்புற்கை
யென்போ டியைந்த வமிழ்து. (௨௱௰)

## ௨௨ - ஆம் அதி.—நட்பாராய்தல்

கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றுங்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்
கெதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ வென்று
மதுரமி லாளர் தொடர்பு. (௨௱௧௧)

இற்பிறப் பெண்ணி யிடைதிரியா ரென்பதோர்
நற்புடை கொண்டமை யல்லது—பொற்கேழ்
புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட
மனமறியப் பட்டதொன் றன்று. (௨௱௧௨)

யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லு மெறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கு நாய். (௨௧௩)

பலநாளும் பக்கத்தா ராயினு நெஞ்சிற்
சிலநாளு மொட்டாரோ டொட்டார்—பலநாளு
நீத்தா ரெனக்கை விடலுண்டோ தந்நெஞ்சத்
தியாத்தாரோ டியாத்த தொடர்பு. (௨௧௪)

கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரு நட்பாரு மில். (௨௧௫)

கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை
இடையாயார் தெங்கி னனையர்—தலையாயா
ரெண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு. (௨௧௬)

கழுநீருட் காரட கேனு மொருவன்
விழுமிதாக் கொள்ளி னமிழ்தாம்—விழுமிய
குய்த்துவையார் வெண்சோறே யாயினு மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங் காய். (௨௧௭)

நாய்க்காற் சிறுவிரல்போ னன்கணிய ராயினு
மீக்காற் றுணையு முதவாதார் நட்பென்னுஞ்
சேய்த்தானுஞ் சென்று கொளல்வேண்டுஞ் செய்வினைக்கும்
வாய்க்கா லனையார் தொடர்பு. (௨௧௮)

தெளிவிலார் நட்பிற் பகைநன்று சாதல்
விளியா வருநோயி னன்று—அளிய
இகழ்தலிற் கோற லினிதேமற் றில்ல
புகழ்தலின் வைதலே நன்று. (உகக)

மரீஇப் பலரோடு பன்னாள் முயங்கிப்
பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே வேண்டும்
பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடு மின்னா
மரீஇஇப் பின்னைப் பிரிவு. (உஉ0)

---

## உங-ஆம் அதி.—நட்பிற்பிழைபொறுத்தல்

நல்லா ரெனத்தா நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினு மடக்கிக் கொளல்வேண்டு
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு. (உஉக)

செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டூடார்
மறுத்துஞ் சிறைசெய்வர் நீர்நசைஇ வாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு. (உஉஉ)

இறப்பவே தீய செயினுந்தன் னட்டார்
பொறுத்த றகுவதொன் றன்றோ—நிறக்கோங்
குருவ வண்டார்க்கு முயர்வரை நாட
வொருவர் பொறையிருவர் நட்பு. (உஉங)

மடிதிரை தந்திட்ட வான்கதிர் முத்தங்
கடுவிசை நாவாய் கரையலைக்குஞ் சேர்ப்ப
விடுதற் கரியா ரியல்பிலரே னெஞ்சஞ்
சுடுதற்கு மூட்டிய தீ. (உஉச)

இன்னா செயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு
நல்லிற் சிதைத்ததீ நாடொறு நாடித்த
மில்லத்தி லாக்குத லால். (உஉரு)

இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னாத் துறத்த றகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை. (உஉசு)

இலங்குநீர்த் தண்சேர்ப்ப வின்னா செயினுங்
கலந்து பழிகாணார் சான்றோர்—கலந்தபின்
றீமை யெடுத்துரைக்குந் திண்ணறி வில்லாதார்
தாமு மவரிற் கடை. (உஉஎ)

ஏதிலார் செய்த திறப்பவே தீதெனினு
நோதக்க தென்னுண்டா நோக்குங்கால்—காதல்
கழுமியார் செய்த கறங்கருவி நாட
விழுமிதா நெஞ்சத்து ணின்று (உஉஅ)

தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயி னவரைத்
தமரினு நன்கு மதித்துத் தமரன்மை
தம்முளடக்கிக் கொளல். (உஉகூ)

குற்றமு மேனைக் குணமு மொருவனை
நட்டபி னுடித் திரிவேனே—னட்டான்
மறைகாவா விட்டவன் செல்வழிச் செல்க
அறைகடல்சூழ் வைய நக.		(உருய)

---

## உச - ஆம அதி.—கூடாநட்பு

செறிப்பில் பழங்கூரை சேறணை யாக
விறைத்துநீ ரேற்றுங் கிடப்பர்—கறைக்குன்றம்
பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட
தங்கருமம் முற்றுந் துணை.		(உருக)

சிரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
மாரிபோன் மாண்ட பயத்ததா—மாரி
வறந்தக்காற் போலுமே வாலருவி நாட
சிறந்தக்காற் சீரிலார் நட்பு.		(உருஉ)

நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்றா—லுண்ணு
ணுணர்வில ராகிய வூதிய மில்லார்ப்
புணர்த னிரயத்து ளொன்று.		(உருந)

பெருகுவது போலத் தோன்றிவைத் தீப்போ
லொருபொழுதுஞ் செல்லாதே நந்து—மருகெல்லாஞ்
சந்தனநீள் சோலைச் சாரன் மலைநாட
பந்தமி லாளர் தொடர்பு.		(உருச)

செய்யாத செய்துநா மென்றலுஞ் செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலும்—மெய்யாக
இன்புறூஉம் பெற்றி யிகழ்ந்தார்க்கு மந்நிலையே
துன்புறூஉம் பெற்றி தரும். (உகரு)

ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை யாம்ப லொக்கல்லா
பெருநீரார் கேண்மை கொளினுநீ ரல்லார்
கருமங்கள் வேறு படும். (உகசா)

முற்றற் சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக்கண் டன்ன விரலான் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கு மலைநாட வின்னாதே
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு. (உகஎ)

முட்டுற்ற போழ்தின் முடுகியென் னாருயிரை
நட்டா னொருவன்கை நீட்டேனே—நட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வைய நக. (உகஅ)

ஆன்படு நெய்பெய் கலனு ளதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு. (உககூ)

உருவிற் கமைந்தான்க ணூராண்மை யின்மை
பருகற் கமைந்தபா னீரளா யற்றே
தெரிவுடையார் தீயினத்தா ராகுத னாகம்
விரிபெடையோ டாடிவிட் டற்று. (உஉய)

---

# ந. இன்பவியல்

---

## உரு - ஆம் அதி.—அறிவுடைமை

*பகைவர் பணிவிட நோக்கித் தகவுடையார்*
*தாமேயு நாணித் தலைச்செல்லார் காணா*
*யிளம்பிறை யாயக்காற் றிங்களைச் சேரா*
*தணங்கருந் துப்பி னரா.* (உசக)

*நளிகடற் றண்சேர்ப்ப நல்கூர்ந்த மக்கட்*
*கணிகல மாவ தடக்கம்—பணிவில்சீர்*
*மாத்திரை யின்றி நடக்குமேல் வாழூர்*
*கோத்திரங் கூறப் படும்.* (உசஉ)

*எந்நிலத்து வித்திடினுங் காஞ்சிரங்காழ் தெங்காகா*
*தென்னாட் டவருஞ் சுவர்க்கம் புகுதலாற்*
*றன்னாற்றா னாகு மறுமை வடதிசையுங்*
*கொன்னாளர் சாலப் பலர்.* (உசந)

*வேம்பி னிலையுட் கனியினும் வாழைதன்*
*றீஞ்சுவை யாதுந் திரியாதா—மாங்கே*
*யினந்தீ தெனினு மியல்புடையார் கேண்மை*
*மனந்தீதாம் பக்க மரிது.* (உசச)

*கடல்சார்ந்து மின்னீர் பிறக்கு மலைசார்ந்து*
*முப்பின் றுவரி பிறத்தலாற் றத்த*
*மினத்தனைய ரல்ல ரெறிகடற்றண் சேர்ப்ப*
*மனத்தனையர் மக்களென் பார்.* (உசரு)

செய்யாத செய்துநா மென்றலுஞ் செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலு—மெய்யாக
இன்புறூஉம் பெற்றி யிகழ்ந்தார்க்கு மந்நிலையே
துன்புறூஉம் பெற்றி தரும். (உ௩௫)

ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை யாம்ப லொக்கல்லா
பெருநீரார் கேண்மை கொளினுநீ ரல்லார்
கருமங்கள் வேறு படும். (உ௩௬)

முற்றற் சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக்கண் டன்ன விரலான் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கு மலைநாட வின்னாதே
ஒற்றுமை கொள்ளாதார் நட்பு. (உ௩௭)

முட்டுற்ற போழ்தின் முடுகியென் னாருயிரை
நட்டா னொருவன்கை நீட்டேனே—னட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வைய நக. (உ௩௮)

ஆன்படு நெய்பெய் கலனு ளதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு. (உ௩௯)

உருவிற் கமைந்தான்க ணூராண்மை யின்மை
பருகற் கமைந்தபா னீரளா யற்றே
தெரிவுடையார் தீயினத்தா ராகுத னாகம்
விரிபெடையோ டாடிவிட் டற்று. (உ௪௰)

---

# ௩. இன்பவியல்

---

## ௨௫-ஆம் அதி.—அறிவுடைமை

பகைவர் பணிவிட நோக்கித் தகவுடையார்
தாமேயு நாணித் தலைச்செல்லார் காணா
யிளம்பிறை யாயக்காற் றிங்களைச் சேரா
தணங்கருந் துப்பி னரா. (௨௪௧)

நளிகடற் றண்சேர்ப்ப நல்கூர்ந்த மக்கட்
கணிகல மாவ தடக்கம்—பணிவில்சீர்
மாத்திரை யின்றி நடக்குமேல் வாழுமூர்
கோத்திரங் கூறப் படும். (௨௪௨)

எந்நிலத்து வித்திடினுங் காஞ்சிரங்காழ் தெங்காகா
தென்னாட் டவருஞ் சுவர்க்கம் புகுதலாற்
றன்னாற்றா னாகு மறுமை வடதிசையுங்
கொன்னாளர் சாலப் பலர். (௨௪௩)

வேம்பி னிலையுட் கனியினும் வாழைதன்
றீஞ்சுவை யாதுந் திரியாதா—மாங்கே
யினந்தீ தெனினு மியல்புடையார் கேண்மை
மனந்தீதாம் பக்க மரிது. (௨௪௪)

கடல்சார்ந்து மின்னீர் பிறக்கு மலைசார்ந்து
முப்பீண் டுவரி பிறத்தலாற் றத்த
மினத்தனைய ரல்ல ரெறிகடற்றண் சேர்ப்ப
மனத்தனையர் மக்களென் பார். (௨௪௫)

பாரறுரைப் புன்னை படுகடற்றண் சேர்ப்ப
ஓராறு மொட்டலுஞ் செய்பவோ நல்ல
மரூஉச்செய்தி யார்மாட்டுந் தங்கு மனத்தார்
விராஅஅய்ச் செய்யாமை நன்று. (௨௪௬)

உணர வுணரு முணர்வுடை யாரைப்
புணரப் புணருமா மின்பம்—புணரின்
றெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமா நோய். (௨௪௭)

நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு—நிலையினு
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான். (௨௪௮)

கரும வரிசையாற் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாருஞ் சேற—லருமரபி
னோத மாற்று மொலிகடற் றண்சேர்ப்ப
பேதைமை யன்ற தறிவு. (௨௪௯)

கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கே செய்யா—வொருநிலையே
முட்டின்றி மூன்று முடியுமே லஃதென்ப
பட்டினம் பெற்ற கலம். (௨௫௰)

## உசு - ஆம் அதி.—அறிவின்மை

நுண்ணுணர் வின்மை வறுமை அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வ—மெண்ணுங்காற்
பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ
கண்ணவாத் தக்க கலம். (உருக)

பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்
தல்ல லுழப்ப தறிதிரேற்—றொல்சிறப்பி
னாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலந்து. (உருஉ)

கல்லென்று தந்தை கழற வதனையோர்
சொல்லென்று கொள்ளா திகழ்ந்தவன்—மெல்ல
எழுத்தோலை பல்லார்முன் னீட்ட விளியா
வழுக்கோலைக் கொண்டு விடும். (உருங)

கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
விருப்பினு நாயிருந் தற்றே யிராஅ
துரைப்பினு நாய்குரைத் தற்று. (உருச)

புல்லாப்புன் கோட்டிப் புலவ ரிடைப்புக்குக்
கல்லாத சொல்லுங் கடையெல்லாங் கற்ற
கடாஅயினுஞ் சான்றவர் சொல்லார் பொருண்மேற்
படாஅ விடுபாக் கறிந்து. (உருரு)

கற்றறிந்த நாவினார் சொல்லார்தஞ் சோர்வஞ்சி
மற்றைய ராவார் பகர்வர் பனையின்மேல்
வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
பச்சோலைக் கில்லை யொலி. (உருசு)

வலவைக ளல்லாதார் காலாறு சென்று
கலவைக ளுண்டு கழிப்பர்—வலவைகள்
காலாறுஞ் செல்லார் கருனையாற் றுய்ப்பவே
மேலாறு பாய விருந்து. (உகூஅ)

பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானங் கடலுள்ளுங் கான்றுகுக்கும்
வெண்மை யுடையார் விழுச்செல்வ மெய்தியக்கால்
வண்மையு மன்ன தகைத்து. (உகூகூ)

ஓதியு மோதா ருணர்விலா ரோதாது
மோதி யனையா ருணர்வுடையார்—தூய்தாக
நல்கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார் செல்வரு
நல்கூர்ந்தா ரீயா ரெனின். (உஎ0)

---

## ச. துன்பவியல்

---

### உஅ-ஆம் அதி.—ஈயாமை

நட்டார்க்கு நள்ளா தவர்க்கு முளவரையா
லட்டது பாத்துண்ட லட்டுண்ட—லட்ட
தடைத்திருந் துண்டொழுகு மாவதின் மாக்கட்
கடைக்குமா மாண்டைக் கதவு. (உஎக)

எத்துணை யானு மியைந்த வளவினாற்
சிற்றறஞ் செய்தார் தலைப்படுவர்—மற்றைப்
பெருஞ்செல்வ மெய்தியக்காற் பின்னறிது மென்பா
ரழிந்தார் பழிகடலத் துள். (உஎஉ)

துய்த்துக் கழியான் றுறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியு மடவோனை—வைத்த
பொருளு மவனை நகுமே யுலகத்
தருளு மவனை நகும். (௨௭௩)

கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்றா விடுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வ மில்லத்
துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தா
லேதிலான் றுய்க்கப் படும். (௨௭௪)

எறிநீர்ப் பெருங்கட லெய்தி யிருந்தும்
மறுநீர்ச் சிறுகிணற் றூறல்பார்த் துண்பர்
மறுமை யறியாதா ராக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. (௨௭௫)

எனதென தென்றிருக்கு மேழை பொருளை
எனதென தென்றிருப்பன் யானுந்—தனதாயிற்
றானு மதனை வழங்கான் பயன்றுவ்வான்
யானு மதனை யது. (௨௭௬)

வழங்காத செல்வரி னல்கூர்ந்தா ருய்ந்தா
ரிழந்தா ரெனப்படுத லுய்ந்தா—ருழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலு முய்ந்தார்தங் கைந்நோவ
யாப்புய்ந்தா ருய்ந்த பல. (௨௭௭)

தனதாகத் தான்கொடான் றாயத் தவருந்
தமதாய போழ்தே கொடாஅர்—தனதாக
முன்னே கொடுப்பி னவர்கடியார் தான்கடியான்
பின்னை யவர்கொடுக்கும் போழ்து. (௨௭௮)

ஆர்த்த பொறிய வணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவா—நீர்த்தருவி
தாழா வுயர்சிறப்பிற் றண்குன்ற நன்னாட
வாழாதார்க் கில்லைத் தமர். (உகூ0)

---

## ருய - ஆம் அதி.—மானம்

திருமதுகை யாகத் திறனிலார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்து—மெரிமண்டிக்
கானந் தலைப்பட்ட தீப்போற் கனலுமே
மான முடையார் மனம். (உகூக)

என்பா யுகினு மியல்பிலார் பின்சென்று
தம்பா டுரைப்பரோ தம்முடையார்—தம்பா
டுரையாமை முன்னுணரு மொண்மை யுடையார்க்
குரையாரோ தாமுற்ற நோய். (உகூஉ)

யாமாயி னெம்மில்லங் காட்டுதுந் தாமாயிற்
காணவே கற்பழியு மென்பார்போ—னாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறு மதனான்
மறந்திடுக செல்வர் தொடர்பு. (உகூரு)

இம்மையு நன்றா மியனெறியுங் கைவிடா
தும்மையு நல்ல பயத்தலாற்—செம்மையி
னானங் கமழுங் கதுப்பினாய் நன்றேகாண்
மான முடையார் மதிப்பு. (உகூச)

பாவமு மேனைப் பழியும் படவருவ
சாயினுஞ் சான்றவர் செய்கலார் சாத
லொருநா ளொருபொழுதைத் துன்ப மவைபோ
லருநவை யாற்றுத லின்று. (௨௯௫)

மல்லன்மா ஞாலத்து வாழ்ப வருளெல்லாஞ்
செல்வ ரெனினுங் கொடாதவர்—நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார். (௨௯௬)

கடையெலாங் காய்பசி யஞ்சுமற் றேனை
இடையெலா மின்னாமை யஞ்சும்—புடைபரந்த
விற்புருவ வேனெடுங் கண்ணாய் தலையெல்லாஞ்
சொற்பழி யஞ்சி விடும். (௨௯௭)

நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தா ரென்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்கால்—கொல்ல
னுலையூதுந் தீயேபோ லுள்கனலுங் கொல்லோ
தலையாய சான்றோர் மனம். (௨௯௮)

நச்சியார்க் கீயாமை நாணன்று நாணு
மச்சத்தா னாணுத னாணன்று—மெச்சத்தின்
மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது
சொல்லா திருப்பது நாண். (௨௯௯)

கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த துண்ணா திறக்கு—மிடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின். (௩௱)

---

## ௩௧ - ஆம் அதி.—இரவச்சம்

நம்மாலே யாவரிந் நல்கூர்ந்தா ரெஞ்ஞான்றுந்
தம்மாலா மாக்க மிலரென்று—தம்மை
மருண்ட மனத்தார்பின் செல்பவோ தாமுந்
தெருண்ட வறிவி னவர். (௩௱௧)

இழித்தக்க செய்தொருவ னார வுணலிற்
பழித்தக்க செய்யான் பசித்த றவறே
விழித்திமைக்கு மாத்திரை யன்றே வொருவ
னழித்துப் பிறக்கும் பிறப்பு. (௩௱௨)

இல்லாமை கந்தா விரவு துணிந்தொருவர்
செல்லாரு மல்லர் சிறுநெறி—புல்லா
அகம்புகுமி னுண்ணுமி னென்பவர்மாட் டல்லான்
முகம்புகுத லாற்றுமோ மேல். (௩௱௩)

திருத்தன்னை நீப்பினுந் தெய்வஞ் செறினு
முருத்த மனத்தோ டுயர்வுள்ளி னல்லா
லருத்தஞ் செறிக்கு மறிவிலார் பின்சென்
றெருத்திறைஞ்சி நில்லா தா மேல். (௩௱௪)

கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணு
மிரவாது வாழ்வதாம் வாழ்க்கை—யிரவினை
உள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ
கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு. (௩௱௫)

இன்னா வியைக வினிய வொழிகென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற்—கென்னைகொல்
காதல் கவற்று மனத்தினாற் கண்பாழ்பட்
டேதி லவரை யிரவு. (௩௱௬

என்றும் புதியார் பிறப்பினு மிவ்வுலகத்
தென்று மவனே பிறக்கலான்—குன்றின்
பாப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட
இரப்பாரை யெள்ளா மகன். (கடாஎ)

புறத்துத்தன் னின்மை நலிய வகத்துத்தன்
னன்ஞான நீக்கி நிறீஇ யொருவனை
ஈயா யெனக்கென் றிரப்பானே லந்நிலையே
மாயானோ மாற்றி விடின். (கடாஅ)

ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுக லாற்றி
வழிபடுதல் வல்லுத லல்லாற்—பரிசழிந்து
செய்யீரோ வென்னு மென்னுஞ்சொற் கின்னாதே
பையத்தான் செல்லு நெறி. (கடாகூ)

பழைமைகந் தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானுஞ் செய்க—கிழமை
பொறாஅ ரவரென்னிற் பொத்தித்தந் நெஞ்சத்
தறாஅச் சுடுவதோர் தீ. (கடாய)

---

## ரு. பொதுவியல்

---

### கஉ - ஆம் அதி.—அவையறிதல்

மெய்ஞ்ஞானக் கோட்டி யுறழ்வழி விட்டாங்கோ
ரஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறத்துழாய்க்
கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்முன்
சொன்ஞானஞ் சோர விடல். (கடகக)

நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போற்செறிக்குந்
தீப்புலவற் சேரார் செறிவுடையார்—தீப்புலவன்
கோட்டியுட் குன்றக் குடிபழிக்கு மல்லாக்காற்
றோட்புடைக் கொள்ளா வெழும். (௩௧௨)

சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்
கற்றாற்றல் வன்மையுந் தாந்தேறார்—கற்ற
செலவுரைக்கு மாறறியார் தோற்ப தறியார்
பலவுரைக்கு மாந்தர் பலர். (௩௧௩)

கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திர—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும். (௩௧௪)

வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்கொள்ளார்
கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோ—டொன்றி
உரைவித் தகமெழுவார் காண்பவே கையுட்
சுரைவித்துப் போலுந்தம் பல். (௩௧௫)

பாடமே யோதிப் பயன்றெரித றேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்காற்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
யீன்றாட் கிறப்பப் பரிந்து. (௩௧௬)

பெறுவது கொள்பவர் தோள்போ னெறிபட்டுக்
கற்பவர்க் கெல்லா மெளியநூன்—மற்றம்
முறிபுரை மேனிய ருள்ளம்போன் றியார்க்கு
மறிதற் கரிய பொருள். (௩௧௭)

புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா
ருய்த்தக மெல்லா நிறைப்பினு—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து
தேற்றும் புலவரும் வேறு. (ருகஅ)

பொழிப்பகல நுட்பநூ லெச்சமிந் நான்கிற்
கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்—பழிப்பி
னிரையாமா சேர்க்கு நெடுங்குன்ற நாட
உரையாமோ நூலிற்கு நன்கு. (ருகக)

இற்பிறப் பில்லா ரெனைத்துநூல் கற்பினுஞ்
சொற்பிறரைக் காக்குங் கருவியரோ—விற்பிறந்த
நல்லறி வாளர் நவின்றநூ றேற்றுதார்
புல்லறிவு தாமறிவ தில். (ருஉ0)

---

## சு. பகையியல்

---

### ருரு - ஆம் அதி.—புல்லறிவாண்மை

அருளி னறமுரைக்கு மன்புடையார் வாய்ச்சொற்
பொருளாகக் கொள்வர் புலவர்—பொருளல்லா
ஏழை யதனை யிகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு. (ருஉக)

அவ்விய மில்லா ரறத்தா றுரைக்குங்காற்
செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்
கவ்வித்தோ றின்னுங் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளறேற்று தாங்கு. (ருஉஉ)

இமைக்கு மளவிற்றம் மின்னுயிர்போ மார்க்க
மெனைத்தானுந் தாங்கண் டிருந்தார்—றினைத்துணையு
நன்றி புரிகல்லா நாணின் மடமாக்கள்
பொன்றிலென் பொன்றாக்கா லென். (௩௨௩)

உளநாள் சிலவா லுயிர்க்கேம மின்றாற்
பலர்மன்னுந் தூற்றும் பழியாற் பலருள்ளுங்
கண்டாரோ டெல்லா நகாஅ தெவனொருவன்
றண்டித் தணிப்பகை கோள். (௩௨௪)

எய்தி யிருந்த வவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதா னொருவ னொருவனை—வைய
வயப்பட்டான் வாளா விருப்பானேல் வைதான்
வியத்தக்கான் வாழு மெனின். (௩௨௫)

மூப்புமேல் வாராமை முன்னே யறவினையை
யூக்கி யதன்கண் முயலாதா—னூக்கிப்
புறத்திரு போகென்னு மின்னாச்சொ லில்லுட்
டொழுத்தையாற் கூறப் படும். (௩௨௬)

தாமேயு மின்புறார் தக்கார்க்கு நன்றாற்றா
ரேமஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார்—தாமயங்கி
யாக்கத்துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார். (௩௨௭)

சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளா—திறுகிறுகிப்
பின்னறிவா மென்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம். (௩௨௮)

வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போழ்து
மறுமை மனத்தாரே யாகி—மறுமையை
ஐந்தை யனைத்தானு மாற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறிவி னர். (௩௨௯)

என்னேமற் றிவ்வுடம்பு பெற்று மறநினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—யன்னோ
அளவிறந்த காதற்றம் மாருயி ரன்னார்க்
கொளவிழைக்குங் கூற்றமுங் கண்டு. (௩௩௦)

---

## ௩௪-ஆம் அதி.—பேதைமை

கொலைஞ ருலையேற்றித் தீமடுப்ப வாமை
நிலையறியா தந்நீர் படிந்தாடி யற்றே
கொலைவல் பெருங்கூற்றங் கோட்பார்ப்ப வீண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு. (௩௩௧)

பெருங்கட லாடிய சென்று ரொருங்குட
னோசை யவிந்தபி னாடுது மென்றற்றா
லிற்செய் குறைவினை நீக்கி யறவினை
மற்றறிவா மென்றிருப்பார் மாண்பு. (௩௩௨)

குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காம லெய்தியக் கண்ணு—நலஞ்சான்ற
மையறு தொல்சீ ருலக மறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றி னேர். (௩௩௩)

கன்னனி நல்ல கடையாய மாக்களிற்
சொன்னனி தாமுணரா வாயினு—மின்னினியே
நிற்ற லிருத்தல் கிடத்த லியங்குதலென்
றற்றவர்க்குத் தாமுதவ லான். (௩௩௪)

பெறுவதொன் றின்றியும் பெற்றானே போலக்
கறுவுகொண் டேலாதார் மாட்டுங்—கறுவினாற்
கோத்தின்னா கூறி யுரையாக்காற் பேதைக்கு
நாத்தின்னு நல்ல சுனைத்து. (௩௩௫)

தங்கண் மரபில்லார் பின்சென்று தாமவரை
எங்கண் வணக்குது மென்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப் புன்னை மலருங் கடற்சேர்ப்ப
கற்கிள்ளிக் கையிழந் தற்று. (௩௩௬)

ஆகா தெனினு மகத்துநெய் புண்டாகிற்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர். (௩௩௭)

நல்லவை நாடொறு மெய்தா ரறஞ்செய்யா
ரில்லாதார்க் கியாதொன்று மீகலா—ரெல்லா
மினியார்தோள் சேரா ரிசைபட வாழார்
முனியார்கொ றாம்வாழு நாள். (௩௩௮)

விழைந்தொருவர் தம்மை வியப்ப வொருவர்
விழைந்திலே மென்றிருக்குங் கேண்மை—தழங்குரற்
பாய்திரைசூழ் வையம் பயப்பினு மின்னாதே
ஆய்நல மில்லாதார் மாட்டு. (௩௩௯)

கற்றனவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்துந் தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும். (௩௪௰)

---

## ௩௫-ஆம் அதி.—கீழ்மை

கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினுங்
குப்பை கிளைப்போவாக் கோழிபோல்—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும். (௩௪௧)

காழாய கொண்டு கசடற்றார் தஞ்சாரற்
றாழாது போவா மெனவுரைப்பிற்—கீழ்தா
னுறங்குவா மென்றெழுந்து போமாமஃ தன்றி
மறங்குமா மற்றொன் றுரைத்து. (௩௪௨)

பெருநடை தாம்பெறினும் பெற்றி பிழையா
தொருநடைய ராகுவர் சான்றோர்—பெருநடை
பெற்றக் கடைத்தும் பிறங்கருவி நன்னாட
வற்று மொருநடை கீழ். (௩௪௩)

தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்—பனையனைத்
தென்றுஞ் செயினு மிலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு. (௩௪௪)

மலைநல முள்ளுங் குறவன் பயந்த
விளைநில முள்ளு முழவன் சிறந்தொருவர்
செய்தநன் றுள்ளுவர் சான்றோர் கயந்தன்னை
வைததை யுள்ளி விடும். (௩௫௬)

ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயி
னெழுநூறுந் தீதாய் விடும் (௩௫௭)

எட்டைப் பருவத்து மிற்பிறந்தார் செய்வன
மோட்டிடத்துஞ் செய்யார் முழுமக்கள்—கோட்டை
வயிரஞ் செறிப்பினும் வாட்கண்ணாய் பன்றி
செயிர்வேழ மாகுத லின்று. (௩௫௮)

இன்றாது மிந்நிலையே யாது மினிச்சிறிது
நின்றாது மென்று நினைத்திருந்—தொன்றி
உரையின் மகிழ்ந்துதம் முள்ளம்வே றாகி
மரையிலையின் மாய்ந்தார் பலர். (௩௫௯)

நீருட் பிறந்து நிறம்பசிய தாயினு
மீரங் கிடையகத் தில்லாகு—மோரு
நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்து
மறைப்பெருங்க லன்னா ருடைத்து. (௩௬௰)

# ௭ பன்னெறியியல்

---

## ௩௭-ஆம் அதி.—பன்னெறி

மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பாய்
இழைவிளக்கு நின்றிமைப்பி னென்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை யில்லாதா னில்லகங்
காண்டற் கரியதோர் காடு. (௩௬௧)

வழுக்கெனைத்து மில்லாத வாள்வாய்க் கிடந்து
மிழுக்கினைத் தாம்பெறு ராயி—னிழுக்கெனைத்துஞ்
செய்குறாப் பாணி சிறிதேயச் சின்மொழியார்
கையுறாப் பாணி பெரிது. (௩௬௨)

எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
அட்டில் புகாதா ளரும்பிணி—யட்டதனை
உண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை. (௩௬௩)

கடியெனக் கேட்டுங் கடியான் வெடிபட
ஆர்ப்பது கேட்டு மதுதெளியான்—பேர்த்துமோ
ரிற்கொண் டினிதிருஉ மேமுறுத லென்பவே
கற்கொண் டெறியுந் தவறு. (௩௬௪)

தலையே தவமுயன்று வாழ்த லொருவர்க்
கிடையே யினியார்கட் டங்கல்—கடையே
புணராதென் றெண்ணிப் பொருணசையாற் றம்மை
உணரார்பின் சென்று நிலை. (௩௬௫)

பாம்பிற் கொருதலை காட்டி யொருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டு—மாங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறி வினார். (௩௭௫)

பொத்த நூற் கல்லும் புணர்பிரியா வன்றிலும்போ
லித்தலு நம்மைப் பிரியல மென்றுரைத்த
பொற்றொடியும் போர்த்தகர்க்கோ டாயினா னெஞ்சே
நிற்றியோ போதியோ நீ (௩௭௬)

ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோற் குப்புறூஉஞ் சில்லைக்க ணன்பினை
ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை. (௩௭௭)

ஏமாந்த போழ்தி னினியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடா—மானோக்கிற்
றங்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செங்நெறிச் சேர்துமென் பார். (௩௭௮)

ஊறுசெய் நெஞ்சந்தம் முள்ளடக்கி பொண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
எமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்முடம்பி னார். (௩௭௯)

உள்ள மொருவ னுழையதா யொண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாங்—தெள்ளி
அறிந்த விடத்து மறியாராம் பாவஞ்
செறிந்த வுடம்பி னவர். (௩௮௰)

## உ. இன்பவியல்

### ௩௯ - ஆம் அதி.—கற்புடைமகளிர்

அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணு
நறுநுதலா ணன்மைத் துணை. (௩௮௧)

குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறாக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள். (௩௮௨)

நாலாறு மாறாய் நனிசிறிதா யெப்புறனு
மேலாறு மேலுறை சோரினு—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழு மாண்கற்பி
னில்லா ளமர்ந்ததே யில். (௩௮௩)

கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூர்நா ணியல்பினா—ளுட்கி
இடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதராள் பெண். (௩௮௪)

எஞ்ஞான்று மெங்கணவ ரெந்தோண்மேற் சேர்ந்தெழினு
மஞ்ஞான்று கண்டேம்போ னாணுதுமா—லெஞ்ஞான்று
மென்னை கெழீஇயினர் கொல்லோ பொருணசையாற்
பன்மார்பு சேர்ந்தொழுகு வார். (௩௮௫)

உள்ளத் துணர்வுடையா னோதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்க ணொண்பொருள்—தெள்ளிய
ஆண்மகன் கையி லயில்வா ளனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம். (௩௮௬)

[உலாப்போய்வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத்
தலைமகள் சொல்லியது]

கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்
றொருங்கொப்பக் கொண்டானா மூர—ஞெருங்கோல்வா
நன்னுதலார்த் தோய்ந்த வரைமார்ப னீராடா
தென்னையுந் தோய வரும். (௩௮௭)

[தலைவனது பிரிவுணர்த்திய பாணனை நோக்கித் தலைவி
மறுத்துக் கூறியது]

கொடியவை கூறாதி பாணநீ கூறி
னடிபைய விட்டொதுங்கிச் சென்று—துடியி
னிடக்கண் ணனையம்யா மூரற் கதனால்
வலக்கண் ணனையார்க் குரை. (௩௮௮)

['பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனோடு நீ புலவாமைக்குக்
காரணம் யாது'? என்ற தோழிக்குத்
தலைவி சொல்லியது.]

சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீ
தீப்பறக்க நொந்தேனும் யானேமற்—றீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணிபகல
நோக்கி யிருந்தேனும் யான். (௩௮௯)

[தலைவி பாணனோடு வெகுளல்.]

அரும்பவிழ் தாரினா னெம்மருளு மென்று
பெரும்பொய் யுரையாதி பாண—கரும்பின்
கடைக்கண் ணனையநா மூரற் கதனை
யிடைக்கண் ணனையார்க் குரை. (௩௱௰)

## ௪௰ - ஆம் அதி.—காமநுதலியல்

[தலைமகற்கு வாயில்நேர்ந்த தோழி தலைமகள் புலவிநீங்கச் சொல்லியது.]

முயங்காக்காற் பாயும் பசலைமற் றாடி
உயங்காக்கா லுப்பின்றாங் காமம்—வயங்கோத
நில்லாத் திரையலைக்கு நீள்கழித் தண்சேர்ப்ப
புல்லாப் புலப்பதோ றாறு. (௩௱௰௧)

[பருவங்கண்டு ஆற்றளாகிய தலைவி தோழிக்குச் சொல்லியது.]

தம்மமர் காதலர் தார்சூ ழணியகலம்
விம்ம முயங்குந் துணையில்லார்க்—கிம்மெனப்
பெய்ய வெழிலி முழங்குந் திசையெல்லா
நெய்த லறைந்தன்ன நீர்த்து. (௩௱௰௨)

[தலைமகள் செல வுடன்படாமையைத் தலைமகற்குத் தோழி சொல்லியது.]

கம்மஞ்செய் மாக்கள் கருவி யொடுங்கிய
மம்மர்கொண் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள்
கைம்மாலை யிட்டுக் கலுழ்ந்தா டுணையில்லார்க்
கெம்மாலை யென்செய்வ தென்று. (௩௱௰௩)

[வினைமுற்றி மீண்ட தலைமகன் பாகன்கேட்பச் சொல்லியது.]

செல்சுடர் நோக்கிச் சிதரரிக்கண் கொண்டநீர்
மெல்விர லூழ்தெரியா விம்மித்தன்—மெல்விரலி
னுள்வைத்து நங்குற்ற மெண்ணுங்கொ லங்கோதன்
றோள்வைத் தணைமேற் கிடந்து. (௩௯௪)

[தலைமகன் தானுற்றதைப் பாங்கற்குச் சொல்லியது.]

கண்கய லென்னுங் கருத்தினாற் காதலி
பின்சென்ற தம்ம சிறுசிரல்—பின்சென்று
மூக்கி யெழுந்து மெறிகல்லா வொண்புருவங்
கோட்டிய வில்வாக் கறிந்து. (௩௯௫)

[நற்றாய் தன்மகள் சென்ற சுரத்தருமை கூறி இரங்கியது.]

அரக்காம்ப னாறும்வா யம்மருங்கிற் கன்னோ
பரற்கான மாற்றின கொல்லோ—வரக்கார்ந்த
பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
றஞ்சிப் பின்வாங்கு மடி. (௩௯௬)

[தலைவனது பிரிவையாற்றாத தலைவியின் நிலைமையைத் தோழி கூறியது.]

ஓலைக் கணக்க ரொலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதின் மணந்தார் பிரிவுள்ளி
மாலை பரிந்திட் டழுதாள் வனமுலைமேற்
கோலஞ்செய் சாந்தந் திமிர்ந்து. (௩௯௭)

[உடன்போக்குப் பொருந்திய தலைமகள் தோழிக்குக் கூறியது.]

கடக்கருங் கானத்துக் காளைபின் னாளை
நடக்கவும் வல்லையோ வென்றி—சுடர்த்தொடீஇ
பெற்றா னொருவன் பெருங்குதிரை யந்நிலையே
கற்றா னஃதூரு மாறு. (௩௯௮)

[மகளைப்போக்கிய நற்றாய் கவன்று கூறியது.]

முலைக்கண்ணு முத்து முழுமெய்யும் புல்லு
மிலக்கணம் யாது மறியேன்—கலைக்கணம்
வேங்கை வெரூஉ நெறிசெலிய போலுமென்
பூம்பாவை செய்த குறி. (௩௯௯)

[தலைமகள் பிரிவாற்றாமையைத் தோழிக்குச் சொல்லியது.]

கண்மூன் றுடையானுங் காக்கையும் பையரவு
மென்னீன்ற யாயும் பிழைத்ததென்—பொன்னீன்ற
கோங்கரும் பன்ன முலையாய் பொருள்வயிற்
பாங்கனார் சென்ற நெறி. (௪௱)

காமத்துப்பால் முற்றும்.

நாலடியார் முற்றும்.

# நாலடியார்

# அரும்பொருள் விளக்கம்.

## கடவுள் வாழ்த்து.

வான் இடு வில்-இந்திர தனுசு. இன் - ஐந்தனுருபு; ஒப்புப் பொருளது. வரவு - பிறப்பு. அது வருத லறியலாகாமையின் 'வானிடு வில்லின் வரவு' என்றார்.

'விழித்திமைக்கு மாத்திரை யன்றோ வொருவ
னழித்துப் பிறக்கும் பிறப்பு' என இந்நூலிற் பின்னும் [இரவச்சம்],

'உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு' எனத் திருக்குறளினும்,

'பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலு
முறங்கலும் விழித்தலும் போன்ற தன்மையால்' என மணிமேகலையினு மிருத்தல் காண்க.

அறியா-அறிந்து. வாய்மை-தத்துவஞானம். 'வாய்மையால் அறியா' என மாற்றுக. கால் நிலம் தோயாக் கடவுள் என்றது அருகனை. கடவுள்-'கட' பகுதி, 'உள்' வினைமுதற்பொருள் விகுதி; எல்லாவற்றையுங் கடந்தவன் என்பது பொருள். சென்னி-தலை. சேர்தும்-சேர்வோம். முன்னியவை-நினைத்தவை. 'முடிக என்று சேர்தும்' என முடிவு செய்க.

# அறத்துப்பால்.

---

௧. அறுசுவையாவன: கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, இனிப்பு, புளிப்பு என்பன. அமர்ந்து - விரும்பி; (வினையாது) அமைந்து என்றலுமாம். இல்லாள்-மனைவி. மறுசிகை-பிற்பிடியை. நீக்கி-(முற்பிடியின் ஆறின பகுதியை) நீக்கி. வறிஞர்-தரித்திரர். கூழ்-அற்ப வுணவு. இரப்பர்-யாசிப்பர். உண்டாக-நிலையுள்ளதாக. வைக்கற்பாற்று-நினைக்கத்தக்க தன்மையுடைத்து.

௨. துகள் தீர் - குற்றம் அற்ற. தோன்றியக்கால்-எதிர்கால வினையெச்சம். தொட்டு-(தோன்றும் அந்நாள்) தொடங்கி. பகடு-எருமைக் கிடாய்கள். எருமைக் கிடாய்கள் உழுதுழைத்த தன் பயனைத் தான் துய்த்தலின், அதற்குப் பிறரு முரியராமெனல் குறித்தற்கு 'பகடு நடந்த கூழ்' என்றார். கூழ்-ஈண்டு 'உணவுப் பொதுவாம்'. அன்னதானத்திற் கொப்பதொரு தானம் பிறிதில் லென்பார் 'உண்க' என்றார் 'உண்டி கொடுத்தோ ருயிர் கொடுத் தோரே' என்பதூஉங் காண்க. அகடு - நடுவு நிலைமை. சகடக் கால்-வண்டியின் உருளை.

௩. எருத்தம்-பிடரி. குடை-சந்திரவட்டக் குடை. சேனைத் தலைவர்-அரசர்; இது 'படைமன்னர்' என்றாற் போன்றது. 'தம் மைச் சேனை சூழ்ந்துவர' என்பது குறிப்பு. சென்றோரும்-உலாப் போந்தவர்களும். ஏனை வினை-தீவினை. உலப்ப-கெடுக்க. வேறுஆகி-நிலைமாறி. கொண்ட-மணஞ்செய்து கொண்ட. மனையாளை என் புழிச் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. மாற்றார்-பகைவர்.

௪. நின்றன-(ஐம்பொறியான் அறிய) நின்ற பொருள்கள். நில்லா-நிலையா. ஒன்றின-(செய்யக்) கூடிய அறவினைகளை. 'செயின் வல்லே செய்க' என மாறுக. வல்லே-விரைவின்; இஃதிடைச் சொல். செறுத்து-கோபித்து. உடன்-விரைவின். கூற்று-யமன்;

உடலையும் உயிரையும் கூறு செய்தலிற் 'கூற்று' எனப் படுதல் காண்க. 'நின்றன நின்றன,' 'ஒன்றின ஒன்றின' இவ் வடுக்குக் கள் மிகுதி பற்றியன; 'சென்றன சென்றன,' 'வந்தது வந்தது' இவ் வடுக்குக்கள் விரைவு பற்றியன.

௫. ஆனும்-'ஆயினும்' என்பதன் விகாரம். பெற்றக்கால்-பெற்றால். பின் ஆவது - (கொடுத்தல்) பின்பு செய்யலாவது. பிடித்து-இறுகப்பிடித்துக் கொண்டு. இரா-இராமல்; வினையெச்ச விகுதி புணர்ந்து கெட்டதென்க. உய-பிழைத்து; இது 'உய்ந்து' என்னும் எச்சத் திரிபாம். கோடு-பக்ஷபாதம்; இது முதனிலைத் தொழிற்பெயர். 'கூற்றம்' என்புழி. 'அம்' சாரியை. தொடுத்து-(பாசத்தாற்) கட்டி. ஆறு செல்லும்-வழி நடக்கும். சுரம்-சுடு நிலத்தினின்றும்.

௬. இழைத்த நாள்-(ஊழ்வினை) விதித்த ஆயுளை. இகவா-கடவா. ஒரீஇ-நீங்கி; இது சொல்லிசையளபெடை. குதித்து-கடந்து; 'கூற்றங் குதித்தலுங் கைகூடும்' என்றார் திருவள்ளுவரும். ஆற்ற-மிக. நாளை-அடுத்த நாளே; ஈண்டுச் சிறப்பேகாரந் தொக்கதென்க. தழீஇம் தழீஇம்-சப்தாநுகரணம்; இரட்டைக் கிளவி; இயற்கையளபெடை. தண்ணம்-சாப்பறை, 'இறப்பு நேரும்' எனபதனைத் 'தழீஇந் தழீஇந் தண்ணம் படும்' என வேறொரு வகையாற் கூறுதலின், இது 'பிறிதினவிற்சியணி' யென்றறிக.

௭. தோற்றம் சால்-தோன்றுதல் அமைந்த, காலந் தவறாது தோன்றுதலின் இங்ஙனம் விசேடித்தாரென்க; இனி, 'விளக்க மிக்க' எனினுமாம். ஞாயிறு-சூரியன். நாழியா-படியாகக்கொண்டு வைகலும்-நாடோறும். நுந்நாள்-நும் நாள் எனப் பிரிக்க. யாரும் பிறந்தும் பிறவாதாரில்-(அவ்வாறு ஆகாவிடின் மனிதராய்ப்) பிறந்திருந்தும் பிறவாதாருள் வைத்து எண்ணப் படுவர்; அஃதாவது விலங்கொடு வைத்து எண்ணப்படுவர். 'பிறவாதாரில்' என் புழி எழனுருபு பிரித்துக் கூட்டற் பொருட்டு. எண்ணப்படு

வர் என்பது சொல்லெச்சம்; 'அறத்தாறிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தா னிடை', (குறள்-கஎ.) என்புழி 'உணரப்படும்' என்பதுபோல. ஞாயிற்றைப் படியாக வுருவகஞ் செய்து நாளைத் தானியமாக வுருவகஞ் செய்யாமையின் இஃதேக தேசவுருவகவணி.

அ. செல்வர் யாம் - (இது பொழுது) யாஞ் செல்வ முடையோம். தாம் செல்வுழி - தாஞ் செல்லக் கடவதாகிய மறுமையுலகத்தை. எல்லில்-இரவில். கொண்மூ-மேகம். 'வாய்திறந்த' என்பது காரணப் பொருட்டில் வந்த பெயரெச்சம்; வெளியிட்டவென்பது பொருள் 'மின்னு' என்புழி உகரஞ் சாரியை. மருங்கு அற-இடமுந் தெரியாதபடி; இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கதென்க.

கூ. ஒளியாவது தாம் உளகாலத்து எல்லாராலும் நன்கு மதிக்கப்படுதல்; 'ஒஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை' என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகருரை காண்க. புகழாவது தமக்குப் பின் உலக முள்ளளவும் நிற்கும் கீர்த்தி. துன் அருங் கேளிர்-சேர்தற்கு அரிய உறவினர்; கேளிர் என்பதற்கு (நன்மை) கேட்பவர்' என்பது சொல்லின்படி பொருள். கொன்னே-கைம்மாறு கருதாது. 'ஆஅ' என்பது இரக்கக் குறிப்பிடைச் சொல். உண்ணான், நிறான், செய்யான், களையான், வழங்கான் ' என்பன முற்றெச்சங்கள்.

ம. அளபெடைகள் இசை நிறைக்க வந்தன. செற்றும் - வருத்தியும். கெடாஅத-(என்றும்) அழியாத; 'தாம் அழியாமைக்குக் காரணமாகிய' எனவும், '(தன்னை விரும்பிச் செய்தவர்களைக்) கெடுக்காத' எனவும் பொருள் கூறுவாருமுளர். ஈட்டினார்-(மேன்மேலும்) சம்பாதித்தவர். கரி-சாட்சி. தேனீக்கள் பல நாள் ஓயாது உழன்று பல மலர்களிற் சிறிது சிறிது கொண்டு சேர்த்துவைத்த தேனை ஒரு நாள் பிறனொருவன் கொண்டு போவது போல, ஒருவன் பலகாலமாகச் சேர்த்துவைத்த செல்வத்தை ஒரு நாள் கள்வர் முதலியோர் கவர்வரென்பது கருத்து.

கக. நரை-முதுமைப் பருவம்; இஃதாகுபெயர். குழவியிடத்தே-இளமைப் பருவத்திலேயே. 'அறிவாளர் எண்ணித் துறந்தார்' என முடிக்க. புரை-குற்றம். மன்னு-நிலைபெறுத. இளமை-இளமைப் பருவத்தில். கோல்-தடியை. இன்னாக்கு-துன்பத்துடன்.

கஉ. நட்பு-சிநேகம். நார்-கயிறு. நல்லாரும்-மாதர்களும். அஃகினார்-(அன்பு) குறைந்தார்கள். அன்பு தளை எனப் பிரிக்க: தளை-கட்டு. உள்-மனத்தில். ஊதியம்-பயன். ஆழ் கலத்து அன்ன-மூழ்குகின்ற மரக்கலத்திலுள்ளார்க்கு வருவது போன்ற: கலி-துன்பம்.

கந. கழன்று-வீழ்ந்து. பண்டம்-இவ்வுடம்பாகிய பொருள். பழிகாறும்-(கண்டோர் யாவராயினும்) பழிக்கப்படுமளவும்; 'காறு' என்பது எல்லை குறிப்பதோர் இடைச்சொல். இல் செறிந்து-இல் வாழ்க்கையிற் பொருந்தி; 'இல்' என்பது ஆகுபெயர். காமநெறி-ஆசையின் வழியில். படரும்-செல்லும். கண்ணினார்க்கு-நோக்கமுடையார்க்கு. ஏம நெறி-பேரின்பமாகிய வீட்டு வழியில். படரும் ஆறு-செல்லும் வகை.

கச. தாழா-(உடம்பு) வளைந்தும். தளரா-மெலிந்தும். இறக்கும்-இறக்க நிற்கும்; 'விறக்கும்' எனப் பிரித்து 'அஞ்சும்' எனப் பொருள் கூறுவாருமுளர். 'தாழா, தளரா, நடுங்கா, ஊன்று, வீழா என்பன உடன்பாட்டு வினையெச்சங்கள். காழ்-மனவுறுதி. மம்மர்-மயக்கம். அணங்கு-மோகினி யெனனும் தெய்வப் பெண்; திருமகள் என்பது மொன்று. அம்மனைக் கோல்-அவள் தாயின் ஊன்றுகோல். ஞான்று-நாளில். சென்றான்-இறந்தான்.

கரு. இட்டு - வைத்து. நாடியே-தேடியே. தாயாகியவளும்-தாயானவளும். அது ஆனால்-அப்படியேயானால், அஃதாவது தனக்கொரு தாயைத் தேடிச் செல்லுதலானால். தாய்க்கொண்டு-தாயைக்கொண்டு, அஃதாவது தேடிக்கொண்டு. அளித்து - எளிமையுடைத்து.

கசு. வெறி அயர்-வெறியாட்டாடுகின்ற அஃதாவது ஆவேசங்கொண்டாடுகின்ற. வெங்களத்து-கொடிய பலியிடுமிடத்தில். வேல்

வர் என்பது சொல்லெச்சம்; 'அறத்தாறிதுவென வேண்டா சிவிகை, பொறுத்தானோ டூர்ந்தா னிடை', (குறள்-கூ௭.) என்புழி 'உணரப்படும்' என்பதுபோல. ஞாயிற்றைப் படியாக வுருவகஞ் செய்து நாளைத் தானியமாக வுருவகஞ் செய்யாமையின் இஃதேக வேசவுருவகவணி.

அ. செல்வர் யாம் - (இது பொழுது) யாஞ் செல்வ முடையோம். தாம் செல்வுழி - தாஞ் செல்லக் கடவதாகிய மறுமையுலகத்தை. எல்லில்-இரவில். கொண்மூ-மேகம். 'வாய்திறந்த' என்பது காரணப் பொருட்டில் வந்த பெயரெச்சம்; வெளியிட்ட வென்பது பொருள் 'மின்னு' என்புழி உகரஞ் சாரியை. மருங்கு அற-இடமுந் தெரியாதபடி; இழிவு சிறப்பும்மை விகாரத் தாற் றொக்கதென்க.

கூ. ஒளியாவது தாம் உளகாலத்து எல்லாராலும் நன்கு மதிக்கப்படுதல்; 'ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை' என் னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகருரை காண்க. புகழாவது தமக்குப் பின் உலக முள்ளளவும் நிற்கும் கீர்த்தி. துன் அருங் கேளிர்-சேர்தற்கு அரிய உறவினர்; கேளிர் என்பதற்கு (நன்மை) கேட்பவர்' என்பது சொல்லின்படி பொருள். கொன்னே-கைம்மாறு கருதாது. 'ஆஅ' என்பது இரக்கக் குறிப்பிடைச் சொல். உண்ணான், நிறான், செய்யான், களையான், வழங்கான்' என்பன முற்றெச்சங்கள்.

ம. அளபெடைகள் இசை நிறைக்க வந்தன. செற்றும் - வருத்தியும். கெடாஅத-(என்றும்) அழியாத; 'தாம் அழியாமைக்குக் காரணமாகிய' எனவும், '(தன்னை விரும்பிச் செய்தவர்களைக்) கெடுக்காத' எனவும் பொருள் கூறுவாருமுளர். ஈட்டினார்-(மேன்மேலும்) சம்பாதித்தவர். கரி-சாட்சி. தேனீக்கள் பல நாள் துயாது உழன்று பல மலர்களிற் சிறிது சிறிது கொண்டு சேர்த்துவைத்த தேனை ஒரு நாள் பிறனொருவன் கொண்டு போவது போல, ஒருவன் பலகாலமாகச் சேர்த்துவைத்த செல்வத்தை ஒரு நாள் கள்வர் முதலியோர் கவர்வரென்பது கருத்து.

கக. நரை-முதுமைப் பருவம்; இஃதாகுபெயர். குழவியிடத்தே-இளமைப் பருவத்திலேயே. 'அறிவாளர் எண்ணித் துறந்தார்' என முடிக்க. புரை-குற்றம். மன்னு-நிலைபெறுத. இளமை-இளமைப் பருவத்தில். கோல்-தடியை. இன்னாங்கு-துன்பத்துடன்.

கஉ. நட்பு-சிநேகம். நார்-கயிறு. நல்லாரும்-மாதர்களும். அஃகினார்-(அன்பு) குறைந்தார்கள். அன்பு தளை எனப் பிரிக்க; தளை-கட்டு. உள்-மனத்தில். ஊதியம்-பயன். ஆழ் கலத்து அன்ன-மூழ்குகின்ற மரக்கலத்திலுள்ளார்க்கு வருவது போன்ற; கலி-துன்பம்.

கங. கழன்று-வீழ்ந்து. பண்டம்-இவ்வுடம்பாகிய பொருள். பழிகாறும்-(கண்டோர் யாவராலும்) பழிக்கப்படுமளவும்; 'காறு' என்பது எல்லை குறிப்பதோர் இடைச்சொல். இல் செறிந்து-இல் வாழ்க்கையிற் பொருந்தி; 'இல்' என்பது ஆகுபெயர். காமநெறி-ஆசையின் வழியில். படரும்-செல்லும். கண்ணினார்க்கு-நோக்கமுடையார்க்கு. ஏம நெறி-பேரின்பமாகிய வீட்டு வழியில். படரும் ஆறு-செல்லும் வகை.

கச. தாழா-(உடம்பு) வளைந்தும். தளரா-மெலிந்தும். இறக்கும்-இறக்க நிற்கும்; 'விறகும்' எனப் பிரித்து 'அஞ்சும்' எனப் பொருள் கூறுவாருமுளர். 'தாழா, தளரா, நடுங்கா, ஊன்றூ, வீழா என்பன உடன்பாட்டு வினையெச்சங்கள். காழ்-மனவுறுதி. மம்மர்-மயக்கம். அணங்கு-மோகினி யெனனும் தெய்வப் பெண்; திருமகள் என்பது மொன்று. அம்மனைக் கோல்-அவள் தாயின் ஊன்றுகோல். ஞான்று-நாளில். சென்றாள்-இறந்தாள்.

கரு. இட்டு - வைத்து. நாடியே-தேடியே. தாயாகியவளும்-தாயானவளும். அது ஆனல்-அப்படியேயானல், அஃதாவது தனக்கொரு தாயைத் தேடிச் செல்லுதலானல். தாய்க்கொண்டு-தாவிக்கொண்டு, அஃதாவது தேடிக்கொண்டு. அளித்து - எளிமையுடைத்து.

கசு. வெறி அயர்-வெறியாட்டாடுகின்ற அஃதாவது ஆவேசங்கொண்டாடுகின்ற. வெங்களத்து-கொடிய பலியிடுமிடத்தில். வேல்

மகன்-வெறியாட்டாளனுடைய. பாணி-கையிலிருக்கின்ற. நூறி ஆர் கறு கண்ணி-தளிர்கள் இடையிடையே பொருந்திய நல்ல பூமாலை. முன்னர்த் தயங்க-தன் கண்ணெதிரில் விளங்க. மறி-ஆடு. குளகு உண்டு அன்ன-(அம்மாலையிற் றளிர்களை) இரையாகக்கொண்டு உண்டு பெற்றது போன்ற. 'இலைதுகர் விலங்கு ளுவே, குள கென வியம்ப லாகும்' என்பது நிகண்டு. உண்டு அன்ன-'உண்டது அன்ன' என்றேனும், 'உண்டால் அன்ன' என்றேனுங் கொண்டு, 'தொழிற் பெயர் விகுதி புணர்ந்து கெட்டது' என்றேனும், 'வினையெச்ச விகுதி புணர்ந்து கெட்டது' என்றேனும் இலக்கண முடைக்க. மன்னு மகிழ்ச்சி - நிலைபெறாத மகிழ்ச்சி. குறிஞ்சி நிலமாக்கள் அந் நிலத்தெய்வமான முருகப்பெருமானுக்கு ஆட்டுக்கிடாயைப் பலியிட்டு அழைப்ப, அப்பெருமான் ஒருவன் மீது தோன்றி யாடிப் பலியேற்று வரந்தரப் பெறுதல் மரபு. முருகப்பெருமான் தன்மீது தோன்ற நிற்பவனை அப் பெருமானது வேலை ஏந்தி நிற்றலபற்றி 'வேன் மகன்' எனவும், 'வேலன்' எனவுங் கூறுப. இன்னும் ஒரு கணத்தின் வெட்டுண்டு போதற் குரிய ஆடு தனக்கு நேர்வதனை அறியாது, வெறியாட்டாளன் கையி லுள்ள மாலையிற் றளிர்களை யுண்டு மகிழ்வதுபோல அறிவுடையார் நில்லாத இளமை யின்பத்திற்கு மகிழ்வதில்லை என்பது கருத்து.

௧௭. பனி - குளிர்ச்சி. கனி உதிர்ந்து வீழ்ந்தற்று - பழங்களுதிர்ந்து வீழ்ந்ததுபோன்ற (நிலையாத்) தன்மை யுடைத்து. 'இளமை வீழ்ந்தற்று' என்க. நனி பெரிதும் - மிக அதிகமாக. வேல் கண்ணன் - வேல் போலுங் கூரிய கண்களை யுடையவள். வெஃகன்மின்-விரும்பாதீர். மற்று-பின். குனிந்து-கூனி. கோல் கண்ணள் ஆகும் - ஊன்று கோலைக் கண்ணாக வுடையவளாவள்; 'கோற்க ணெறிகாட்டக் கொல்கூற் றுழையதா' (வளையாபதி) என்றிருத்தலுங் காண்க. இது பிறிதினவிற்பெயணி.

௧௮. எனைத்து உள - எவ்வளவு ஆகியுள்ளன? 'எனைத்து' என்பது 'எத்தனைத்து' என்பதன் மரூஉ. பல்லின்பால் - ப்ற்களின் தன்மை. எனை - எத்தன்மையன? 'எவன்' என்

வினையின் விகாரம். இருசிகையும் உண்டீரோ - இரண்டு பிடியாயினும் உட்கொண்டீரோ ? 'ஜீர்ணசக்தி சிறிதேனும் உண்டோ ?' என்பது கருத்து. அன்றி 'இரண்டு வேளைக் கவளங்களும் உண்டீரோ ?' எனப் பொருள் கூறுவாருமுண்டு. வரிசையால்-முறையாக. உள் நாட்டம் கொள்ளப்படுதலால் - மனத்தில் ஆராய்ந்து (பலரும்) விசாரிக்கக்கூடியதா யிருத்தலின். யாக்கை கோள்-உடம்பின குணமாகிய இளமையை.

௧௧. நல்வினை மற்று அறிவாம் - புண்ணிய கருமத்தைப்பின் அறிந்து செய்வோம் ? மற்று வினைமாற்று. கைத்து-கைப்பொருள். காவாது—ஒளியாது. கனி ஒழிய-பழங்களே யன்றி ; இனி, 'கனி (உதிராது) ஒழிய அஃதாவது பழங்கள் மரத்தொடு நிற்க' என் பாருமுளர். தீவளியால்-கடுங்காற்றால். பின்னிரண்டடிகட்கு, 'முதியரே யன்றி இளைஞரும் கொடிய யமனாற் சாதலுமுண்டு' என்னும் பொருள்பட 'நிற்றலின், இது பிறிதுமொழிதலணி , 'ஒட்டணி', எனினுமாம்.

௧௨. ஆள் பார்த்து-(ஆயுள் முடிந்த) ஆட்களைத் தேடிக் கொண்டு. உழலும்-(எப்போதும்) திரிகின்ற. அருள் இல்-இரக்கமில்லாத. தோள் கோட்பு-தோளிற் கோக்கப்படுவது அஃதாவது கட்டுச்சோற்று மூட்டை ; இங்கு மறுமைக்கு வேண்டும நல் வினைக்கு ஆயிற் றென்க. காலத்தால்-இளமைப் பருவத்தில்; இது வேற்றுமை மயக்கம். உய்ம்மின்-ஈடேறுவீர். பீள் பிதுங்கி-முதிராத கருப்பத்தை வெளிப்படுத்தி. அலற-கதறி அழ. பிள்ளையை கோடலான் குழந்தையை (உயிர்) கொள்ளுதலான். அதன்-அந்த யமனுடைய. கள்ளம்-வஞ்சனையை. கடைப்பிடித்தல்-(என்றும்) மறவாது நடத்தல்.

௧௩. மதியம்-(பூர்ண) சந்திரன் ; 'ஆம்' என்பது சாரியை. குடையர்-வெண்கொற்றக் குடையுடையராய். மலை யானைக்கும், மதி வெண்கொற்றக் குடைக்கும் உவமை. துஞ்சினார்-செத்தார் ; இது மங்கல வழக்கு. தூற்றப்பட்டார்-(பலராலும்) இகழப்பட்டார்கள். எஞ்சினார்-(சாகாது) மிஞ்சி நின்றவர்கள்.

௨௨. அலகா-அளவையாக. வயங்கு ஒளி மண்டிலம்-விளங்குகின்ற கிரணங்களையுடைய சூரியமண்டிலம். வீழ்நாள் படா அது-உதியாத நாள் இல்லையாக; 'படா அது' என்பது அசைநிறையளபெடை. உலவாமுன் - கழிவதன்முன். ஒப்புரவு ஆற்றுமின் - உபகாரத்தைச் செய்யுங்கள்; உலகநடையினை யறிந்து செய்தல் 'ஒப்புரவு' என்பர் பரிமேலழகர்; ஒப்பு உரவு எனப் பிரித்து (உலகம்) ஒப்பிய வன்மை (அஃதாவது சிறந்த செயல்) எனப் பொருள் கூறுவர் பெரியார். மேல்-(அவ்வாழ்நாட்கு) மேல். நிலவார்-வாழார். 'யாரும், நிலவார் நிலமிசைமேல்' என்பதற்கு வலிந்தும நலிந்தும் பிறபொருள் கூறுவாரு முளர்.

௨௩. மன்றம் கறங்க-கல்யாண மண்டபமுழுதும் ஒலிக்கும்படி. பறை-வாத்தியம். பிணப்பறையாய-சாப்பறையாக. பின்றை-உடனே. மாண்டார் - மாட்சிமைப்பட்ட பெரியோர். வலிக்கும் - உறுதியாய் நிற்கும்.

௨௪. சென்று-(இறந்த விடத்திற்குப்) போய். எறிப-(முதல்) கொட்டுவர் ; இது பலர்பான் முற்று. ஒருகால் - ஒருமுறை. சிறுவரை - சிறிதுநேரம். நின்று - (கொட்டாது) இருந்து. எறிப - (இரண்டாவது) கொட்டுவர். முக்காலை கொட்டினுள்-மூன்றுவது கொட்டும்போது. மூடி-(பிணத்தை) மூடி. எழுவர்-புறப்பட்டுப் போவர். பிணத்தைச் 'செத்தார்' என்றது இழிவுபற்றிவந்த திணைவழுவமைதி. நன்றே-இகழ்ச்சிக்குறிப்பு. காண்-அசை.

௨௫. கணங்கொண்டு-பெருங்கூட்டமாய்க்கூடி. அலற-கதறி அழ. காட்டு-சுடுகாட்டில். உய்ப்பார்-சேர்ப்பவர்களை, மணம்கொண்டு-கல்யாணஞ் செய்துகொண்டு, ஈண்டு-இவ்வுலகத்தில். உண்டு உண்டு உண்டு என்று-(இன்பம்) உளது உளது உளது என்று கருதி; இது துணிவுபற்றிவந்த அடுக்கு. உணர்வினன்-சிற்றறிவுடையானுக்கு. கல்லென்று, டொண் டொண் டொண் என்பன ஒலிக்குறிப்பு. பறை-சாப்பறை, பறை சாற்றும் என்றது தற்குறிப்பேற்றம.

உக. நார்தொடுத்து ஈர்க்கில் என்-கயிற்றாற்கட்டி இழுத்துக்கொண்டு போனால் என்ன? நன்று ஆய்ந்து அடக்கில் என் - நன்றாகச் சுத்தஞ்செய்து அடக்கஞ்செய்தால் என்ன? பார்த்துழிப் பெய்யில் என்-கண்டவிடத்தில் போகட்டால் என்ன? ஈண்டு அகரந் தொக்கது. பல்லோர் பழிக்கில் என்-பலருங் கண்டு பழித்தால் என்ன? தோற்பையுள்-உடம்பினுள். தொழில் அறசெய்து ஊட்டும்-இருவினைகளை மிகச்செய்து (அவற்றின் பயனை) உண்ணுகின்ற; 'ஊட்டும்' என்பது தன்வினைப் பொருளில் வந்த பிறவினையென்க: இனி, 'இருவினைகளை மிகச்செய்து (அவற்றின் பயனை) உண்பிக்கின்ற' எனவும், இருவினைகளை மிகச் செய்வித்து (அவற்றின் பயனை) உண்பிக்கின்ற எனவும், 'தொழில்களை மிகச்செய்து உண்பித்து வந்த' எனவும் பொருள் கூறுவாருளர்.

உஎ. படும்-பெய்கின்ற. மொக்குளின்-குமிழிபோல. ஓர் யாக்கை இது என்று-ஒருடம்பு இதுவென்று; 'ஓர்' என்னும் அடை இழிவு குறித்து நின்றது. தடுமாற்றம் - பிறவித் தடுமாற்றத்தை. நேர்ப்பார்-ஒப்பவர். யார்-ஒருவருமில்லை என்றபடி.

உஅ. யாக்கையை-உடம்பை; (எலும்பு நரம்பு முதலிய சப்த தாதுக்களாற்) கட்டப்படுவது என்பது சொல்லின்படி பொருள். யாப்புடைத்து ஆ-கட்டுடையதாக; 'ஆ' என்புழி வினையெச்ச ஈறு தொக்கது. கொள்க-(அது நிலையாதாகலின் உள்ளபொழுதே) தேடிக்கொள்க. மஞ்சு-மேகம். மற்று-வினைமாற்று, ஆங்கே - தோன்றியதுபோலவே. நீத்துவிடும்-(உடம்பை) விட்டொழியும்.

உக. புல் நுனி என்க. நிலையாமை - (உடம்பு) நிலையாமையுடையது; 'உடம்பு' என்பது அதிகாரத்தான் வருவிக்கப்பட்டது. இன்னினியே-இப்பொழுதே. 'இன்னினி' என்பது நிகழ்காலம் உணர்த்தும் ஒ ரிடைச்சொல். கிடந்தான் - படுத்தான். கேள் - உறவினர்; இது பண்பாகுபெயர். சென்றான்-இறந்தான். 'உடம்பு நிலையாமை' எனப் பண்பி பண்பாக உபசரிக்கப்பட்டது.

௩௰. கேளாது-'வரலாமா?' என்று கேளாமல். கிளைகளாய் - உறவினராய்; 'கிளை' என்பது உவம வாகுபெயர். இல்தோன்றி-

ஆகாயமுஞ் சிறிதென்னும்படி விரியும்; அளவிறந்த பயனைத் தருமென்பது கருத்து.

கக. வைகலும் - நாடோறும். வைகல்-பொழுது கழிதல். கண்டும்-அறிந்து வைத்தும். வைகலை -அப் பொழுது கழிதலை. வைகும் என்று-(நன்கு) கழியுமென்று. தம் வாழ்நாள்மேல் வைகு தல்வைத்து-தமது ஆயுளின் கழிதலாகக் கொண்டு; ஈண்டு 'வைகு தல் வைத்து' என்பதற்குத் 'தங்குதலாகக் கொண்டு' என்றுரை கூறினருமுளர். இன்புறுது விரைந்து அறஞ் செய்வரென்பது குறிப்பெச்சம். இது சொற்பொருட் பின்வரு நிலையணி.

சய. மானமாவது தம் நிலையிற் றாழாமையும் தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமா மென்பர் பரிமேலழகர். அருங் கலம்-அரிய ஆபரணத்தை. இரவு-இரத்தல், யாசித்தல். ஈன இழி வினைல்-இழிந்த தொழிலினல். வாழ்வேன்மன்-உயிர்வாழ்வேன்; 'மன்' என்னும் இடைச்சொல் 'உடம்பு நில்லாமையின் அது காரணமாக மானத்தை விட்டு இரந்து உயிர் வாழேன்' என்னும் பொருளைத் தருதலின், ஒழியிசைப் பொருளின் வந்ததென்க. ஈனத்தால்-இழிதொழிலால். உறுதி-வலிமை. நீட்டித்து நிற்கும் எனின்-பல்லூழிகாலம் நிலைபெற்று நிற்குமாயின்.

தூயதன்மை என்னுந் தொடரைத் 'தூய்து அன்மை' எனவும், 'தூய் தன்மை' எனவும் பிரித்து; 'சுத்தமுடையது அல்லாத தன்மை' எனவும், 'சுத்தமாகிய தன்மை' எனவும் பொருள் கூறுப.

சக. மா-அழகு கேழ்-நிறம். இனி 'மாக்கேழ்' என்ப தற்கு 'மிக்க நிறம்' எனவும், 'மாந்தளிர் நிறம்' எனவும், 'திருமக ளொப்பாம்' எனவும் பொருள் கூறுப. * மட நல்லாய்-இளமை வாய்ந்த பெண்ணே! அரற்றும்-வாய்விட்டுக் கதறும். சான்றவர்- (நற்குண நற்செய்கை) நிறைந்தவர்; அஃது ஈண்டுப் 'புல்லறி வாளரை' உணர்த்திற்று. இங்ஙனம் புல்லறிவாளரைச் சான்றவ ரென்றது எதிர்மறை யிலக்கணையாம். 'கொல்' ஐயப்பொருட்டு. நொய்யது-அற்பமானதாகிய. துச்சிலை-(உயிரானது ஒதுக்குக் குடி

யிருக்கும்) வீடாகிய உடம்பின் தன்மையை. ஈச்சிறகென்பது மிக்க சிறுமைக்குக் காட்டியதோர் அளவை.

௪௨. பொய் மறைக்கும் - (தன்னகத்துள்ள) பல அசுத்தங்களை மறைக்கின்ற. 'போர்வை மாட்சித்து' என்புழி மூன்றனுருபு விரிக்க. மாட்சித்து-அழகுடைத்து. காமம் புகலாது-விருப்பத்தைச் செய்யாது. பை மறியா-பையைப் போல (உட்பக்கம் வெளிப்பக்கமாம்படி) மாற்றியதாக. பார்க்கப்படும்-ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

௪௩. தக்கோலம் - வால்மிளகு; இது பஞ்சமுக வாசத்தொன்று, 'தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம், கற்பூரஞ் சாதியோ டைந்து' என்றிருத்தலின் அவை இன்னவெனக் காண்க. தக்கோலம் மற்றை நான்குமுக வாசங்கட்கும் உபலக்ஷணம். தின்று-மென்று. கோலம்-அலங்காரம். ஒழியுமே-ஏகாரம் எதிர் மறை. வினையுள்-வினையான்; இது வேற்றுமை மயக்கம். உறைக்கும்-வன்மைபெறும். கைவிட்ட-வெறுத்துவிட்ட. 'கை' என்பது தமிழுபசர்க்க மென்பாரு முளர். மயல்-செத்தையாகிய மகளிருடம்பின் அசுத்தங்கள்.

௪௪. குவளை-நீலமலர். கண் இல்-அறிவில்லாத. புல் மாக்கள்-அற்பமனிதர்கள். 'மாவு மாக்களு மையறி வினவே' என்பது தொல்காப்பியச் சூத்திரம். கவற்ற-(என் மனத்தைக்) கவலைப்படுத்துவதான். விடுவேனோ-(எனது ஒழுக்கத்தைக்) கைவிடுவேனோ, விடேன் என்றபடி. உள்நீர் களைந்தக்கால்-உள்ளே இருக்கின்ற நீரை எடுப்பின். நுங்கு சூன்றிட்டன்ன-நுங்கைத் தோண்டியதை யொத்த. 'சூன்றிட்டன்ன' என்புழித் தொழிற்பெயர் விகுதி 'து' புணர்ந்து கெட்டதெனக. நீர்மை-தன்மையை.

௪௫. 'முறுவல் முல்லை முகை முத்தென்று' என மாறுக. முறுவல்-பற்கள். முகை-அரும்பு. புறங்காடு-சுடுகாட்டில். உதிர்ந்து உக்க-சிந்திக் கிடக்கின்ற; இஃதொரு பொருட் பன்மொழி. பல் என்பு-பற்களையும் எலும்புகளையும்.

௪௬. குடரும்-குடலும்; இது மொழியீற்றுப்போலி. கொழுவும்-கொழுப்பும். குருதியும்-இரத்தமும். என்பு-எலும்பும். தொட

ரும்-(ஒன்றோடொன்று) தொடர்ந்து நிற்கும். தடியும்-தசையும். வழும்பும்-நிணமும். எத்திறத்தான்-எந்தப் பகுதியானவன்; இதற்கு 'என்ன மேம்பாடுடையன்' என்பது மொன்று.

௪எ. குழம்பு ஊறி-மலக்குழம்பு சுரத்தலின். உவர்த்தக்க-அருவருக்கத்தக்க. ஒன்பதுவாய்-நவத்துவாரங்களாகிய. புலனும்-உறுப்புகளெல்லாம், கோதி அலைக்கும்-சிதறி வீசுகின்ற. கும்பத்தை-(மகளிரது) உடம்பாகிய பாண்டத்தை. பெய்வளாய்-இது 'பெய்வளை' என்பதன் ஈறுதிரிந்த விளி. என்னும்-என்பன்; இது செய்யு மென்னு முற்று. மீ-மேல். கருந்தோலால்-பெரிய தோலினால். கண்விளக்கப்பட்டு-கண்ணொளி தரப்பெற்று அஃதாவது கண்கவரப்பெற்று என்பதாம். 'பேதை என்னும்' என்றியைக்க.

௪அ. பண்டம்-(உடம்பாகிய) பண்டத்தினிழிவை. அறியார்-அறியாராகி; இது முற்றெச்சம். படு சாந்தும்-பூசப்பெற்ற சந்தனத்தையும். கோதையும்-மாலையையும். பாராட்டுவார்-விரும்பிப் புகழ்வார்; இது வினையாலணைந்த பெயர். முடை சாகாடு-முடைநாற்றத்தையுடைய (உடம்பாகிய) வண்டி. அச்சிற்றுழி-(உயிராகிய) அச்சு முறிந்து இறந்தபொழுது; 'இற்றுழி' என்புழி அகரந் தொக்கதென்க. பேர்த்திட்டு-தள்ளி. 'குத்தல் கண்டிலர் கொல்' என்றியைத்துப் பொருள்கொள்க.

௪௯. கழிந்தார் - இறந்தவர்களுடைய. இடுதலை-(இடுகாட்டிற்) சிந்திக்கிடக்கின்ற தலைகள். உட்க-அஞ்சும்படி. குழிந்து ஆழ்ந்த-மிக ஆழ்ந்திடுகின்ற. கண்ணவாய் - கண்களையுடையவாய். ஒழிந்தாரை-(இறவாது) நின்றவர்களை (நோக்கி). போற்றி-(மனத்தைப் பொறிவழிச் செல்லாது) பாதுகாத்து. நெறி-(துறவறமாகிய) நல்வழியில். இதன் பண்பு இற்று-இவ்வுடம்பின் தன்மை இப்படிப்பட்டது. சால-மிக. சாற்றுங்கொல்-சொல்லும் போலும். இது தற்குறிப்பேற்றவணி; கொல்-அவ் வணிக்கு உருபாய் வரும் இடைச்சொல்.

இய. உயிர்போயார்-இறந்தவர்களுடைய, செம்மாப்பவரை-(மகளிர்மாட்டு) மயங்கிக்கிடப்பவரை; அல்லாப்பவர், சோகாப்பவர் என்பனபோலச் ‘செம்மாப்பவர்’ என்பது ஒரு சொல். செயிர் தீர்க்கும்-அம் மயக்கமாகிய குற்றம் நீங்கச்செய்யும். கண்டு-(அத் தலைகளைப்) பார்த்து. ‘இற்று இதன் வண்ணம்’ எனப் பிரிக்க. என்பதனால்-என்று (உள்ளபடி) உணர்வதனால். தம்மை-தமது உடம்பை. ஓர் பண்டத்தன்-ஒரு பொருளின். வைப்பது-வைத்து மதித்தல்.

இக. ‘புக’ என்பது காரணப் பொருட்டில் வந்த செயவெனெச்சம். மாய்ந்தாங்கு-அழிந்தாற்போல. ‘பாவம் இல்லாது’ என மாறுக. தேய்விடத்து - குறையுங்கால். பாய்ந்தாங்கு-பாவினாற்போல். ‘நீது நிற்கும்’ என்க. ‘நீது’ என்பது குறிப்பு வினையாலணைந்த பெயர். ‘தவம்’ என்பது ஈண்டுத் துறவறத்தின் மேனின்றது. ஆம் இரண்டும் அசைகள்.

இஉ. சாக்காடு-இது ‘காடு’ விகுதிபெற்ற தொழிற்பெயர். ‘என்று’ என்னும் எண்ணிடைச் சொல்லை ‘நிலையாமை’ முதலிய நான்கொடுங் தனித்தனி கூட்டுக. தலையாயார் - உத்தமர். தங் கருமம்-தமக்கு உறுதியைச் செய்யுந் தொழிலாகிய தவத்தையே; ‘தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற்றெல்லா, மவஞ்செய்வா ராசை யுட்பட்டு’ என்றார் நாயனாரும். சத்தம்-ஈண்டு ஆகுபெயராய் வியாகரணத்திற் காயிற்று. சோதிஷம் - கணிதம்; இனி, தருக்கமெனவும் கிரகபல னுணர்த்தும் நூலெனவுங் கூறுவதுமாம். தொலைவில்லா-கற்றுமுடியாத; மேலும் ‘கல்விகரையில கற்பவர் நாட்சில’ என்றதூஉங் காண்க. பிறவிப் பெரும்பயனாகிய வீடு பேற்றிற்குக் காரணமாகிய துறவு நெறி இல்லாத கருவி நூல்களையே பொருளாக்கொண்டு ஆயுண் முழுவதும் கற்றொழிதலின் ‘பிதற்றும் பித்தரிற் பேதையாரில்’ என்றார்.

இக. இல்லம்-இல்வாழ்க்கையும்; இஃ தாகுபெயர், ‘அம்’ என்பது சாரியை. எழில்-வளர்ச்சியும்; அன்றி, எழில் வனப்புமிக்க அழகும் எனினுமாம். மீக் கூற்றம்-மேம்பட்ட சொல்லும்

அஃதாவது சொற்செலவும்; கூறப்படுதலின் 'கூற்றம்' ஆம். வலியின்றது தேகபலம், மனோபல முதலியவற்றை. 'என்றிவை' என்புழி அகரந் தொக்கது. 'மெல்ல கண்டு' என் றியைக்க; விரையாது ஆராய்ந்து அறிந்து என்பது பொருள். நெடியார்-கால் தாமதஞ் செய்யாது ; இது முற்றெச்சம். உய்யக்கொண்டு-கடைத்தேற வெண்ணி.

௯௪. உழந்தும் - அநுபவித்தும். ஒருநாளை இன்பமே - ஒரு நாளைச் சிற்றின்பத்தையே; 'ஐ' என்பது சாரியை, 'ஏகாரம் பிரிநிலை. காமுறுவர்-விரும்புவர் ; 'காமுறு' என்பது 'காமமுறு' என்பதன் விகாரம் என்ப. ஏழையார்-அறிவீனர்கள். இன்பம் இடை தெரிந்து-இன்பத்தின் சிறுமையை நடுவுநின்ற ஆராய்ந்து அறிந்து; அன்றி, இன்பம் இடைதலை அஃதாவது மாறுபடுதலை அறிந்து என்பாரு முளர். மனை ஆறு அடைவு-இல்நெறி சேர்தலை. ஆன்று அமைந்தார்-(அறிவான்) நிறைந்து (அதற்கேற்ப) ஐம்புலனும் அடங்கின பெரியோர்.

௯௫. கொன்னே - பயனின்றியே. கழிந்தன்று - கழிந்தது. இன்னே-இப்பொழுதே. துணிவு ஒன்றி என்னொடு சூழாது எழு நெஞ்சே-துணிவொடு பொருந்தி என்னொடு கலந்து (செய்யக்கடவதனை) ஆராயாது (புலன்வழிச்) செல்கின்ற மனமே! நமக்கு நன்னெறி சேர போதியோ-நமக்கு நல்ல வீட்டு நெறி கைவரத் (துறவிற்குச்) செல்வாயோ ? 'துணிவொன்றி போதியோ ?' என முடித்தலு மொன்று.

௯௬. மாண்ட-மாட்சிமைப்பட்ட. குணத்தொடு - நற்குணங்களும். மக்கள் பேறு-மக்களைப் பெறுதலும். இல் எனினும்-(தன் மனைவிக்கு) இல்லையாயினும். பூண்டான் - மணஞ் செய்து கொண்ட கணவன். கழித்தற்கு அருமையான்-அவளை நீக்குதற்குக் கூடாமையானும். மிடி என்னும் காரணத்தின் - துன்பமென்கிற காரணம் பற்றியும். மேல் முறைக் கண்ணே - மேலாகிய துறவொழுக்கத்தே (நின்று) ; இனி, '(மணஞ் செய்தற்கு) முற்பொழுதிலே' எனினும், 'முற்காலத்தில் நூல்களில்' எனினு மாம். கடி

என்றார்-(மணத்தைக்) ' கடி ' என்னுஞ் சொல்லானுஞ் சொன்னார் கள். ' கடி ' என்னுஞ் சொற்கு ' மணம் ' ' நீக்கு ' ஆகிய இரண்டு பொருள்களுண்டு. கடியத்தக்கது அஃதாவது நீக்கத்தக்கதாகலின் ' மணத்திற்கு ' கடியென்ற பெயர் தந்தனரென ஆசிரியர் காரணங் கற்பித்துக் கூறியது ' நிருக்தி ' என்னும் அலங்காரம் ; தமிழ் அணி நூலுடையார் இதனைப் ' பிரிநிலை நவிற்சி யணி ' என்பர்.

கூஎ. ஊக்கி-முயன்று. உள் உடைய-முழுவதுங் கெடும்படி தாக்கு அரும்-தடுத்தற்கு முடியாத; ' தாங்கரும் ' என்பது ' தாக்க ரும் ' என வலித்ததெனக் கூறிப் ' பொறுக்க முடியாத ' எனப் பொருளுரைப்பாரு முண்டு. தலைவந்தக்கால் - வரின்; ' தலை ' என்பது தமிழுபசர்க்க மென்பர். நீக்கி-(அத்துன்பங்களைத்)தள்ளி. நிறூஉம்- (அவ்விரதங்களை) நிலைநிறுத்துகின்ற. உரவோரே - மன வலி யுடையாரே. திருவத்தவர் - பாக்யசாலிகள் : இச் சொல்லில், 'அத்து,' 'அ' என்பன சாரியைகள்.

கூஅ. 'பொறப்பதன்றிப் பரிவதூஉஞ் சான்றோர் கடன்' என்க.. ' பொறுப்பது ' என்புழி எச்சவும்மை தொக்கது. வினைப் பயத்தால் - தீவினையின் பயனால். உம்மை - மறுமையில். எரிவாய் நிரயத்து- தீ நிரம்பிய நரகத்தில் ; இனி, ' எரிகிற வாயையுடைய நரகத்தில் ' எனவும், எரியின் தன்மை வாய்ந்த நரகத்தில்' எனவும் பொருள் கூறினுமாம். எரிவாய் நிரயமாவன தப்தகும்பம், கும்பீ பாகம் முதலியன. பரிவதூஉம் - இரங்குவதும் ; இஃது இன்னிசை யளபெடை.

கூகூ. மெய்-உடம்பு. ஐவாய்-ஐந்துவழிகளையுடைய. வேட்கை அவாவினை - வேட்கையாலாகிய அவாவை ; வேட்கையையும் அவா வையும் எனினுமாம். வேட்கையாவது பொருள்கண் மேற்செல் லும் பற்றுள்ளம். அவாவாவது அப்பொருள்களைப் பெறவேண்டு மென மேன்மேல் எழும் ஆசை. கைவாய் - தவ வொழுக்கத்தில். கலங்காமல் காத்து-(தன் மனங்) கலங்காதபடி தடுத்து. உய்க்கும்- (மனத்தைச்) செலுத்தும். விலங்காது-தவறாது.

கூ0. மீதூர-மேன்மேல் மிக. காமுறுவர்-விரும்புவர். இசை தொறும்-(தம்மிடத்துப்) பொருந்துந் தோறும். இன்னுமை-(அதனால் வரக்கடவதாகிய) துன்பத்தை. பசைதல் பரியாது - விரும்புதலைக்கொள்ளார். மேல்-மேலோர் ; இது பண்பாகு பெயர். மற்று, ஆம் அசைகள்.

கூக. மதித்து இறப்பாரும்-(தம்மை) நன்கு மதித்துச் செல்வாரும். இறக்க-செல்க. மதியா-நன்கு மதியாது ; வினையெச்ச விகுதி புணர்ந்து கெட்டது. மிதித்து - (தம்மை) அவமதித்து. ஈயும்-ஈயென்கிற பறவையும் ; உம்மை இழிவு சிறப்பு. காயும் - (தம்மையும் பிறரையும்) வருத்துகின்ற. கதம்-கோபம். 'அஃதறிவார்' என்புழி ஆய்தம் மெய்போல ஒலித்தது.

கூ௨. தண்டா-நீங்காத. தாங்காது-தரியாது. கண்டுழி எல்லாம் - கண்டவிடங்களிலெல்லாம்; 'கண்டுழி' என்புழி அகரந் தொக்கமை காண்க. துறப்பவோ ?-விடுவார்களோ ? விடாரென்றபடி. அடி பெயராது - வைத்த காலைப் பெயர்க்க வொட்டாதபடி. 'இளி மண்டிவந்த போழ்தின்' என முடிவு செய்க ; அதன் பொருள் 'இழிவு (இடையீடின்றி) நெருங்கிவந்த காலத்தும்' என்பதாம் ; சிறப்பும்மை தொக்கமை தெரிக. முடிகிற்கும்-(உயிர் துறவாது நின்று தாங் கொண்ட விரதத்தை) முடிக்கவல்ல. உள்ளத்தவர் மனவுறுதி யுடையார் ; இது பிறவினைப் பொருளின் வந்த தன்வினை, இதனை வடநூலார் 'அந்தர்ப்பாவிதணிச்' என்ப.

கூ௩. 'ஒருவன் தன் வாய் காவாது' என் றியைக்க 'யாகாவாராயினு நாகாக்க' என்றார் நாயனாரும். சொல்-தீச்சொல். ஓவாதே - ஒழியாது. ஓவாதே ஆய்ந்து - ஒழியாது நூல்களை ஆராய்ந்து. அமைந்த கேள்வி-நிறைந்த (நூற்) கேள்வியோடு கூடிய. காய்ந்து - இது செயவெ னெச்சத்திரி பென்க. கறுத்து-கோபித்து, 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

கச. நேர்த்து-எதிர்த்து; இது நேர்ந்து என்பதன் வலித்தல். நீர் அல்ல-தகுதியற்ற சொற்களை. வேர்த்து - (மனம்) புழுங்கி. விழுமியோர்-சீரியோர்; 'விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்' என்பது தொல்காப்பியச் சூத்திரம். ஓர்த்து-இது 'ஓர்ந்து' என்பதன் வலித்தல். 'ஊர் கேட்ப உரைத்து' என மாறுக. உராய்-(எங்கும்) திரிந்து. 'தூண் முட்டும்' என்பது 'தனக்குத் தானே கேடு விளைத்துக் கொள்ளும்' என்னும் பொருட்டு.

கரு. இளையான்-இளமைப் பருவ முடையான். 'அடக்கம்' என்புழிப் பிரிநிலை ஏகாரந் தொக்கது. ஈண்டு அடக்கமாவது மனம் பொறிவழிச் செல்லாது நிறுத்தல். கிளை பொருள் - மேன்மேல் வளரும் பொருள். 'கொடைப் பயன்' என்பது 'கொடையாகிய பயன்' என விரியும். ஒறுக்கும்-அழிக்கவல்ல. மதுகை-வலிமையும், உரன்-(அவ் வலிமையைக் கால மிட முதலியன அறிந்து காட்டவல்ல) அறிவும்; இனி, மதுகை உரன்-'மிக்க வலிமையை' எனினுமாம்.

கசு. கயவர்-மூடர். 'வாய்' என வேண்டாது கூறினார்; அதன் இழிவு தோன்றற்கு. 'கல் எறிந்தன்ன இன்னாச் சொல்' என்க. உய்ப்பர்-(தமது விரதத்தைச்) செலுத்துவர். இடு நீற்றால்-(மந்திரித்து) எறிந்த விபூதியினால். வல்லை-விரைவின்; அஃதாவது எறிந்த அப்போதே. பை-படம். குடிமையான்-உயர்குடிப் பிறப்பின் தன்மையான். வாதிக்கப்பட்டு-தடுக்கப்பட்டு.

கஎ. மாற்றாராய்-பகைவராய். தம் மாறு நின்று ஏற்பார்க்கு-தமது பகைமையை எதிர்கொள்ள நிற்பவரிடத்தே. இது வேற்றுமை மயக்கம். ஏலாமை - (தாம் அப் பகைமையை) மேற்கொள்ளாமை. ஆற்றாமை-பொறாது; இது வினையெச்சம். இன்னாதுன்பந்தருவனவற்றை. அவரை - அவர்க்கு; இதுவும் வேற்றுமை மயக்கம்.

கஅ. ஒடினும்-கழியினும்; உம்மை சிறப்பு. நீசர்-கீழ்மக்கள். பரக்கும்-மேன்மேல் வளரும். சுடும் காலை-காய்ச்சப்படும்போது. வெப்பம்-சூடு. சான்றோர்-பெரியோர்.

௬௧. ஓராதே-நினையாமலே; ஏகாரம் தேற்றத்தொடு இரக்க முணர்த்திற்று. ஆற்ற-மிக. தவற்றினும்-சோர்வானும்; ஈண்டு உம்மை தொக்கதென்க: இனி, (அவர் செய்த) 'அபகாரத்தால்' என்பாரு முளர். நீங்கு ஊக்கல்-தீமை செய்ய முயலுதல். வான்றோய் குடிப்பிறந்தார்க்கு - வானின் உயர்ச்சி பொருந்திய குடியிற் பிறந்தவர்க்கு; 'வானுயர் தோற்றம்' என்பதற்குப் பொருள் கூறினை பரிமேலழகர் "வானுயர் தோற்றம்' என்பது 'வான்றோய் குடி' என்றாற்போல இலக்கணை வழக்கு" என்பதூஉங் காண்க.

௬௰. கூர்த்து-(சினம்) மிகுந்து. கௌவிக்கொள-கடித்துப் பிடுங்க. பேர்த்து-மாறுபட்டு. நீர்த்தன்றி-தகுதியுடைய சொற்களை யன்றி. மீட்டு சொல்பவோ-மாறாக (அப்படிப்பட்ட சொற்களைச்) சொல்லுவாரோ? சொல்லா ரென்றபடி. 'வாயான்' என வேண்டாது கூறினார், நல்ல சொற்களையே பயின்றதென அதன் சிறப்பு தெரித்தற்கு. இஃது எடுத்துக்காட் டுவமை; இதனை வட நூலார் திருஷ்டாந்தாலங்கார மென்ப. எடுத்துக்காட் டுவமையாவது உபமான வுபமேயங்களைத் தனித்தனி நிறுத்தி இன்னது உபமானம் இன்னது உபமேயம் எனத் தோன்ற இடையில் உவம வுருபு கொடாமற் கூறுவது.

௭௧. கோதை - மாலைபோல விழுகின்ற. வரை - மலைகளை யுடைய பேதையோடு-அறிவிலியோடு; 'பேதை' என்பது பண்பாகுபெயர். யாதும்-உம்மை முற்றும்மை. உரைப்பின்-சொன்னால். பேதை சிதைத்து உரைக்கும்-அறிவிலி வரம்பு கடந்து பேசுவன். ஒல்லும் வகையான்-கூடிய மட்டில். வழுக்கி-தப்பி. கழிதலே-(அவனைவிட்டு) நீங்குதலே; ஏகாரந் தேற்றம். இஃது ஆறே உமுன்னிலை.

௭௨. நீர் அல்ல-தகுதியற்றனவாகிய சொற்களை. தாரித் திருத்தல்-பொறுத்திருத்தல். மற்று-(அதற்கு வேறாகிய) பொறுமையை. 'ஒரும்'-அசை; 'அஞ்சுவதோரு மறனே' என்புழிப் போல. 'ஞாலம்' என்பது ஈண்டு உயர்ந்தோர்மேலது. சமழ்மையா-பழிப்புக் கேதுவாக.

எங. காதலார்-உள்ளன்புடையார். கடுஞ்சொல்-செவிக்கின்னாத சொல். ஏதிலார்-பகைவர். உவந்து உரைக்கும்-மகிழ்ந்து சொல்லும். இன் சொல்லின் -செவிக்கினிய சொல்லினும். மாதர்-அழகு பொருந்திய. சேர்ப்ப-கரையையுடைய அரசனே! ஆவது அறிவார்ப்பெறின் - (தமக்கு) நன்மையாவதனை அறியவல்லாரைப் பெற்றால்; பெறுதலின் அருமை தோன்றப் 'பெறின்' என்றார்.

எச. அறிவது-அறியவேண்டியவற்றை. அடங்கி-பொறுமையுடையராய். அஞ்சுவது - அஞ்சத்தக்க பழிபாவங்களுக்கு. உறுவது-செய்யவேண்டியவற்றை. பெறுவதனால்-பெற்ற பொருள்களான். அரிது-இல்லை. அறிவது, அஞ்சுவது, உறுவது, பெறுவது என்பன சாதியொருமை. ஒரு பெயர் ஒருமையீறு தோன்ற நின்றும் பன்மைப் பொருளைத் தரின் அது சாதியொருமை யென்ப.

எரு. வேற்றுமை - (நான் நீ என்கிற) வேறுபாடு. கலந்து-மனங் கலந்து. நட்டக்கால்-சிநேகித்தால். தேற்றா ஒழுக்கம்-அறியாச் செய்கை; (பிறர்க்கு) அறிவிக்கக் கூடாச்செய்கை எனினுமாம். 'தேற்றா' என்பது தன்வினை பிறவினைகட்குப் பொதுவினை. ஆற்றும் துணையும்-கூடியமட்டில். தூற்றாதே-(அச் செய்கையைப்) பலரறியச் சொல்லாதே. தூரவிடல்-தூரத்தேவிடுக; 'விடல்' என்பது அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள்.

எசு. இன்னா - துன்பந்தருவனவற்றை. இனிய ஒழிக என்று-(அவை) இன்பந்தருவனவாய் விடக்கடவனவென்று; அகரந் தொக்கது. தன்னையே - (அச் செய்கைக்குக் காரணமாகிய தீவினையை முற்பிறப்பிற் செய்த) தன்னையே எனவும், (முன் நன்கு ஆராயாது அவரொடு நட்புக்கொண்ட) தன்னையே எனவும் பொருள் கூறுப. நோவின் அல்லது - வெறுத்துக்கொள்வதன்றி. துன்னி கலந்தாரை-நெருங்கி நட்புக்கொண்டாரை. கைவிடுதல்-சோரவிடற்க; இது தல்லீற்று வியங்கோள். கானகம்-காட்டைச் சார்ந்த. விலங்கிற்கும்-மிருகத்திற்கும்; உம்மை இழிவு சிறப்பு. வின்னல்-(கூடிப்) பிரிதல். அரிது-அருமையுடைத்து.

எஎ. கோடல்-கொள்ளுதல். அரிய-(பொறுத்தற்கு) அரிய குற்றங்களை. பொறுப்ப-பொறுப்பர். 'நல்ல செய்வார்க்குத் தமர் அரியரோ!' என முடிக்க. தமர் - நண்பராவார். ஓகாரம் எதிர் மறை. ஒல்லெனல் ஒலிக்குறிப்பு.

எஅ. வற்றி-(உடம்பு) உலர்ந்து ; (உண்ட உணவு) முற்றும் அறுதலின் அஃதாவது ஜீர்ணித்தலின். ஆற்ற - மிக. பண்பி லார்க்கு - குணமில்லாதார்க்கு ; பண்பாவது எல்லா ரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல், 'பண்பெனப்படுவது பாடறிந்தொழு கல்' என்றார் கலித்தொகையினும். அற்றம் - (தமது) வறுமை. உரையற்க என்பது எதிர்மறை வியங்கோள். மறைக்குந் துணை யார்க்கு-(பசியை) நீக்குந் தன்மையானர்க்கு ; 'மறைக்கும்' என்பது இப் பொருட்டாதலை 'தம் வயிற் குற்ற மறையாவழி' என்னுந் திருக்குறளினுங் காண்க : இனி, அதற்கு 'வெளியிடா தொழி யும்' என்னும் பொருளும் பொருந்துதல் அறிக. தம்மை துறக் கும் துணிவிலாதார்-தமது உயிரை மாய்க்கும் மனவுறுதி யில்லா தார். 'அற்றம் உரைப்ப' என்றியைக்க.

எகூ. பயந்த ஆங்கு-தந்த அவ் வழியில் ; அகரந் தொக்கது. தலைவரினும்-நேரினும்; 'தலை' என்பது தமிழுபசர்க்க மென்ப. இன்பத்தின் பக்கம்-அவ் வின்பம் வருகிற வழியில். இருந்தைக்கு- இருந்த உனக்கு ; இது வினையாலணைந்த பெயர்; 'இருந்தைக்க' என்புழி நான்கனுருபு அகரச்சாரியை பெற்றது, 'கு ஐ ஆனென வரூஉ மிறுதி, அ ஒடு சிவணுஞ் செய்யுளுள்ளே' என்பதோத் தாகலின். ஒழியாமை கண்டாலும்-நீங்காதிருத்தலை அறிந்தாலும். பழி ஆகா ஆறே-(அறிவுடையோர்) பழிப்பு உண்டாகாத வழியே. தலை-தலைமையானது.

அ0. தக்கார்-பெரியோர். ஊன்-தசை. உண்ணார் கைத்து உண்ணற்க - உண்ணத்தகாதார் கைப்பொருள்கொண்டு உண்ண வேண்டா; உண்ணத்தகாதார் குரு, தெய்வம், வறிய ராதியர் ; அவர் பொருள்கொண்டு உண்ணுதல் பெரும்பாவமென்பது அற

நாற் றனிபு.' 'கைத்து' என்பதற்கு 'உணவு' எனப் பொருள் கொண்டு உண்ணத்தகாதார் தாழ்ந்த வருணத்தோரெனவும், அன்போ பேசாியாதாரெனவும் உரைகூறுவாரு முளர். 'உயிர் சென்று தான்படினு முண்ணார்கைத் துண்ணுப், பெருமையிற் பீடுடைய தில்' (இனியவை நாற்பது) என்றார் பிறரும். கவிந்த-மூடிய. இடைமிடைந்த - இடையிற் கலந்த.

அக. பெரிது - பேரளவுடையது. நிச்சம் - உண்மையை; இது 'நிஸ்சய' மென்னும் வடமொழியின் விகாரம். கோ கொலை-ராஜதண்டனை. நிச்சலும்-எந்நாளும்; 'நிச்சல்' என்பது 'நித்யம்' என்னும் வடமொழிச் சிதைவு. கும்பிக்கே - நரகத்திற்கே. கூர்த்த வினை-(எதுவாகிய) மிக்க பாவமாம். தாரம்-மனைவியை. நம்பற்க-விரும்பா தொழிக! 'நம்பு மேவு நசையாகும்மே' என் றிருத்தல் கண்டு கொள்க.

அஉ. கேண்மை-நட்பு. பெருமை-மேம்பாடு. நச்சுவார்-விரும்புவாரை. அறம், புகழ், கேண்மை, பெருமையென்றதற் கேற்பப் பாவம், பழி, பகை, அச்சமெனல் முறையாயினும்,செய்யுளுக்கிப் பிறழவைத்தார். பொருள் என்பது ஈண்டுப் பதப் பொருள் என்னும் பொருட்டு. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. 'பகை பாவ மச்சம் பழியென நான்கு, மிகவாவா மில்லிறப்பான் கண்' என்றார் திருவள்ளுவனாரும்.

அங. போதரும்போது - மீண்டு வரும்போது. துய்க்குமிடத்து - அநுபவிக்கும்போது. தோன்றாமல்-வெளிப்படாதபடி. காப்பு - காத்துக்கொள்ளுதல். உட்கான் - அஞ்சாதானாகி; இது முற்றெச்சம்.

அச. கைபுறின்-அகப்படின். கால் குறைபும்-கால் வெட்டப்படும்; 'கால்' என்பது மற்றை புறப்புக்களையும் உபலக்கணத்தா லுணர்த்தும்; ராஜதண்டனை கோருமென்பது கருத்து. ஆணின்மை-ஆண்மையில்லாமையாகிய தீயொழுக்கத்தை; ஆண்மையாவன நிறை, பொறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பன. அவை புள்வழி

நல்லொழுக்கக் தலைசிறத்தலின், ஆணின்மை தீயொழுக்கமாயிற் றென்க. நிரயத்துன்பம்-நரகவேதனை. துச்சாரி-தீச்செய்கை புரி பவனே! எனைத்து-எவ்வளவிற்று? இது 'எத்தனைத்து' என் பதன் மரூஉ.

அ௬. செம்மை-நடுவுநிலைமை. ஒன்று இன்றி-சிறிதும் இல் லாது; ஈண்டுச் சிறப்பும்மை தொக்கது. கொம்மை-திரட்சியாகிய. வரி-தொய்யிலெழுதிய. மரீஇ-சேர விரும்பி. உம்மை-முற்பிறப் பில். இம்மை-இப்பிறப்பில். அலியாகி-நபும்சகராய் ஆடி-கூத்தாடி.

அ௭. பறை அறைந்து - வாத்தியங்களைக் கொட்டுவித்து; 'அறைந்து' என்பது பிறவினைப் பொருளில் வந்த தன்வினை. செய்து-ஈண்டுப் 'படு' விகுதி தொக்கது. கடி - காவல். மெல் இயல்-மேன்மையாகிய தன்மையுடைய. இல்லாள் ஆ-வீட்டிலுள் ளவளாக. 'என்' என்பது 'எவன்' என்பதன் விகாரம். ஏதில்- ஏதிலன்; இது பண்பாகுபெயர். 'நோக்கு' என்பது முதனிலைத் தொழிற் பெயர்.

அஎ. அயல்-அயலார்; இஃது தாகுபெயர். அம்பல் எடுப்ப- பழித்தல் செய்ய. தமர்-உறவினர். பரீஇ-வருந்த; இது செய வெனெச்சத் திரிபு. வம்பலன் - அயலானது. மைந்துற்று - களிப் படைந்து. நம்பும் நிலைமை இல் - நம்பத்தக்க நிலைமை இல்லாத. துப்புரவு - அநுபவம் நக்கி அன்னது - நக்கினாற் போன்ற தன் மையை அஃதாவது அபாயத்தைத்.

அஅ. பரவா-வளராமலும். வெளிப்படா-வெளியாகாமலும். பல்லோர்கண் தங்கா - பலரிடஞ் சென்று தங்காமலும். உரவோர் கண் காமநோய் - அறிவுடையாரிடத்தே தோன்றும் காமநோ யானது. விரவாருள் - (அந்நோய்) கலவாதாரிடத்தே; பகைவ ரிடத்தே என்பாருமுளர். நாணுப்படல் அஞ்சி - வெட்கப்படுதற் குப் பயந்து. யாதும் உரையாது-சிறிதும் வெளிப்படாது; இது குறிப்பு மொழி: இனி, (விரவார்) பழிக்கச் சிறிதும் இடமில்லாத படி எனினுமாம். ஆறிவிடும் - அடங்கிப்போம். ஓஒ கொடிதே- (அது) மிகவும் கொடியது! ஏகாரம் தேற்றம். வெளிப்பட்டொழி

யாது உள்ளே நின்று மிக வருந்தி அடங்குதலின், அறிவுடையார் காமம் மிகவுங் கொடிது எனப்படுத லுணர்க.

அக. அம்பும்-பாணமும். அழலும்-நெருப்பும். அலிர் கதிர் ஞாயிறும்-விளங்குகின்ற கிரணங்களையுடைய சூரியனும். ஞாயிறு-நாயிறு; இது முதற்போலி. வெம்பி - கொதித்து. புறம் சுடும்-உடம்பை வருத்தும். கவற்றி-கவலைப்படுத்தி. அவற்றினும்-அவ்வம்பு முதலியவற்றினும்.

கூ0. உரு கெழு - உருவம் மிக்க; 'உருவுட் காகும்' என்றிருத்தலின், அச்சம் மிக்க எனினுமாம். உயல் ஆகும் - தப்பிப் பிழைக்கக் கூடும். சுடுமே-சுடாதுவிடாது. குன்று ஏறி ஒளிப்பினும்-மலைமேலேறி ஒளித்துக்கொண்டாலும். 'செந்தீ' என்புழித் தீக்குச் செம்மை பிறிதினியைபு நீக்கிய விசேடணமன்று; இயற்கை பற்றிய தொன்றென்க. இப் பாவின்கண் வேற்றுமையணி இருத்தல் காண்க.

கூக. இல்லாவிடத்தும் - (செல்வம்) இல்லாதகாலத்தும். இயைந்த அளவினல் - கூடியமட்டில்; இது வேற்றுமை மயக்கம். பெரிது உவந்து-மிக மகிழ்ந்து. மெல்ல-சிறிதாக. கொடையொடு-கொடுத்தலொடு. பட்ட-கூடின. ஆண்டைக்கதவு-அவ்வுலகத்துக் கதவுகள். 'ஆண்டை' என்பதில் 'ஐ' சாரியை. அடையா-மூடப்படா.

கூஉ. முன்னரே-உங்கள் கண்ணெதிரில்; பிரதியக்ஷமாக என்றபடி. சாம் நாள் - மரண காலம். முனி தக்க மூப்பு - (யாவரும்) வெறுக்கத்தக்க கிழப்பருவம். பின்னரும்-மேலும். பீடு அழிக்கும் நோய் - வலிமையைக் குலைக்கும் நோய்கள். கைத்து - கைப்பொருள். கொன்னே-வீணுக. பரவன்மின்-(பொருளை மேலும் மேலும் தேடுதற்கு) அலையாதிரும். பற்றன்மின் - (பொருளை உலோபத்தால்) இறுகப்பிடியாதிரும். பாத்து உண்மின்-(சோறு முதலியவற்றைப்) பகுத்துக்கொடுத்து உண்ணும்; 'பாத்து' என்பதில் 'பகு' என்பதன் மரூஉவாகிய 'பா' பகுதி. யாதும் கரவன்மின்-ஒன்றையும் ஒளியாதிரும்.

௧௧. நடுக்கு உற்று - (வறுமையால்) உடல் நடுங்குதல் அடைந்து; 'நடுக்கு' என்பது முதனிலை திரிந்த தொழிற்பெயர். தன் சேர்ந்தார்-தன்னைச் சேர்ந்தாரது. துடையார்-நீக்கார். துய்ப்பி னும் - அநுபவித்து வரினும். ஈண்டுங்கால் - வளருங்காலத்தில். மிடுக்கு உற்று-வலிமைபொருந்தி; 'இடுக்கு உற்று' எனப் பிரித்து 'இறுக்குதல் பொருந்தி' எனவும், 'உலோபகுணத்தைப் பொருந்தி' எனவும் பொருள் கொள்வர். விடுக்கும் வினை உலந்தக்கால்- (முற்பிறப்பிற்செய்து குறையாக) விட்ட நல்வினை முடியுமாயின். 'தன் சேர்ந்தார்', 'தான் துய்ப்பினும்' 'துடையார்' என ஒருமை யும் பன்மையும் மயங்குதல் காண்க.

இப்பாவிற்கு அநுவயம் 'கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்கா லீண்டும், விடுக்கும் வினையுலந்தக்கால் 'மிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்,' நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்' ஆகலின், இஃது அடிமறி மாற்றுப் பொருள் கோ ளென்ப.

'பொருளழிதற்குக் காரணம் வினைப்பயனேயன்றி ஈகை யன்று' என்பது இப்பாட்டின் கருத்தென்க.

௧௪. இம்மி யரிசித் துணையானும்-மத்தங்காய்ப் புல்லரிசி யளவாயினும்; 'ஆன்' என்பது ஆயின் என்பதன் விகாரம். வைகலும்-நாடோறும். நும்மில் இயைவ-உங்களாற் கூடியவற்றை; இது வேற்றுமைமயக்கம். அன்றி, 'உங்களிடத்தில் அடைந்துள்ள பொருள்களில்' எனப் பொருளுரைத்தலு மொன்று. உம்மை- முற்பிறப்பில். என்பர்-என்றிகழப்படுவர்; ஈண்டுப் 'படு' விகுதி தொக்கது. குண்டு - ஆழம். குண்டு நீர் - ஆழி, கடல். அடா அடுப்பினவர்-(தமக்கென உணவு) சமைக்காத அடுப்பினையுடைய இரப்போர். அளபெடைகள் செய்யுளோசை நிறைக்க வந்தன.

௧௫. மறுமையும்-மறுமைப்பயனையும். அஃதாவது துறக்க வின்பத்தையும். இம்மையும் - இம்மைப்பயனையும் அஃதாவது புகழையும். மறுமை இம்மை என்பன ஆகுபெயர்கள். உறம்

ஆறு-தக்கபடி. இயைவ-இது வினையாலணைந்த பெயர். கொடுத்தல்-ஈக; இது 'தல்' ஈற்று வியங்கோள். இரவாமை-யாசியாமை. ஈதல் இரட்டி உறும் - கொடுத்தலின் இருமடங்கு நல்லதாம் மூன்றாமடி முற்றுமோனை.

கசுசு. நடு ஊர்-ஊர் நடு; இது முன் பின் னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை, அஃதாவது இலக்கணப்போலி. வேதிகை சுற்றுக்கோள் புக்க-மேடையினாற் சூழ்ந்து கொள்ளுதலைப் பொருந்திய. 'சுற்றுக்கோள்' என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயர். படுபனை அன்னர்-பயன் தருகின்ற பெண் பனையை ஒப்பர். பலர் நச்ச வாழ்வார்-பலருந் தம்மை வந்து அடைந்து பயன் கொள்ள வாழ்பவர். குடி கொழுத்தக்கண்ணும்-குடும்பம் செல்வத்தான் மிக்கவிடத்தும். இடு காட்டுள் ஏற்றைப் பனை (அன்னர்)-சுடுகாட்டிலுள்ள ஆண் பனையை ஒப்பர்; ஏற்றை-ஆண்பெயர், 'ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லாம், ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் 'எல்லாம் என்றதனால், சிறு பான்மை ஆற்றலில்லாதனவுங் கொள்க; அது 'இடுகாட்டு ளேற்றைப்பனை' என்பது போன்று வருவன என உரை வரைந்தமை காண்க.

கஎ. பெயற்பால்-பெய்தற்கு உரிய காலத்தில்-இனி, 'பெய்தற் குரிய பகுதியாகிய நீரை' எனினுமாம். 'பொய்யாக்கண்' என்பது எதிர்மறை வினையெச்சம்; இதனை ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சத் தொடராகக் கொள்வாரு முண்டு. உலகம்-உயர்ந்தோர்; அறிஞர்கள். செயற்பால-செய்யத்தக்க உதவிகளை. கயல் புலால்-மீன்களின் புலால் நாற்றத்தை. புன்னை-புன்னை மலர்கள். கடியும் - நீக்கும். சேர்ப்ப - கரையை யுடையவனே [சேர்ப்பு-கரை]. உலகு-உலகத்துயிர்கள். உய்யுமாறு-பிழைக்கும் வழி. என்னை-யாதோ? ஐ-சாரியை.

கஅ. ஏற்றகை-(யாசகனது) ஏந்திய கையை. மாற்றாது-மறுக்காமல். என் ஆனும்-யாதொன்றாயினும். தாம் வரையார்-

௧௧. நடுக்கு உற்று - (வறுமையால்) உடல் நடுங்குதல் அடைந்து; 'நடுக்கு' என்பது முதனிலை திரிந்த தொழிற்பெயர். தன் சேர்ந்தார்-தன்னைச் சேர்ந்தாரது. துடையார்-நீக்கார். துய்ப்பி னும் - அநுபவித்து வரினும். ஈண்டுங்கால் - வளருங்காலத்தில். பிடுக்கு உற்று-வலிமைபொருந்தி; 'இடுக்கு உற்று' எனப் பிரித்து 'இறுக்குதல் பொருந்தி' எனவும், 'உலோபகுணத்தைப் பொருந்தி' எனவும் பொருள் கொள்வர். விடுக்கும் வினை உலந்தக்கால்- (முற்பிறப்பிற்செய்து குறையாக) விட்ட நல்வினை முடியுமாயின். 'தன் சேர்ந்தார்', 'தான் துய்ப்பினும்' 'துடையார்' என ஒருமை யும் பன்மையும் மயங்குதல் காண்க.

இப்பாவிற்கு அநுவயம் 'கொடுத்துத்தான் துய்ப்பினு மீண்டுங்கா லீண்டும், விடுக்கும் வினையுலந்தக்கால் 'பிடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்,' நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்' ஆகலின், இஃது அடிமறி மாற்றுப் பொருள் கோ ளென்ப.

'பொருளழிதற்குக் காரணம் வினைப்பயனேயன்றி ஈகை யன்று' என்பது இப்பாட்டின் கருத்தென்க.

௧௪. இம்மி யரிசித் துணையானும்-மத்தங்காய்ப் புல்லரிசி யளவாயினும்; 'ஆன்' என்பது ஆயின் என்பதன் விகாரம். வைகலும்-நாடோறும். நும்மில் இயைவ-உங்களாற் கூடியவற்றை; இது வேற்றுமைமயக்கம். அன்றி, 'உங்களிடத்தில் அடைந்துள்ள பொருள்களில்' எனப் பொருளுரைத்தலு மொன்று. உம்மை- முற்றிறப்பில். என்பர்-என்றிகழப்படுவர்; ஈண்டுப் 'படு' விகுதி தொக்கது. குண்டு - ஆழம். குண்டு நீர் - ஆழி, கடல். அடா அடுப்பினவர்-(தமக்கென உணவு) சமைக்காத அடுப்பினையுடைய இரப்போர். அளபெடைகள் செய்யுளோசை நிறைக்க வந்தன.

௧௫. மறுமையும்-மறுமைப்பயனையும். அஃதாவது துறக்க வின்பத்தையும். இம்மையும் - இம்மைப்பயனையும் அஃதாவது புகழையும். மறுமை இம்மை என்பன ஆகுபெயர்கள். உறம்

ஆறு-தக்கபடி. இயைவ-இது வினையாலணைந்த பெயர், கொடுத் தல்-ஈக; இது 'தல்' ஈற்று வியங்கோள். இரவாமை-யாசியாமை. ஈதல் இரட்டி உறும் - கொடுத்தலின் இருமடங்கு நல்லதாம் மூன்றாமடி முற்றுமோனை.

கசு. நடு ஊர்-ஊர் நடு; இது முன் பின்னாகத் தொக்க ஆறும் வேற்றுமைத் தொகை, அஃதாவது இலக்கணப்போலி. வேதிகை சுற்றுக்கோள் புக்க-மேடையினாற் சூழ்ந்து கொள்ளு தலைப் பொருந்திய. 'சுற்றுக்கோள்' என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயர். படுபனை அன்னர்-பயன் தருகின்ற பெண் பனையை ஒப்பர். பலர் நச்ச வாழ்வார்-பலருந் தம்மை வந்து அடைந்து பயன் கொள்ள வாழ்பவர். குடி கொழுத்தக்கண்ணும்-குடும்பம் செல்வத்தான் மிக்கவிடத்தும். இடு காட்டுள் ஏற்றைப் பனை (அன்னர்)-சுடுகாட்டிலுள்ள ஆண் பனையை ஒப்பர்; ஏற்றை-ஆண்பெயர், 'ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லாம், ஏற்றைக் கிளவி யுரித்தென மொழிப' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத் திற்கு நச்சினார்க்கினியர் 'எல்லாம் என்றதனால், சிறு பான்மை ஆற்றலில்லாதனவுங் கொள்க; அது 'இடுகாட்டு ளேற்றைப்பனை' என்பது போன்று வருவன என உரை வரைந்தமை காண்க.

கஎ. பெயற்பால்-பெய்தற்கு உரிய காலத்தில்-இனி, 'பெய் தற் குரிய பகுதியாகிய நீரை' எனினுமாம். 'பொய்யாக்கண்' என்பது எதிர்மறை வினையெச்சம்; இதனை ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சத் தொடராகக் கொள்வாரு முண்டு. உலகம்-உயர்ந்தோர்; அறிஞர்கள். செயற்பால-செய்யத்தக்க உதவிகளை. கயல் புலால்-மீன்களின் புலால் நாற்றத்தை. புன்னை-புன்னை மலர்கள். கடியும் - நீக்கும். சேர்ப்ப - கரையை யுடையவனே [சேர்ப்பு-கரை]. உலகு-உலகத்துயிர்கள். உய்யுமாறு-பிழைக்கும் வழி. என்னை-யாதோ? ஐ-சாரியை.

கஅ. ஏற்றகை-(யாசகனது) ஏந்திய கையை. மாற்றாது-மறுக்காமல். என் ஆனும்-யாதொன்றாயினும். தாம் வரையார்-

தாம் (இது தரலாகாததென்று) நீக்காதவராய்; 'தாம் (அவரை) நீக்காதவராய்' எனவும், தாம் (இன்னார்க்கு இன்னதைக் கொடுக்கலாமென்றும் இன்னதைக் கொடுக்கவாகாதென்றும் வரையறை செய்து கொள்ளாதவராய்' எனவும், 'தமக்கென ஒன்றையும் வரைந்து வைத்துக் கொள்ளாதவராய்' எனவும் உரை வகுப்பதுமாம். ஆற்றாதார்க்கு - (மாறுசெய்ய) வலியில்லாத வறியர்க்கு. ஆண்கடன்-ஆண் மகனது கடமையாம். ஆற்றின் - (ஒன்றைக் கொடுத்தலைச்) செய்தால். மாறு ஈவார்க்கு-(அதற்குப்) பிரதியாக மற்றொன்றைக் கொடுப்பார்க்கு. பொலி கடன்-கொழுத்த கடன்.

ஆற்றுநர்க் களிப்போ ரறவிலை பகர்வோர்
ஆற்றா மாக்க ளரும்பசி களைவோர்
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை

என்னும் மணிமேகலை யடிகள் ஈண்டு அறியத்தக்கன.

கக. இறப்ப சிறிது என்னாது-(தமக்குள்ள பொருள்) மிகச் சிறியதென் றெண்ணாமலும். முறை-(அங்ஙனஞ் செய்யின், அச் செயல்) கிரமமாக. புதவின்-வாயில் தோறும். ஐயம் புகூஉம்-பிச்சைக்குச் செல்கின்ற; 'புகும்' என்பது செய்யுளோசை நிறைக்கப் 'புகூஉம்' என அளபெடுத்தது. கடிஞைபோல-பிச்சைப் பாத்திரத்தைப் போல. பைய-மெல்ல; இது குறிப்பு வினையெச்சம். நிறைத்துவிடும் - (அறப்பயனால் அவனுயிரை) நிரம்பச் செய்யும்.

௱. கடிப்பு இடு - குறுந்தடியா லடிக்கப்படுகின்ற. கண்முரசம் - கண்ணினையுடைய முரசொலியை. இடித்து முழங்கியது-(மேகம்) இடியா நின்ற முழங்கியதை. அடுக்கிய-ஒன்றன்மே லொன்றாக அமைந்த. மூவுலகும்-சுவர்க்க மத்ய பாதாளம் என்கிற மூன்றுலகும். சான்றோர் கொடுத்தார் எனப்படுஞ் சொல்-சான்றோரால் கொடுத்தார் எனப்படுஞ் சொல்லையோவெனில்; சான்றோர்-மூன்றும் வேற்றுமைத் தொகை. சான்றோரால் எனப்படும் என இயையும்; அன்றி, 'கொடுத்தார் எனப்படுஞ் சான்றோர் சொல்' என்றியைத்து 'எனப்படும்' என்பது செய்வினைப் பொரு

ளின் வந்த செயப்பாட்டு வினையெனவும், 'சான்றோர் சொல்' ஆறும் வேற்றுமைத் தொகை யெனவுங் கொள்ப ஒரு* சாரார். 'சான்றோர்க்குக் கொடுத்தார்' என விரித்து நான்கனுருபு தொகுத் தலாய் நின்றது என்ப மற்றொரு சாரார்.

கoகு. பல் ஆவுள் - பல பசுக்களின் நடுவில். உய்த்து விடி னும்-செலுத்திவிட்டாலும். குழ கன்று-இளங்கன்றானது; 'குழ' என்பது உரிச்சொல். தாய் நாடி கோடலை வல்லதாம்-தாயைத் தேடியடைதலில் வல்லமையுடையதாம்; 'கோடலை' என்பது வேற் றுமை மயக்கம். தகைத்தே-தன்மையதே. தன் செய்த கிழவனை-தன்னைச் செய்த உரிமையுடையவனை; 'கிழவன்' என்பது 'கிழத்தி' என்பதன் ஆண்பால். நாடி கொளற்கு-தேடி யடைதலில்; இது வும் வேற்றுமைமயக்கம்.

கoஉ. உருவும்-அழகும். ஒள் பொருளும்-மேலான செல்வ மும். உட்கு-(பிறர்க்கு) அச்சத்தாலாகின்ற மதிப்பும். ஒருவழி-ஒரே தன்மையாக ; ஒருவனிடத்தும் என்பாருமுளர். ஒருவழி - யாதா யினு மொரு வழியால், ஒன்றேயும்-ஒரு நல்வினையாயினும்; அன்றி, ஒரு வழி ஒன்றேனும்-ஒப்பற்ற உயர்கதிக் கேதுவாகிய ஒரு நற் செய்கையேனும். உடம்பு இட்டு நின்று விழும் தக்கது உடைத்து - உடம்பைச் (சில நாள்) பெற்று நின்று (அவ்வுடம்பாலாகிய பயன் சிறிதுங் கொள்ளாது) வீழுந் தன்மையுடையது; 'வீழும்' என்பது ஈற்றுயிர்மெய் கெட்டு நின்ற எதிர்காலப் பெயரெச்சம்; 'தக்கது' என்பது தகை, தகுதி என்பனபோலக் குணத்தை யுணர்த்துந் தொழிற்பெயர்.

கoகூ. வளம்பட - (செல்வ முதலியவற்றால்) சிறப்படைய; அன்றி, செல்வம் உண்டாமாறு என்பது மொன்று. யார்-யாவர்? யாரும் இல்லை-ஒருவருமில்லை; இனி, யார் யாவரும் இல்லை - எப் படிப்பட்டவருமில்லை. என்பாரும் உளர், 'போகம் அவரவர் ஆற் றான் அளந்தன' என்றியைத்து 'நுகரும் இன்பம் அவரவரது ஊழ் வினையால் (முன்னரே) அளவு செய்யப்பட்டுள்ளன. 'வினை காய்'

'கள கனி' எனப் பிரிக்க. கார் என-கரிய உருவினதாக. இஃது தெடுத்துக் காட்டுவமையணி.

கO௪. உறல்பால-(ஊழ்வினையால்) நேரத்தக்க துன்பங்களை. உறுவர்க்கும் - முனிவர்க்கும். ஆகா-கூடா. பெறல்பால் அனைய வும்-பெறத்தக்க தன்மையுடைய இன்பங்களும். அன்ன ஆம்-அத் தன்மையவேயாம்; 'நீக்கல் ஆகா' என்றபடி. மாரி-மழை. வறப் பின்-பெய்யாதாயின். தருவாரும்-(அதைப்) பெய்விக்க வல்லாரும். சிறப்பின்-(அம்மழை) மிகுதியாகப் பெய்யின். அதனை தணிப்பா ரும்-அதைக் குறைக்க வல்லாரும். இனி, 'பெறல்பால் அனையவும் அன்னவாம்' என்பதற்குப் 'பெறத்தக்க தன்மையுடைய இன்பங் களைப் பெறுதல்களும் (முனிவர்க்கும்) பெறமுடியாதனவாம்' எனப் பொருளுரைத்து, இச் செய்யுள் எதிர் நிரனிறைப் பொருள் கோள் என்பாருமுண்டு.

கO௫. தினை துணையர்-தினையளவு சிறியராய். தம் தேசு உள் அடக்கி-தமது ஒளியை உள்ளடக்கிக்கொண்டு, பனை துணையர்-பனையளவு பெரியர் வைகலும்-நாடோறும். பாடு அழிந்து வாழ் வர்-பெருமை கெட்டு உயிர் வாழ்வர். மேலை வினைப்பயன் அல்லால்-முற்பிறப்பிற் செய்த தீவினைப்பயனல்லாது; 'மேலை' என்பது ஐயீற்றுப் பண்பாகு பெயர். பிற-வேறாய். நினைப்ப கிடந்தது எவன் உண்டாம் - (அதற்குக் காரணமாக) நினைக்கத் தக்கது வேறு யாதுளது? எதுவுமில்லை என்றபடி. தினை, பனையென்பன சிறுமை, பெருமைகட்குக் காட்டிய அளவை.

கO௬. ஆன்ற-சிறந்த; 'அகல்' என்பதன் மரூஉ ஆகிய 'ஆல்' என்பது இதன் பகுதியென்ப. கேள்வி - நூற் கேள்விகளான். பயன்-(பிறவிப்) பயனை. வீயவும்-(விரைவின்) இறக்கவும். வாழ்வது-(நெடுங்காலம்) வாழ்வதன் காரணம். சேதனம் என்னும் அசேறு அகத்து இன்மையால்-அறிவென்கிற அந்தச் சாரத்தை உள்ளே பெற்றிராமையால். கோது என்று-அசாரமென்று நினைத்து. இஃது ஏதுத் தற்குறிப்பேற்றவணி.

௧0எ. இடும்பை கூர் நெஞ்சத்தார் - துன்பம் மிக்க மன முடையராய் எல்லாரும் காண-யாவரும் (தம்மைப்) பார்க்கும்படி. நெடுங்கடை-பெரிய வீடுகளின் வாயில்களில். உழல்வது எல்லாம்-(பிச்சை வேண்டி) வருந்துகின்ற செய்கை யெல்லாம். 'அடம்பம்பூ' என்புழி 'அம்' சாரியை; அடம்பு-ஒரு கொடியின் பெயர். முன்னை வினை-முற்பிறப்பிற் செய்த தீவினைப்பயன்.

௧0அ. அறியாரும் அல்லர்-அறியாதவரும் ஆகார்; 'உம்மை' இழிவு சிறப்பு. அறிவது அறிந்தும்-அறியவேண்டியவற்றை அறிந்து வைத்தும்; உம்மை உயர்வு சிறப்பு; 'அறிவது' சாதியொருமை. பழியொடு பட்டவை-உலக நிந்தையாகிய தொழில்களை. வளி ஓடி-காற்று வீசுதலினால்; 'ஓடி' என்பது எச்சத் திரிபென்க. நெய்தல் - நெய்தற்பூ; இஃதொரு வகை நீர்ப் பூ. நறவு-தேன்; இது 'நறா' என்பதன் விகாரம். வினையாள்-தீவினையாள்.

௧0௯. ஈண்டு நீர் வையத்துள்-நெருங்கிய கடல் சூழ்ந்த பூமியில்; 'நீர்' என்பது ஆகுபெயர். எ துணையும்-எவ்வளவு சிறிதாயினும். தீய வேண்டார்-கொடியனவாகிய துன்பங்களை விரும்பார். 'மன்' அசை நிலை. விழை பயன் நல்லவை-(யாவரும்) விரும்பும் பயன் நல்லனவாகிய இன்பங்களேயாம்; பிரிநிலை ஏகாரம் ஈண்டுத் தொக்கதென்க. உறல் பால-(ஊழ் வினையால்) வந்து அடைதற்குரிய இன்ப துன்பங்கள். நீண்டா விடுதல்-(அவரை) அடையாமல் விடுவது. அரிது-இல்லை.

௧௧0. சிறுகா-குறையா. பெருகா - மிகா. முறை பிறழ்ந்து வாரா-(முற்பிறப்பில் செய்த) முறை மாறி வாரா. ஊறு காலத்து ஊற்று ஆகா-(துன்பம்) வருங்காலத்து ஊன்றுகோல் போல உதவி (அத்துன்பத்தை) நீக்கா. 'ஊற்று' என்பது 'ஊன்று' என்பதன் விகாரம்; அஃதீண்டு ஆகுபெயர். ஆம் இடத்தே ஆகும்-வரவேண்டிய காலத்திலே வரும். சிறுகாலை பட்ட பொறியும்-கருவில் அமையுங் காலத்தின் அமைந்து கிடந்த ஊழ் வினையும். இறு காலத்து-(தீவினையாற்) கெடுதியடையுங் காலத்தில். என்னை பரிவு-இரங்குவது என்?

௧௧௧. இசையா ஒரு பொருள்-(ஒருவற்குக்) கொடுப்பதற்குக் கூடாததொரு பொருளை. இல் என்றல்-(இரப்போர்க்கு) இல்லை யென்று சொல்லுதல். வசை அன்று-பழிப்பாகாது. வையத்து இயற்கை-உலகத்தார் இயல்பாம். நசை-விருப்பம். அழுங்க-கெடும் படி. நின்று-(கொடுப்பேனென்னும் நிலையில்) நின்று. ஓடி-நெடுங்காலங் கழித்து. பொய்த்தல்-மறுத்தல். நிரை தொடீஇ-ஒழுங்காகிய வளையல்களை யுடையவளே! செய் நன்றி-ஒருவன் செய்த வுபகாரத்தை. கொன்றாரின்-மறந்தாரது குற்றத்தினும்; 'சிறப்பும்மை' தொக்கதென்க. குற்றம் உடைத்து-(அதிகமான) குற்றத்தை யுடையது. இது மகடூஉ முன்னிலை.

௧௧௨. தக்காரும் - (அறிவொழுக்கங்களால்) தகுதியுடையாரும். தகாரும்-(அத்தகைய) தகுதியுடையாரல்லாதாரும். தம் நீர்மை-தமது இயல்பாகிய குணம். குன்றல் இலர் ஆவர்-குறைதலில்லாதாராவர். அக்காரம்-கருப்பஞ்சாற்றுக் கட்டி. கையாது-கசவாது. 'வேம்புகைக்கும்' என முடிக்க. கொரம் முன்னது இழிவு சிறப்பும் பின்னது உயர்வு சிறப்புமாம். ஆம்-அசை.

௧௧௩. கால் ஆடு போழ்தின்-செல்வம் பல்குங் காலத்தில்; 'காலாடுதல்' நினைத்த விடஞ் செல்லுதல்; இஃது இலக்கணையாற் செல்வம் பெறுதலை யுணர்த்திற்றென்க. போழ்து-'பொழுது' என்பதன் மரூஉ. 'கழி' என்பது உரிச்சொல். கிளைஞர்-கிளை போலத் தழுவுவார் என்பது சொல்லின்படி பொருள். மீனின்-நட்சத்திரங்களினும். வலா-தகாத; இஃ தீறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இடர்-துன்பம். தொடர் புடையேம்-உறவுடையோம்.

௧௧௪. வடு-குற்றம். மன்னிய மூன்றுவன அறம் பொருளின்பம். நடுவணது என்றது பொருளை. எய்த-(ஒருவன்) அடைய. இருதலையாவன அறமும் இன்பமும். எய்தும்-அடைவன். நடுவணது எய்தாதான்-இடை நின்ற அப்பொருளைப் பெறாதவன். உலை பெய்து அடுவது போலும் துயர்-(கொல்லன்) உலையினிட்டுக் காய்ச்சுவதனு லாகுந் துன்பத்தை ஒக்குந் துன்பத்தை.

'ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு'

என்னுந் திருக்குறளை ஈண்டு நோக்குக.

௧௧௫. ஆவின்-பசுவினது. நாகும்-இளங்கன்றும்; 'எருமையு மரையும் பெற்றமு நாகே' (தொல்-சொல்). விலைபெறூஉம் என்பது இன்னிசை யளபெடை. செல்லும்-ஏற்றுக் கொள்ளப்படும். 'வாய்ச்சொல்' என்புழி 'வாய்' என வேண்டாது கூறினது அதன் சிறப்புணர்த்தற் கென்க. புல் ஈரம் போழ்தின் உழவே போல்-சிறிது ஈரத்தை யுடைய காலத்தில் உழவு (நிலத்தில் ஆழ்ந் திறங்காது மேலேறிச் செல்வது) போல. மீது ஆடி-(உள்ளத்திற் பதியாது) வெளியிற் றோன்றி. நல்கூர்ந்தார்-வறியர்; நல்கு ஊர் என்னும் இரண்டு சொற்கள் ஒரு சொல் தன்மைப்பட, 'நல்கூர்' பகுதியாயிற் றென்றுரைத்து, பிறர் நல்குதல் குறித்து ஊர்தல் அஃதாவது செல்லுதல் எனப் பொருள் பகர்வர்.

௧௧௬. இடம்பட-விரிவாக. மெய்ஞ்ஞானம்-தத்துவ சாத்திரங்களை. 'என்றுங் கற்பினும்' என மாறுக. அடங்காதார்-(இயல்பாய்) அடங்குந் தன்மையில்லாதார். தட கண்ணாய்-பெரிய கண்களை யுடையாய்! இது மகடூஉ முன்னிலை. காயம்-பெருங்காயத்தையும். பெய்து-தனித்தனியே சேர்த்து. அடினும்-சமைப்பினும். கைப்பு அறா-(இயல்பான) கசப்பு நீங்கா.

௧௧௭. இகழ்வாரை-(காரணமின்றிப்) பழிப்பவரை. அவரின் முன் இகழ்க-அவர் பழிப்பதற்கு முன் (அஃதாவது பழிக்கும் அப்போதே) இகழ்க; அன்றி, 'அவரதே புறத்தே யன்றி நேரிற் பழிக்க' எனினுமாம். அவரொடுபட்டது என்னை-அவர்களொடு தமக்குளதாகிய கண்ணோட்டம் என்? அல்லது, 'அவர்களொடு தமக்குளதாகிய உறவு என்? புன்னை விறல் பூ-புன்னையினது வன்மையுடைய மலர்கள். புன்னை நெய்தனிலக் கருப்பொருளாதலின், ஈண்டு இடம்பெற்ற தென்க; மலர்களுக்கு வன்மையாவது கடலினது புலானாற்றத்தைப் போக்கி அதன் மேலும் தம் மணங் கமழச் செய்தல். கானல்-சோலை. உறல் பால யார்க்கும் உறும்-

வரக்கடவனவாகிய இன்ப துன்பங்கள் எவர்க்கும் (தவறாது) வந்தே தீரும்: இப் பாவான், காரணமின்றிப் பழிப்பாருடைய வாயை யடக்குதற்கு ஓ ருபாயங் கூறினமை காண்க.

௧௧அ. வேறு உருவின-வெவ்வேறு நிறமுடையன. ஆ பயந்த பால்-அப் பசுக்கள் தந்த பால்கள். வேறு உருவின அல்ல-(வெண் ணிறமொன்றே யன்றி) வெவ்வேறு நிறமுடையனவாகா. 'அறம் பால்போல் ஒரு தன்மைத்து ஆகும்' எனவும், 'நெறி உருவு பல கொளல் ஆ போல்' எனவும் முடிவு செய்க. அறம் ஒன்றே யாயினும் அதனைச் செய்தற்குரிய வழிகள் பல வென்பது பொருள். 'நெறி ஆபோல் உருவு பல கொளல்' என முடித்து, 'வழிகளைப் பசுக்களைப் போலப் பல வுருவகமாகக் கொள்க' என்றுரை கூறுவாரு முளர். ஈண்டுக் 'கொளல்' என்பது அல் லீற்று உடன்பாட்டு வியங்கோளென்க. ஈங்கு-இவ்வுலகத்தில்.

௧௧௯. ஓர் சொல்-ஒரு பழிச் சொல்லே. இப் பொருள் இட நோக்கிக் கூறுப. உபாயத்தின்-தந்திரத்தின். இடை ஆக-(தமது ஆயுளின்) நடுவில். இன்னாதது-துன்பத்தை. எய்தாதார்-அடையாதார். கடை போக-(ஆயுளின்) முடிவுவரை. உய்த்தார்-அனுபவித்தார். முதல் வாக்கியத்திலுள்ள 'உலகத்து' 'தேருங் கால்' என்பன மற்றை வாக்கியங்களிலுஞ் சென்றமைவது முதல் விளக்கணி. 'உபாயம்' என்பது சாம பேத தான தண்டங்களை யென்ப; 'ஜீவனோபாயங்களாகிய உழவு, பசுக்காவல், வாணிகம், சேவக முதலிய வென்பதுமாம். அவபெடைகள் செய்புனோசை நிறைக்க வந்தன.

௧௨0. தம்மொடு செல்வது-தமது உயிரொடு போவது. நேரின்-ஆராயின். பிறிது-வேறொன்று. போற்றி-பாதுகாத்து. புனைந்த-(ஆடை யாபரணஞ் சந்தன முதலியவற்றால்) அலங்கரித்த. பயம-பயன். ஞகாரம் தேற்றம். கொண்டு-(உயிரைக் கவர்ந்து) கொண்டு. ஓடும்பொழுது-விரைந்து செல்லும் போது.

கஉக. துக்கத்துள்-துன்பமாகிய இல்வாழ்க்கையில். தூங்கி-சோம்பியிருந்து. பிணத்த - பிணங்களையுடையன. 'சுடுகாடு பிணத்த' என்க. தொக்க-கூடிய. புள்ளிற்கும் - பறவைகளுக்கும். காடு-சுடுகாடுகள். புலம்-அறிவு. புல் அறிவாளர்-தாழ்ந்த அறிவின ரது. 'வயிறு காடு' என்க. இது வேற்றுமையணி. இப் பாவான், புலால் மறுக்கப்பட்ட தறிக.

கஉஉ. இரும்பு-இருப்பு விலங்கு; இது கருவியாகுபெயர். ஆர்க்கும் - பூட்டப்பட்ட. ஏதிலார்க்கு ஆள் ஆய் - அயலார்க்கு அடிமைகளாய்; 'ஏதிலார்' என்பது 'யாதொரு சம்பந்தமுமில்லா தார்' என்னும் பொருட்டு. கரும்பு ஆர் கழனியுள் - கரும்புகள் நிறைந்த கழனியில்; 'கரும் பார் கழனியுள்' எனக் கொண்டு 'வட்டை நிலங்களினும் விளைநிலங்களினும்' எனப் பொருள் கூறலு மாம். ஆர்க்கும் - ஒலிக்கும். காட்டுள் ஆய் - காட்டிற்பொருந்தி. சிவலும் - கவுதாரியையும். குறும்பூழும் - காடையையும். சிவல், குறும்பூழ் என்பன மற்றைப் பறவைகளுக்கும் உபலக்ஷணம். ஆய்-ஆக; இஃதெச்சத்திரிபு. கொண்டு வைப்பார் - கொண்டுபோய் வைத்து வளர்ப்பவர்கள்.

கஉ௩. அக்கே போல்-சங்குமணியைப்போல நிறமுடையன வாய். அகம் கை ஒழிய-உள்ளங்கை ஒன்றே நிற்க. தொழுநோய்-குட்டநோய், இஃதிருபெயரொட்டுப் பண்புத்தொகை. எழுப-உண்டாகப்பெறுவர்; 'நோய் எழுப' என்றது திணைவழுவமைதி. அ கால்-முற்பிறப்பில், அலவனை-ஞண்டை. காதலித்து-விரும்பி, கால் முரித்து-(அதன்) காலை ஒடித்து. 'தின்ற' என்பது காரணப் பொருட்டில் வந்த பெயரெச்சம்; 'சங்கு சுட்ட சுண்ணாம்பு' என் புழிப்போல. அடைந்தக்கால்-சேர்ந்தால்; 'கால்' என்பது வினை யெச்ச விகுதி.

கஉ௪. அழல் - வெப்பம். நெய்போல்வதூஉம் - நெய்யும்; உயர்வு சிறப்பும்மை அந்நெய்யின் தன்மையையும், புண்களை யாற் றும் இயல்பையும் காட்டிற்றென்க. 'போல்வது' என்பது ஒப்பில் போலி அல்லது உரையசை. எரிப்ப சுட்டு-(உடம்பு) வேகும்படி

சுட்டு. எவ்வநோய்-துன்பந்தரும் நோயை. பரப்ப கொடுவினையர் ஆகுவர்-மிகக் கொடிய தொழில்களைச் செய்பவராவர். கோடாரும்-நடுவுநிலைமையுடையாரும். கோடி-தவறி. கடுவினையர் ஆகியார் சார்ந்து-கடுமையாகிய பாவச்செய்கைகளை யுடையாரைச் சேர்வராயின். 'கோடி கடுவினையர்' எனக் கொண்டு. 'மிகப் பலவாகிய பாவச் செய்கைகளை யுடையாரை' என் றுரைத்தலு மொன்று.

கஉ௫. கேண்மை-நட்பு. பிறை-இளஞ்சந்திரன். வரிசை வரிசை ஆ-முறையாக. நந்தும்-வளரும். வான் ஊர் மதியம்போல்-ஆகாயத்திற்செல்லும் நிறைமதிபோல. வைகலும் - நாடோறும். 'தானே தேயுமே' என்க. தொடர்பு-நட்பு. பெரியவர், சிறியார் ஆகிய இருவகையார் நட்பின் திறம் கூறியபடியால், ' சிறியார் நட்பினை அஞ்சி விடுக ' என்பது கருத்தெனை இவ் வதிகாரத்திற்குத் தகக் கொள்க.

கஉ௬. சான்றோர் என மதித்து - (நற்குண நற்செய்கைகளான்) நிறைந்தவரென் றெண்ணி. சார்ந்தாய் மன்-மிகுதியும் நட்புக் கொண்டாய் ; ' மன் ' என்பது ஒழியிசைப் பொருளென்பது மொன்று. சார்ந்தாய்க்கு - (அப்படி) நட்புக்கொண்ட உனக்கு. சான்றாண்மை - (அத்தகைய) நிறைவுடைமை, சார்ந்தார் கண் - (உன்னால்) நட்புக்கொள்ளப்பட்டாரிடம். இல் ஆயின் - இல்லையானால். சார்ந்தாய் கேள் - (ஆராயாது) நட்புக்கொண்டவனே ! கேள். சாந்து-சந்தனம். செப்பு-சிமிழை. கண்டன்னது உடைத்து-கண்ட தன்மையையுடைத்து. இது காட்சியணி.

கஉ௭. ' ஒருவர் தம் உள்ளத்தை தேடும் துணைமை உடையவர் யாஅர் ஒருவர் ' என்றியைக்க ; ' பிறரொருவர் மனநிலையை ஆராய்ந்தறியக்கூடிய வன்மையுடையார் எவர் ஒருவர் அஃதாவது ஒருவருமில்லை ' என்பது பொருள். சாரல் - மலைப்பக்கங்களில். கனம்-பெருமை. கேள்-முன்னிலை யசையுமாம்.

கஉ௮. உள்ளத்தான் - மனப்பூர்வமாக. நள்ளாது - நட்புக் கொள்ளாது. உறுதி தொழிலர் ஆய் - (தமது) நன்மையையே

நாடுந்தொழிலையுடையராய். கள்ளத்தான்-வஞ்சனையோடு. கழி கேண்மை-மிகுதியான நட்பு. புனல்-அருவி நீர். செதும்பு-சேற்றை. அலைக்கும்-ஒழித்து நிற்கின்ற. மாசு-குற்றம். கேண்மை காரணமும் மாசு அதன் காரியமுமாகலின்; ஈண்டுக் 'கேண்மை மாசாய் விடும்' என்பது உபசாரவழக்கென்ப. அத்தகைய நட்பிற்கு அஞ்ச வேண்டுமென்பது கருத்து.

௩௨௯. ஒக்கிய-(பகைவரைக் கொல்ல) மேல் எடுத்த; 'ஓங்கு' என்பதன் பிறவினையாகிய 'ஒக்கு' பகுதி. ஒள் வாள்-ஒளிபொருந்திய வாள். ஒன்னார்-பகைவர்; இஃது 'ஒன்றார்' என்பதன் மரூஉவென்ப; கைப்பட்டக்கால்-கையின் அகப்பட்டால். ஊக்கம் அழிப்பதூஉம்-(பகைவரை அழியாமையோடு தன்) வலிமையை அழிப்பதும். (கல்லார்கண்) ஆக்கம்-(பேதையரிடத்து) ஆகுதல், அஃதாவது சேர்தல்; அஃது ஈண்டுச் சேர்தலின் பயன் குறித்து நின்றது. இருமையும் சென்று சுடுதலால்-இம்மை மறுமை யிரண்டினும் தொடர்ந்து வருத்துதலின். கல்லார்கண் தீர்வு - (பேதையரினின்று) தீர்தல் அஃதாவது நீங்குதல். நல்ல கருமம்-நற்செய்கையாம்.

௩௩௰. மனை பாசம்-மனைவியினிடத்து ஆசை. 'கைவிடாய்' என்பது முற்றெச்சம்; 'கை' என்பது தமிழுபசர்க்க மென்ப. ஏங்கி - இரங்கி. எனைத்து ஊழி - எத்தனை ஊழிகாலம். எனைத்தும்-எவ்வளவும். சிறுவரையே ஆயினும்-சிற்றளவினையுடையதே யானாலும். நன்று-நல்வினை. 'உயிர்க்கு உறுபயனே நன்றல்லால் இல்லை' என முடிக்க. உறுபயனே-(பிறப்பினால்) அடையும் பயனே. இல்லை-(வேறு) இல்லை.

# பொருட்பால்.

---

கக௧. குஞ்சி - மயிர்முடி ; இஃது ஆண்மயிரின் பெயர். கொடுந்தானை-மடிப்பமைந்த ஆடை. கோடு-கரை. மஞ்சள் - கலவைப் பூச்சு. நெஞ்சத்து-மனத்தின்கண். நல்லம் யாம்-யாம் நன்மையிலம். நடுவு நிலைமையான்-நடுவு நிலைமையோடு ; இஃதுருபு மயக்கம். மேற்கூறிய அறங்களின் வழுவிலம் என்று கூடு நின்று கருதற் கேதுவாகிய ஒழுக்கத்தோடு கல்வியுடைமையும் பெற்றிருத்தலே அழகு என்பது கருத்து. இதற்குப் பிறர் வேறு பொருள் கூறுவர். ஆடவர்க்குரிய குஞ்சியை முதலினும், மகளிர்க்குரிய மஞ்சளை ஈற்றினும், இருவர்க்கும் பொதுவாகிய தானையை இடையினும் வைத்துக் கூறினதாகக் கொண்டு இப் பாட்டு ஆண் கல்வி, பெண் கல்வி ஆகிய இரண்டையுங் குறித்ததென்ப ரொரு சிலர்.

கக௨. இம்மை-இப் பிறப்பின் பயனை ; ஆகுபெயர். பயக்கும்-தரும். ஈய-(பிறர்க்குத்) தரின். குறைவின்று-குறைதலில்லை. விளக்கும்-(புகழான்) விளங்கச் செய்யும். தாம் உளர் ஆதாம் உயிருள்ளவராக வாழுமளவும். கேடு இன்று-அழிதலில்லை. எம்மை உலகத்தும் - எவ்வுலகத்தினும். மம்மர்-மயக்க நோயை. அறுக்கும்-ஒழிக்கின்ற. கல்வியை மருந்தாகக் கூறியதற் கேற்ப, மம்மரை நோயாகக் கூறாமையின் இஃது ஏகதேசவுருவகவணி.

கக௩. களர் நிலத்து-(இழிந்த) உவர் நிலத்தில். விழுமிது ஆ-சிறந்ததாக ; 'விழுமிது' என்பது 'விழுமம்' என்னும் உரிச் சொல் அடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணைந்த பெயர். கடை நிலத்தோர்-இழிந்த சாதியிற் பிறந்தார். தலை நிலத்து-மேன்மையாகிய இடத்தில்.

கக௪. வைப்புழி - சேமமாகிய இடத்தினின்று. வைப்பு-தொழிலாகு பெயர் ; வைப்புழி இருபெயரொட்டுப் பண்புத் தொகை. கோட்படா-(பிறரால்) கவரப்படா. வாய்த்து-(தக்க பாத்திரம்) கிடைக்கப் பெற்று. மிக்க சிறப்பின்-(தம்மினும்) மிக்க

சிறப்புடைமை பற்றி. செறின்-(பொருமைகொண்டு) கோபிப்ப ராயின். வவ்வார்-அபகரியார். எச்சம் என-ஆக்கமென்று, ஒருவற் குப் பின் எஞ்சி நிற்பது எச்சமென்க; எஞ்சு-பகுதியும், அம்-வினைமுதற் பொருள் விகுதியுமாம். செய்வன-தேடி வைப்பன. விச்சை-கல்விப் பொருள்களே யாம்; 'வித்யா' என்னும் வட மொழி சிதைந்து 'விச்சை' என வந்தது. 'பிற அல்ல' என மாறுக. செல்வத்திற்கும் கல்விக்குமுள்ள வேறுபாடுகளை எடுத் துக் கூறுதலின் இது வேற்றுமையணி. ஒருவன் தன் மக்கட்குப் பொருளைத் தேடி வைத்தலிற் கல்வியைத் தேடி வைத்தலே சிறப் புடைத் தெனற்குக் காரணங் கூறியவாறு காண்க.

கஙரு. கல்வி கரைஇல-கல்விகளோ முடிவில்லன. நாள்சில-ஆயுணாட்களோ சிலவாம். மெல்ல நினைக்கின்-விரையாது ஆராய்ந்து நோக்கின். பிணி பல-நோய்களோ பலவாம். தெள்ளிதின்-தெளி வாக. அமைவுடைய-தகுதியுடைய நூல்களையே; பிரிநிலை ஏகாரம் பிரித்துக் கூட்டுக. கற்ப-(அறிவுடையார்) கற்பர். 'நீர் ஒழியப் பாலுண்குருகு' என்றது, அன்னப் பறவையை; பாலையும் நீரை யுங் கலந்துவைப்பின் அப் பறவை நீரை நீக்கிவிட்டுப் பாலையே உண்ணுமென்பது நூற்றுணிபு. தெரிந்து-(நூல்களின் தன்மை யைப்) பகுத்தறிந்து.

கஙசு. தோணி இயங்குவான்-மரக்கலத்தை நடத்துவோன்; 'தோணி' என்பது 'த்ரோணி' என்னும் வடமொழிச் சிதைவு. தொல்லை வருணத்து - பழமையான சாதிகளுள். கடைப்பட்டான் என்று - இழிவாகிய சாதியிற் பிறந்தவனென்று. காணின் - அறி யினும்; சிறப்பும்மை தொக்கதென் றுணர்க. இகழார் - அவமதி யாது; இது முற்றெச்சம். '[illegible]' என்பது முன்னிலையொருமை. 'நீ அறிவாய்' எனப் பொருளுரைப்பினுமாம். ஆறு போய் அற்று-ஆற்றிற் சென்றதுபோலும். 'போய்' என்பது 'போனல்' என்னும் எச்சத் திரிபென்க. 'போயது' என்பது ஈறு தொக் குப் 'போய்' என நின்றது என்பது மொன்று. நூல் கற்ற மகன்-(தாழ்ந்த சாதியிற் பிறந்தவனாயினும்) அறநூல்களைக் கற்றவொரு

வினை. நல்ல-நல்ல நூற்பொருள்களை. 'கொளல் போயற்று' என் றியைதல் கண்டுகொள்க.

கசுஎ. தவல் அரு-தவறுதலில்லாத. தொல் கேள்வி-பழமை யான (தொன்றுதொட்டுப் பரம்பரையாக வருகின்ற) நூற் கேள்வி யினது. கேள்வித்தன்மையாவது கேள்வியின்படி நடத்தல். இகல் இலர்-பகையில்லார். எஃகு உடையார்-கூரிய வறிவுடையர். எஃகு-கூர்மை; அஃதீண்டு அறிவின் மேற்று. குழீஇ-கூடி; 'குழுவி' என்பது 'குழீஇ' என விகாரப்பட்டு அளபெடுத்தது. இது சொல்லிசை யளபெடையி னடங்கு மென்க. நகலின்-உரையாடி மகிழ்தலினும். இனிது ஆயின் - இன்பந் தருவதானால். அகல் வானத்து உம்பர் உறைவார் பதி-பரவிய ஆகாயத்தின் மேலதாகிய சுவர்க்கத்தில் வசிக்கின்ற தேவர்களது அமராவதி நகரத்தை. காண்பாம்-காண விரும்புவோம். அறிவுடையோருடன்கூடி உரையாடி மகிழ்தல் இந் நிலவுலகினன்றி வானுலகினின்றாகலின் யாம் அதனைக் காண விரும்புவோ மல்லோமென அறிவுடையார் உறவின் இன்பத்தைப் புகழ்ந்து கூறினாராதல் காண்க.

கசுஅ. கனை-ஒலிக்கின்ற. கேண்மை-நட்பானது. நுனியின்-நுனியிலிருந்து. தின்றற்று - தின்றாற்போல வரவர இன்ப மிகுவதாம். தூரின் - அடியிலிருந்து. தின்றன்ன தகைத்து - தின்றாற் போன்ற தன்மைத்து அஃதாவது வரவர இன்பங் குறைவதாம். அரோ - ஈற்றசை. ஈரமிலாளர் - அன்பிலாரது. தொடர்பு - நட்பு. இது பயனுவமையணி.

கசுகூ. ஒழுகின்-(அவர்க்கிணங்க) நடப்பராயின். தலைப்படுவர்-உண்டாகப் பெறுவர். 'அறிவு தலைப்படுவர்' என்பது இனை வழுவமைதி. ஒள் நிறம்-விளக்கமாகிய நிறமமைந்த. புத்தோடு-'புதுமை ஓடு' எனப் பிரிக்க. தான் பயந்தாங்கு - தான் (தன் மணத்தைத்) தந்தாற்போல. புத்தோடு கல்லார்க்கும் பாதிரி மலர் கற்றார்க்கும் நன்மணம் நல்லறிவிற்கும் உவமை. புதுப்பானையிற் பாதிரி மலர்களையும் நீரையும் பெய்து வைப்பின் அந் நீர் நன் மணம் பெறுமெனத் தெளிக.

கசம். அலகு சால் - அளவு மிக்க. கற்பின் - கல்விகளுக்குள். அறிவு நூல்-ஞான நூல்களை. உலக நூல்-உலகத்திற்கே பயன் படு கிற நூல்களை ; அவையாவன : தருக்கம், வியாகரணம் முதலியன. கல கல கூஉம் துணையல்லால் - கல கல வெனக் கூவுமளவேயன்றி 'கல கல' என்பது அநுகரணம், இரட்டைக் கிளவி ; அது பொரு ளின்மை குறித்து நின்றது. கொண்டு - (அவ்வுலகநூல்களை ஓது வது) கொண்டு. தடுமாற்றம் போம் துணை அறிவார் இல்-பிறவியி னின்று தடுமாறுதல் நீங்குந்தன்மையை அறிவாரில்லை.

கசசு. உடுக்கை உலறி - உடுக்கும் ஆடையுங் கெட்டு ; 'பொல்லா வுடுக்கையாற் பொலிவிழந்து' என்பதுமாம். குடிப் பிறப்பாளர் - உயர்ந்த குடியிற் பிறந்தார். கொள்கை - ஒழுக்கத்தி னின்றும். இடுக்கண் - துன்பம் ; 'மலர்ந்த நோக்கமின்றி மையல் நோக்கம் படவரும் இரக்கம்' என்பர் நச்சினார்க்கினியர். தலைவந் தக் கண்ணும்-மிக விளையும் போதும். அரிமா-சிங்கமாகிய மிரு கம். கொடி புல்-படர்புல்லை. கறிகுமோ-மேயுமோ? ஓகாரம் எதிர் மறை. 'புலி பசிப்பினும் புல்லைத் தின்னாது' என்பது பழமொழி. 'தலைவந்தக் கண்ணும் வரிமா' என்பது பாடமென்ப; அற்றாயின், 'வரிமா' என்பது புலியாதல் காண்க.

கசஉ. சான்றாண்மை - (நற் குணங்களின்) நிறைந்து (அவற்றை) ஆளுதல். சாயல்-மென்மை ; 'சாயன் மென்மை' என்பது தொல்காப்பியச் சூத்திரம். மென்மையாவது மனமொழி மெய்களான் அடங்குதல் ; பழிபாவங்கட்கு அடங்குதல் என்பாரு முளர். ஒழுக்கம்-நன்னடை. வான்தோய் குடி-மிக வுயர்ந்த குடி யில். வான் தோயும் - ஆகாயத்தை யளாவும். மை - மேகம். படா- (அவை மூன்றும்) உளவாகா.

கசங. இருக்கை எழலும் - (பெரியோரைக்காணில்) தமது இருக்கைவிட்டெழுந்து நிற்றலும் ; 'இருக்கை' என்பது தொழி லாகு பெயர். எதிர் செலவும் - எதிர்கொண்டு சென்று அழைத்து வருதலும். ஏனை - இன்னும். விடுப்ப ஒழிதலும் - (அவர் மீளும் போது) விடைதரத் தாம் அவரைப் பிரிதலும். இன்ன - இவை

'உலகநடையினை அறிந்து அதற்கு ஏற்பப் பிறர்க்கு உதவி செய்தல்' என்பது கருத்து. ஒல்கார்-தளரார்.

கசக. செல்லாவிடத்தும்-(வறுமை முதலியவற்றால்) செய்ய முடியாத காலத்தும். செய்வன-செய்யும் உபகாரங்களை. செல் இடத்தும்-(செல்வ முதலியவற்றால்) செய்ய முடிந்த காலத்தும். 'சிறியவர் செய்யார்' என்க. புல்வாய்-மான். இஃதன்மொழித் தொகை. பருமம் பொறுப்பினும்-சேணத்தைத் தாங்கினாலும். பாய்-பாய்ந்தோடுகின்ற. பரிமா போல்-குதிரைபோல. பொரு முரண் ஆற்றுதல்-போர் செய்யும் வன்மையை யுடைத்தாதல். இஃது எடுத்துக் காட்டுவமை.

கடுய. எற்று ஒன்றும்-எத்தன்மைத்தாகிய தொரு பொருளும். அற்று-(வேறாகி) இல்லையாகி. தன் சேர்ந்தார்க்கு-தம்மை அடைந்தவர்க்கு; இஃது ஒருமைப் பன்மை மயக்கம். அசைவிடத்து ஊற்று ஆவர்-தளர்ச்சி வந்தக்கால் ஊன்றுகோல் போல நின்றுதவுவர். அகல்யாறு-அகன்ற நதியானது. அற்றக் கடைத்தும்-நீர் வற்றியபோதும். அகழ்ந்தக்கால்-(தன்னைத்) தோண்டினால். தெற்றெனவ-விரைவாக. தெள்நீர்படும்-தெளிவாகிய நீர் ஊறும். இதுவும் எடுத்துக்காட்டுவமை. "யாறு நீர் படும்" என்புழி இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின்மேலேற்றப்பட்டதாகலின், இஃது உபசார வழக்கென்க.

கடுக. அம் கண் - அழகிய இடமகன்ற. விசும்பின் - வானத்தினின்று. அகல் நிலா பாரிக்கும்-பரந்த நிலவை வீசுகின்ற. திங்களும்-சந்திரனும். சான்றோரும்-பெரியோரும். மன் ஒப்பர்-பெரும்பாலும் (தம்மில்) ஒப்பாவர். மறு ஆற்றும்-(தனக்குள்ள) களங்கத்தைப் பொறுத்திருக்கும். அஃது ஆற்றார் - அதனைப் பொறுத்திரா மல். தேருமந்து தேய்வர்-(மனம்) வருந்தி அழிவர். ஒரு மாசு உறின்-சிறிது களங்கம் (பழியினால் தம்மைப்) பொருந்தினால். [illegible] திரனும் சான்றோரும் தண்மை செய்தலின் ஒத்திருப்பினும் [illegible] திரன் மறுவாற்றுதலானும், சான்றோரஃதாற்றாமையானும் சந்[illegible] னிற் சான்றோர் சிறப்புடையாரென்பது கருத்தாகலின் இது [illegible]

றுணமயணி. 'அங்கண் விசும்பிற் றிங்கள்' என விசேடித்தமை யின், 'மேன்மக்கள்' உயர் குடிப் பிறப்புடையார் என்பது குறிப் பிற் கொள்க.

கஞஉ. வசை தீர-பழிப்பில்லையாக. எண்ணுவர்-(அரிய காரி யங்களைச் ⁀⁀ய) நினைப்பர். விசையின்-வேகத்தொடு. நரிமா-நரியாகிய விலங்கு; இஃ திருபெயரொட்டுப் பண்புத் தொகை. உளம்-மார்பை; இது தானியாகுபெயர். கிழித்த-பிளந்து ஊடுரு வின. 'அம்பினின்' என்புழி ஐந்தனுருபு எல்லைப்பொருளது. அரிமா-சிங்கமாகிய விலங்கு. பிழைப்பெய்த-'பிழைப்ப எய்த' என்க; ஈண்டு அகரந் தொக்கது விகாரம். பிழைப்ப-(இலக்குத் தவறி) உய்யும்படி. பின்னிரண்டடியிற் 'பிறிது மொழிதலணி' யுளது.

கஞ௩. நரம்பு எழுந்து-(உணவின்மை காரணமாக உடம்பு மெலிந்து) நரம்புகள் வெளித்தோன்றி. நல்கூர்ந்தார் - வறுமை யடைந்தார். குரம்பு எழுந்து-(நல்லொழுக்கத்தின்)வரம்பு கடந்து. குற்றங்கொண்டு-குற்றமான செய்கையை மேற்கொண்டு. ஏறார்-(அச்செய்கையின்) மிக்கு நடவாமல்; இது முற்றெச்சம். உரம்-(தமது) அறிவையே. கவறு ஆ-கருவியாகக் கொண்டு. கவறு-பனைமட்டை; இஃது ஒன்றைப் பிடித்துக் கயிற்றாற் கட்டுதற்கு ஆதாரமாம். உள்ளம் என்னும் நாரினல்-முயற்சி என்கிற கயிற்றி னல். கட்டி-மனத்தைக் கட்டி. இனி, 'கவல் தாவு உள்ளம் உரம் என்னும் நாரினல் கட்டி' என் றியைத்து, 'கவலையைப் பற்று கிற மனத்தை அறிவாகிய கயிற்றாற் கட்டி' எனப் பொருள் கூறி னும் இழுக்காது. உளவரையால்-(பொருள் தமக்கு) உள்ள அள விற்குத் தக.

கஞச. செல்வுழிக்கண்-போகுமிடத்தில்; இது 'செல் உழி' எனப் பிரியும். இதன்கண் வகரமெய்யை 'மெய்யீற்றுடம்புமெய்' என்பர் நச்சினார்க்கினியர். தொல்வழி-தொன்றுதொட்டு வந்த அஃ தாவது பழமையாகிய. கேண்மையின்-நட்பைப் போல. புரிந்து - விரும்பி. யாப்பர் - (தம்மோடு அவரைக்) கட்டுவர். நல்வரை -

நல்ல மலைகளையுடைய; மலைக்கு நன்மை நாட்டிற் காணுதலும் மிளகு முதலிய திரவியங்களொடு அருவியும் உடைத்தாதலும். அடிப்படின் - காலடிபட்டு வருமாயின். கல்வரையும் - கன்மலையினும். இதன்கண் 'பிறிதுமொழிதல்' என்னும் அணி யுளது.

கஙஏ. எழுத்தின் புல்லா - இலக்கணத்தினைப் பொருந்தாத; 'புல்லா எழுத்தின்' என்பது வடநூன் முடிபு; 'எழுத்தின்' என் புழி 'இன்' சாரியை. பொருள் இல் - பொருளுணர்ச்சி யில்லாத. வறுங்கோட்டி-வீண் கூட்டத்தில். உரைப்பவும்-(யாதாயினு மொன்றைச்) சொல்லவும்; இனி 'உரைப்ப' என்பதைப் பெயராகக் கொண்டு 'உரைப்பவற்றை' எனப் பொருள் கூறினுமமையும். பல்லாருள் - பலர் முன். நாணல் - அவமானப்படுதற்கு, பரிந்து - வருந்தி. கண்ணோடி - தாட்சிண்யங்கொண்டு.

கஙசு. கடித்து - (வாயாற்) கடித்தும். கண் தகர நூறி - கணுக்கள் உடையும்படி (ஆலையிலிட்டுச்) சிதைத்தும். இடித்து - (உலக்கை, கல் முதலியவற்றால்) இடித்தும். நீர் - இரசத்தை. இன்சுவைத்தே - இனிய உருசியுடையதே; ஏகாரம் தேற்றம். வடுப்பட - குற்றந் தங்கும்படி. வைது இறந்தக்கண்ணும் - இகழ்ந்து செல்லினும். சிதைந்து - (தமது மனநிலை) கெட்டு. இஃது எடுத்துக் காட்டுவமை.

கஙஎ. கன்னார் - (பிறர்பொருளைக்) களவு செய்யார். கடிவ கடிந்து ஒரீஇ - (நூல்கள்) விலக்குந் தீய செயல்களைத் (தாமும்) விலக்கி யொழித்து. எள்ளி - அவமதித்து, இகழ்ந்து உரையார் - பழித்துப் பேசார். தள்ளியும் - தவறியும்; 'கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை' என்னுந் திருக்குறளினும் 'தள்ளுதல்' இப்பொருட்டாதல் காண்க. வடு அறு காட்சியார் - குற்றமற்ற அறிவினையுடையார். சாயின் - தளரினும்; ஈண்டு இழிவு சிறப்பும்மை தொக்கது. பரிவது - வருந்துவது.

கஙஅ. மறையின்கண் - இரகசியத்தைக் கேட்பதில். திறன் அறிந்து - (அதனால் தனக்கு வரக்கடவதாகிய துன்பத்தின்) கூறு

பாட்டை யறிந்து. ஏதிலார் - அயலாரது. இல் கண் - மனைவியரை (விரும்பிக்) காண்பதில். மூங்கையாய் - ஊமையாய். 'நிற்பானேல்' என்பது அங்ஙனம் நிற்றலின் அருமை விளக்கிநின்றது. 'யாது அறமும்' என உம்மை பிரித்துக் காட்டுக.

கருக. பண்பு இலார் - நற்குணமில்லாத கீழோர். உழை - ஏழனுருபு. என்னுனும் - யாதாயினு மொருபொருளை. வேண்டுப - அவர் விரும்புவர். இகழ்ப - அவமதிப்பர். வேண்டினும் - விரும்பி னும். நன்று என்று - நல்லதேயென்று; இஃதுடன்படுதல் உணர்த் திற்றென்க. விழுமியோர் - மேன்மக்கள். சிறப்பு - உபசாரம்.

கசுய. உடையார் - பொருளுடையார். ஒருதலை ஆ பற்றி - ஒரே துணிவாகப் பிடித்து. கடையாயார் - கீழ்மக்கள். வாழ்வார் - உயிர் வாழ்வார்கள். உடைய பிலம் - (வேண்டியவற்றை யெல்லாம்) உடையதொரு சுரங்கம். தலைப்பட்டது-அடைந்தது. போலாதே- போலாகாதோ? ஈண்டு, 'ஏகாரம்' எதிர்மறை, இரண்டு எதிர் மறை ஓர் உடன்பாடாயினமை காண்க. குலம் - குலத்திற் பிறந் தாரை; இஃ திடவாகுபெயர். தலைப்பட்டவிடத்து - அடைந்தக் கால்.

கசுக. புரைதீர்ந்தார் மாட்டும் - குற்றத்தி னீங்கினாரிடத்தும் அஃதாவது குற்றமற்றா ரிடத்தும்; உம்மை உயர்வு சிறப்பு. எச்ச வும்மை யெனினு மிழுக்காது. வெறுத்தபின் - (அவர் பொறாது) வெறுப்பின்; இஃதெதிர்கால வினையெச்சம். ஆர்க்கும் - ஒலிக்கும். பேர்க்குதல் - (அதனால் வரூஉந் தீங்கினை) நீக்குதல். அரிது-கூடாது.

கசுஉ. 'பொன்னே' என்புழி ஏகாரம் உயர்வு சிறப்பு. புணர் தற்கு -கூடுதற்கு. கொன்னே - ஒன்றுங் கொடாமலே. 'தலைக்கூட' என்புழித் 'தலை' என்பது தமிழுபசர்க்க மென்ப. அன்றோ - இஃ திரக்கப்பொருள் தருவதோ ரிடைச்சொல். பயன் இல் பொழுது- வீண் காலமாக. நயம் இல் - இன்பத்தோடு பொருந்துத லில்லாத. 'கொடுத்தும், பெற்றிருந்தும்' என்புழி உம்மைகள் உயர்வு சிறப் புப் பொருளன; 'கழிப்பரே' என்புழி ஏகாரம் இரக்கப்பொருளது.

௧௬௩. ஆன்ற மதிப்பும் - நன்கு மதித்தலும். 'ஆன்ற' என்பதில் 'ஆல்' பகுதி; அது 'சால்' என்பதன் மரூஉ, 'அகல்' என்பதன் மரூஉ எனினுமாம். மிகை மக்களான்-மேன்மக்களான். மதிக்கற் பால-மதித்துச் செய்யுந் தன்மையுடையன. நயம் உணரா-(பிறர் குணச் செயல்களின்) நன்மையை யுணரமாட்டாத. கைஅறியா-முறை அறியாத. மாக்கள்-கீழோர். இழிப்பும்-இகழ்ந்து கூறுதலையும். எடுத்து ஏத்தும் - மிகப் புகழ்ந்து கூறுதலையும்; 'ஏத்து' என்பது முதனிலைத் தொழிற்பெயர். வடித்த நூலார்-நூற் பொருள்களை ஆராய்ந்தறிந்த பெரியோர்; இது வட நூல் முடிபு. வையார்-ஒரு பொருளாக எண்ணார். 'உணரா, அறியா' என் னும் எதிர்மறைப் பெயரெச்சங்கள் அடுக்கி 'மாக்கள்' என்னும் பெயர் கொண்டு முடிந்தன.

௧௬௪. விரி நிறம் நாகம்-படம் விரிக்கின்ற ஒளியையுடைய பாம்பானது. விடர்-வெடிப்பு நிலத்திலுள். உருமின் கடுஞ் சினம்-இடியினது மிக்க கோபத்தாலாகியது போன்ற ஒலி. 'கடுஞ்சினம் என்பது இடியொலிக்கு இலக்கணை. சேண் நின் றும்-நெடுந்தூரத்திலிருக்கவும்; 'நின்று' என்பது 'நிற்ப' என் னும் எச்சத்திரிபு. உட்கும் - (அதற்கு) அஞ்சும். அருமை உடைய அரண் சேர்ந்தும்-(பகைவர் புகுதற்கும் அழித்தற்கும்) அரிதாகிய காவலிடத்தைச் சேர்ந்திருப்பினும். உய்யார்-(அஞ்சு தலினின்றும்) தப்பார். பெருமையுடையார் செறின்-பெருமை யுடைய அரசர் கோபிப்பாராயின். இடியொலிக்கு அஞ்சுதல் பாம் பின் தன்மை. இஃது எடுத்துக்காட்டுவமையணி.

௧௬௫. எம்மை அறிந்திலிர் - எமது சிறப்பை (நீர்) அறிய வில்லை; 'எம்' என்பது செருக்குப்பற்றி வந்த தன்மைப் பன்மை. எம்போல்வார்-எம்மை ஒத்தவர். தம்மை தாம் கொள்வது-தம் மைத் தாமே சிறப்பித்துக் கொள்வது. கோள் அன்று-கொள்கை யாகாது; 'கோள்' என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயர். அரியர் ஆ - (பிறர்க்கு) அருமையான குணங்களையுடையராக. நோக்கி-கண்டு. கொள்வது-ஏற்றுக் கொள்வது.

கககஅ. நளி-பெருமை; 'தடவுங் கயவும் நளியும் பெருமை' (தொல்-உரி) என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும்'. நாள் நிழல் போல-உதய காலத்துச் சாயைபோல. விளியும்-(வரவரக்) குறை யும். 'சிறியவர் கேண்மை விளியும்' என்க. கேண்மை-நட்பு; நண்பர் ஒருவரையொருவர் நன்மை விழைதலின், நட்பு 'கேண்மை' எனப்படுதலுணர்க. விளிவின்றி - குறைதலின்றி. அல்கு நிழல் போல்-(அடியில்) தங்கும் உச்சிக் காலத்துச் சாயைபோல; 'அல் குதல்' என்பதற்குத் 'தங்குதல்' என்பது பொருள். அகன்று அகன்று ஓடும்-மேன்மேலும் வளர்ந்து நீளும். தொல்புகழாளர் தொடர்பு - பழைமையாக வருகிற புகழினையுடைய பெரியோர் நட்பு. 'நாள் நிழல்போல' என்பதற்கு 'முற்பகற் சாயைபோல' எனப் பொருளுரைத்து, அதற்குத் தக 'அல்கு நிழல்போல' என்ப தற்குப் 'பிற்பகற் சாயைபோல' எனப் பொருளுரைத்தலு மொன்று; ஈண்டு 'அல்குதல்' என்பதன் பொருள் 'சுருங்குதல்' அஃதாவது பகற்போது சுருங்குதல். இது முற்றுவமையணி.

ககஎ. திரு - செல்வத்தையும். எழில் நலமும்-வளர்ச்சி யோடு கூடிய அழகையும்; 'எழில்' என்பது 'இல்' விகுதிபெற்ற தொழில் பெயர். துன்னியார் துய்ப்பர்-(அவரை) நெருங்கியிருப்ப வர் அனுபவிப்பர். தகல்வேண்டா - (இன்னார்) தகுதியுடையா ரெனல் வேண்டுவதில்லை. குழை-தளிர். குளிர் மரம் - குளிர்ந்த நீழலைத் தருகின்ற மரம். தங்கண் துன்னி சென்றார்க்கு எல்லாம்- தம்பீடத்தே நெருங்கி வந்தவர்களுக் கெல்லாம் ஒருங்கு உளை- வேற்றுமையின்றி ஒரு படித்தாய் இடமாம். 'துன்னிக் கொண்டு' என முடித்துத் 'துன்னி' என்பது எச்சத்திரிபென்பாருமுளர்- இப் பாட்டில் ஒப்புமைக் கூட்டவணியும் எடுத்துக்காட்டுவமை யணியு மிருத்த லறிக. ஒப்புமைக்கூட்டவணியாவது இரண்டு முதலிய பொருள்களைப் பொதுவாகியதொரு தருமத்தின் முடிப் பது. 'மன்னர் திரு' 'மகளிரினெழினலம்' ஆகிய இரண்டு பொருள்களையும், 'துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா' என்கிற

பொதுவாகியதொரு தருமத்தின் முடித்தமையின், இஃதல் வணியாயிற்றென்க.

*௧௬௮.* தெரிய தெரியும்-(உண்மைப் பொருள்) விளங்கும் படி ஆராயும். தெரிவிலார் கண்ணும் - அறிவிலாரிடத்தினும் : உம்மை இழிவு சிறப்பு. பிரிய-பிரியின். பெரும்படர் நோய் செய்யும்-(அப்பிரிவு) மிக்க நினைவிற்கேதுவான துன்பத்தைச் செய்யும்; 'படர்' என்பது உரிச்சொல். 'படரே யுள்ளல் செலவு மாகும்' (தொல்-உரி) என்றார் **ஆசிரியர் தொல்காப்பியனார்.** உலவா - நீர் அருத. இருங்கழிச் சேர்ப்ப-நெடிய கழிக்கரையுடையவனே! கலவாமை - கூடாமை. கோடி உறும்-(கூடிப் பிரிதலினும்) பன் மடங்கு நல்லதாம்.

*௧௬௯.* போகிய, வைகிய, ஒழிந்த என்பன 'கழிந்த' என் னும் பொருளன. நாள், வைகல், பகல் என்பன ஒரு பொருளன வாகலின், இதுபொருட்பின்வருநிலையணி யென்க. ஒல்வ-(தம் மால்) இயன்றவற்றை. படாஅவாம்-உளவாகாவாம். பண்புடையார் கண்-நற்குண நற்செய்கை யுடையாரிடத்து.

*௧௭௰.* பெருமை-பெருமைக் குணமாவது. சிறதகைமை - (செருக்கின்றிப்) பணிவுடையராதல். ஒன்றற்கு-(கல்வி, செல்வம், ஆண்மை முதலியவற்றின் யாதாயினும்) ஒன்றினுக்கு; இனி, இதற்குப் 'பரம்பொருளுக்கு' என உரை பகர்வாருமுண்டு. உரிமை-உரிய குணமாவது. அடக்கம் (மன மொழி மெய்களான்) அடங்கியிருத்தல். தன் சேர்ந்தார் - தம்மைச் சேர்ந்தவருடைய. 'உடையாரும் தன் சேர்ந்தார்' என்புழிப் பன்மையினொருமை மயங்குதல் காண்க.

*௧௭௧.* அறியா பருவத்து-(ஆவன ஆகாதன) பகுத்தறிய லாகாத இளமைப் பருவத்தில். அடங்காரோடு ஒன்றி-அடக்க மில்லாரொடு சேர்ந்து. நெறியல்ல செய்து ஒழுகியவும்-முறை யல்லாதனவற்றைச் செய்து நடந்தமையான் வந்த குற்றங்களும் இவற்றைச் 'சகவாச தோஷங்கள்' என்ப வடமொழிவாணர். 'ஒழுகியவ்வும்' என்புழி வகரமெய் விரிந்தது செய்யுள் விகார

மென்க. நெறி அறிந்த நல் சார்வு சார-நடை முறை அறிந்த நல் லினஞ் சார்வதனுல். வெயில் முறுக-வெயிலானது மிக. புல் பனி-புல்லைச் சேர்ந்த பனித்துளி. பற்றுவிட்டு ஆங்கு-பற்றுதலை விட்டாற்போல; 'விட்டு ஆங்கு' என்புழி 'ஆல்' என்னும் வினை யெச்ச விகுதி புணர்ந்து கெட்டதென்ப; 'து' என்னுந் தொழிற் பெயர் விகுதி புணர்ந்து கெட்டதெனினு மமையும்.

கஎஉ. கூற்றம் - யமனே. கடுஞ்சொல் - செவிக்கின்னுதன வாகிய சொல். போற்றுமின்-(வாராதபடி) தடுங்கள். வினை தீயார்-பாவச் செய்கையுடையார்; 'வினையில் தீயார்' என விரிக்க: அன்றி, தீ வினையார் என விகுதி பிரித்துக் கூட்டுதலுமாம். 'வாய்ச்சொல்' ஆசீர்வாதமுமாம்.

கஎக. அடைந்தார் பிரிவும் - (தம்மொடு) சேர்ந்தாரை நீங்கு தலும். கேடும் - நீங்கும். உடம்பு கொண்டார்க்கு - இவ்வுடம்பை யெடுத்த மனிதர்களுக்கு. உடங்கு - ஒருசேர. உறலால் - சேர்த லால். தொடங்கி - (வந்தகாலந்) தொட்டு. இன்னுது - துன்பந் தருவது. உற புணர்க-உறுதியாகச் சேர்க. அம்மா-அசை. 'உறலால் இன்னுது' என் றியைக்க. 'உறலால் புணர்க' என முடிப்பின், அத்துணைச் சிறப்பில்லை.

கஎச. இறப்ப நினையுங்கால் - மிக ஆராயின்; இனி 'நினை யுங்கால் இறப்ப இன்னுது' என முடித்தலுமொன்று. முனியார் - வெறுக்கமாட்டார். பிறப்பினுள் - (ஒருவர்) பிறந்த பிறப்பில். பண்பு ஆற்றம் நெஞ்சத் தவர்களோடு - நற்குண முடையவற்றைச் செய்யவேண்டு மென்னும் எண்ண முடைய நல்லோருடனே. எஞ் ஞான்றும்-தம் ஆயுள் முழுவதும். நண்பு ஆற்றி - அன்புகொண்டு. நட்கப்பெறின் - நட்புக்கொள்ளப் பெறுவாரயின். 'பெறின்' என் பது பெறுதலின் அருமை குறித்துநின்றது.

கஎரு. அங்கணம் நீர்-சலதாரை நீரானது, உரவுநீர் சேர்ந்தக் கால்-சிறப்புப் பொருந்தியதோர் (ஆறு அல்லது குளத்தின்) நீரைச் சேரின். பிறிது ஆகி-வேறாய். தீர்த்தமாம் - புண்ணிய தீர்த்தமாம்.

'ஒரும்' 'என்பதனை எச்சமாகக்கொண்டு '(யாவரும்) அறியும்' என வும், ஏவல் வினைமுற்றாகக்கொண்டு, 'அறிவீராக' எனவும் பொருள் கூறுப; 'அஞ்சுவதோரு மறனே' என்புழிப்போல அஃது தசைநிலை யென்பர் ஒரு சிலர். மாட்சி - பெருமை. நலமாட்சி நல்லாரை-நற் குணமுடைய உயர்குடிப் பிறந்தோரை. குன்றுபோல் - மலைபோலப் பெருமை யுடையராய். இஃது எடுத்துக்காட்டுவமையணி.

கஎசு. ஒள் கதிர்-விளக்கமாகிய கிரணங்களை யுடைய. வாள் மதியம்-ஒளி பொருந்திய சந்திரனை; 'அம்' என்பது சாரியை. அம்கண்-அழகிய இடமகன்ற. விசும்பின்-ஆகாயத்தில். முயலும்-சந்திரன்பாலுள்ள களங்கத்தை, 'முயல்' எனபது சம்பிரதாயம்; சந்திரனுக்கு 'முயற்கூடு' என்கிற பெயரு மிருத்தல் காண்க. சந்திரனைத் தொழுகையிற் களங்கத்தை நீக்கித் தொழுவாரில்லை யாகலின், 'முயலுந் தொழப்படூஉம்' என்றார். குன்றிய சீர்மை யர்-குறைந்த சிறப்புடையார்; இது வடநூன்முடிபு. சீர்-சிறப்பு. குன்று அன்னார்-மலையை ஒத்த பெரியோர்களது. கேண்மை-நட்பு. இதுவும் எடுத்துக்காட் டுவமை.

கஎஎ. அளாய - கலந்த. அளா - பகுதி, 'ய்' இறந்த கால இடைநிலை, 'அ' விகுதி. தேரின்-ஆராயின். சிறுமையும்-கீழ்மைத் தன்மையும். பெருமையை சார்ந்து - பெருந்தன்மையைச் சேர்த லின். 'ஆம்' இரண்டும் அசை. இதுவும் எடுத்துக்காட் டுவமை.

கஎஅ. கொல்லை-(காட்டின்கட்) கொல்லைகளினும். இரும் புனத்து-பெரிய வயல்களினும். குற்றி-மரக்கட்டையை; 'குறமை' என்பது ஒற்றிரட்டி 'இ' என்னும் பெயர் விகுதி பெற்ற தென்க. உழு படைக்கு - கலப்பைக்கு. ஒல்காவே ஆகும் - அசையாதனவே யாம். மெல்லியரே - வலியில்லாரே. நல்சார்வு சார்ந்தார்மேல் - நல் லினத்தைச் சேர்ந்தார்கண்மீது. செற்றார் சினம் - பகைவருடைய கோபம். செல்லா ஆம்-பயன்படாவாம். இதுவும் மேலையணி.

கஎகூ. நிலம் நலத்தால்-விளைநிலத்தின் வளத்தால். நந்திய-பெருகிய. தம்தம் குலம் நலத்தால்-தாந்தாஞ் சேர்கிற கூட்டத்தின்

நன்மையான். கலம் நலத்தை-மரக்கலத்தினது திண்மையை. ஆகுவர்-(ஒழுக்கங் குன்றாது) பெருகுவர். தீ வளி-சுழல்காற்று. சிதைத் தாங்கு-அழிந்தாற்போல. சான்றாண்மை-(கல்வி முதலியவற்றான்) நிறைந்து (அவற்றை) ஆளுந்தன்மை.

கசய. மனத்தான்-மனத்தின் நிலைமையான்; இனி வேற்றுமை மயக்கமாகக்கொண்டு 'மனத்தின்கண்' எனப் பொருளுரைப்பினுமாம். மறு இலர் எனும்-குற்றமில்லாதவர்களாயினும். இனத்தால்-இனத்தின் தீமையான். எறி புனம்-வெட்டிய புனமானது. தீப்பட்டக்கால் - நெருப்புப்பற்றின். புனத்து - அப்புனத்தின்கணுள்ள. வேம்-(பயனில்லா மரங்களோடு ஒக்க) வேகும். இஃதெடுத்துக் காட்டுவமை.

கசக. ஈதல் இசையாது-(வறுமையாற் பிறர்க்குக்) கொடுத்தலும் முடியாது. சேண் - நெடுந்தூரத்தில். காதல் அவரும்-(முன்பு) விருப்பங் காட்டிய மகளிரும்; உம்மை உயர்வு சிறப்பு. கருத்து அல்லர்-(நம்மை) நினைத்தலும் இலராயினர்; 'கருத்து' என்பது முதனிலைதிரிந்த தொழிற்பெயர். காதலித்து-(ஆகலின்) அம்மகளிரை விரும்பி. ஆகும் - பெருகுவோம். அவாவினை - ஆசையை. கைவிட்டு - முற்றும் நீக்கி. போவதே - (துறவிற்குச்) செல்வதே. பொருள் போலும்-நற்காரியமாம்; 'போலும்' என்பது உரையசை.

கசஉ. இல் சார்வின் - இல் வாழ்க்கையை அடைந்ததனால். ஏமாந்தேம் - இன்புற்றேம்; 'ஏமா' பகுதி; அலமா, இறமா, அல்லா, சோகா என்பனபோல ஒருசொல். ஈங்கு-இவ்வுலகத்தில். அமைந்தேம்-(எல்லாவற்றானும்) நிறைந்தோம். பொச்சாந்து ஒழுகுவர் - (எதிர்நின்ற) துன்பத்தை மறந்து நடப்பர். பேதையார்-அறிவிலிகள். அ சார்பு-(இல்வாழ்க்கையாகிய)அப் பற்றுக்கள். நின்றன போன்று நிலையா - நிலைபுவனபோற் றோன்றி நில்லா தொழிவன. பரிவது-வருந்துவது; 'விரும்புவது' எனினுமாம்.

கசரு. மறுமைக்கு வித்து - மறுமை யின்பத்திற்கேதுவாகிய கருமத்தை. மயல்-மயக்கம். சிறுமைப்படாது-துன்பமடையாமல். 'அறிஞராய் வாழ்மின்' என மாறுக. நின்றுழி நின்றே காரணம்

இன்றி நிறம் வேறும்-(உடம்பு) நின்ற நிலையினிருந்தே (இளமை முதலிய அதன்) தன்மைகள் (ஒரு) காரணமுமின்றியே வேறு படும். பலவும் உள-(அஃதன்றியும் பிணி முதலிய) பலவு முண்டாம்.

௧௮௪. உறைப்பு அரு காலத்தும்-மழைபெய்தலில்லாக் காலத்தும். கேணி-குளம் ; இது திசைச்சொல். இறைத்து உலினும்-இறைத்துப் பருகினும்; இனி, (பயிர்களுக்கு) இறைத்துத் (தாமும்) பருகினும்' எனினுமாம். ஊர் ஆற்றும்-ஒரூர்க் குடிகளைத் தாங்கும், அஃதாவது காப்பாற்றும் ; 'ஊர்' என்பது ஆகுபெயர். கொடைகடனும்-(இரப்போர்க்கு) ஈதலாகிய கடமையும் ; உம்மை உயர்வு சிறப்பு. சாஅயக்கண்ணும் பெரியார்போல-(வறுமையால்) தளர்ந்த விடத்தும் பெரியோர்(ஆற்றவது)போல. ஈண்டு உம்மை பிரித்துக் கூட்டுக. மற்றையார்-சிறியார் ; 'மற்று' என்பது 'மற்றை' எனத் திரிந்தது, 'பிறிது' என்னும் பொருட்டாகலினென்க. ஆஅயக கண்ணும்-(செல்வத்தாற்) பெருகிய காலத்தும். 'சாயக்கண் ஆயக் கண்' என்புழிக் 'கண்' வினையெச்ச விகுதியென்க. அரிது-(ஆற்றுவது) இல்லை. அளபெடைகள் செய்யுளோசை நிறைக்க வந்தன.

௧௮௫. உறு புனல்-மிக்க நீரை. உலகு ஊட்டி-உலகத்தாரை உண்பித்து. அறும் இடத்தும்-(நீர்) அற்ற காலத்தும். கல் ஊற்று உழி-தோண்டப்படுகிற ஊற்றுக்குழியில் ; 'கல் ஊற்று' என்பது வினைத்தொகை நிலைத்தொடர். ஊறும்-(நீர்) சுரக்கின்ற. ஆறே போல்-நதியைப்போல. ஆற்றி-தானஞ்செய்து. கெட்டு உலந்தக் கண்ணும்-அழிந்து வருந்தினும். செயற்பாலவை-செய்யத்தக்கன வாகிய உபகாரங்களை.

௧௮௬. வரை - மலை. தீமை - குற்றம். கருநரைமேல் - பெரிய வெள்ளெருத்தின்மேல்; 'நரை' வெண்மையாகலின் ஈண்டுப் பண்பாகுபெயர். சூடுபோல-(போகட்ட) சூட்டின் வடுப்போல ; 'சூடு' என்பது 'முசுப்பு' என்பாருமுளர். கொன்றனன - கொன்றாற் போன்ற அல்லது கொன்றது போன்ற ; வினையெச்ச விகுதி

புணர்ந்து கெட்டது அல்லது தொழிற்பெயர் விகுதிபுணர்ந்து கெட்டதென்க. இன்னா-தீய செய்கைகளை. ஒன்றானும்-ஒரு குற்றமாயினும். தோன்றா கெடும் - விளங்கித் தோன்றாம லழியும்; 'தோன்றா' என்பது ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்.

௧௮௭. சிறுமை இசைந்த - இழிகுணம் பொருந்திய. இயல்பிலாதார்கண்-நற்குணமில்லாதாரிடத்து. பசைந்த துணையும்-நட்புக்கொண்டவளவும். பரிவு ஆம்-துன்பமேயாம். அசைந்த-நடுங்குதற்கேதுவாகிய தீச்செயல்களை; இது பெயர். நகையேயும்-விளையாட்டிலேயும். பாடுபெறும்-பெருமை யடையும்.

௧௮௮. மெல்லிய நல்லாருள் - வலிமையில்லாத நண்பரிடத்து. மென்மை - மென்மைக்கும். அஃது இறந்து-அம்மென்மையினீங்கி. ஒன்னாருள் - பகைவரிடத்து; 'ஒன்னார்' என்பது 'ஒன்றார்' என்பதன் மரூஉ. கூற்றம் (ம்) உட்கும் உட்கு உடைமை-யமனும் அஞ்சும்படியான அச்சமுடைமைக்கும்; உயர்வு சிறப்பும்மை தொக்கதென்க. எல்லாம் சலவருள் - எல்லாவகையானும் பொய்யரிடத்து. சால சலமே-மிகவும் பொய்யே பேசுதற்கும். நலவருள் - நல்லோரிடத்து. நன்மை-நன்மை செய்தற்கும். வரம்பு ஆய்விடல்-(ஒருவன்) எல்லையாய் விடுக; 'ஆய்விடல்' என்பது 'அல்' ஈற்று உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று: 'விடு' என்பது துணிவுப்பொருளது. இப் பாவின், 'வரம்பாய்விடல்' என்பது கடைக்கணின்று பல விடங்களிற் சென்றியைந்து பொருள் விளக்கலின் கடைவிளக்கணி. இப் பாட்டிற்குப் பிற முடிபு கூறுவாரு முளர்.

௧௮௯. கடுக்கி - (ஒருவன்) விரைந்து வந்து; 'கடுகி' என்பது ககரவொற்று விரிந்து நின்றது; இனி, 'கடுமை' என்னும் பண்படியாய்ப் பிறந்த வினையெச்சமெனக் கொண்டு '(முகத்தைக்) கடுமையாக வைத்துக்கொண்டு' எனப் பொருள் கூறுவாரு முளர். குறளை-புறங்கூற்று; அஃதாவது பிறனைக் காணாதவழி இகழ்ந்துரைத்தல். மயக்கி விடினும்-(தம்மை) மயங்கும்படி செய்யினும். மனம் பிரிப்பு - மனத்தின்கண் பிரிதல் அஃதாவது வேறு

யோடு வாழ்தல் செய்யாரோ? மற்று வினைமாற்று. ஓகாரம் எதிர்மறை. சொல் அளவு அல்லால்-சொல் மாத்திர மன்றி. பொருள் இல்லை-(அச் சொற்குரிய) பொருள் இல்லை. தொல் சிறப்பின்-பழமையான சிறப்பையுடைய. ஒள் பொருள் ஒன்றோ-ஒளியைத் தருகின்ற செல்வம் ஒன்றாற்றானோ? 'ஒள்பொருள்' என்பதற்கு 'நல்வழியிற் றேடிய பொருள்' என்பது மொன்று. ஆள்வினை-முயற்சி. என்று இவற்றான்-என்று சொல்லப்படுகிற இவை பலவற்றானும்; 'என்ற' என்பதன் அகரவீறு தொக்கது விகாரம். குலம் ஆகும்-ஒரு குலம் மேன்மையடையும்.

௧௱௬. ஆற்றும் துணையும் - (எடுத்ததொரு கருமத்தை) முடிக்குமளவும். உள் அடக்கி-(வெளிப்படுத்தாது) மனத்திலேயே அடக்கிவைத்து. ஊக்கம்-(தமது) முயற்சியை. ஊக்கம்-(பிறர்) உள்ளக் கிளர்ச்சியை. உறுப்பினால்-முகம் கண் முதலிய உறுப்புக்களால். ஆராயும் - ஆராய்ந்தறிகிற. ஒண்மையுடையார்-அறிஞர்களது. குறிப்பின்கீழ்-மதி நுட்பத்தின்; அன்றி, 'குறிப்பால் ஏவுகின்ற குற்றேவலில்' என்றுமாம். உலகு பட்டது-உலகம் அடங்கியிருக்கின்றது. இரண்டாமடி முற்றுமோனை. அறிஞர்கள் எடுத்த கரும முடியுமளவும் தாம் மேற்கொண்ட முயற்சியைப் பிறரறியா தடக்குவர்; பிறர் உள்ளக் குறிப்பை அவர் முகக்குறி முதலியவற்றாற் றாம் அறிவர். அத்தகையர் நினைத்தபடி உலகத்தாரை நடத்தும் வன்மையுடையார் என்பது கருத்து.

௧௱௭. சிதலை - செல்லினால். தினப்பட்ட - அரிக்கப்பட்ட. மதலையாய்-தாங்குந் தூணாய் நின்று; 'மதலை' என்னு மிச் சொல்லில் 'மகன்' என்னும் பொருளுந் தோன்றுதல் காண்க. வீழ்-விழுது. ஊன்றி ஆங்கு-தாங்கி நின்றாற்போல. குதலைமை-தளர்ச்சி. தான் பெற்ற-அவன் பெற்ற.

௧௱௮. ஈனமாய்-தாழ்ந்த நிலைமையுடையராய். இன்றி-(இன்றியமையாப் பொருள்களும்) இலராய். விளியினும்-இறக்க நேரினும். மானம் தலை வருவ-இழிவைத் தரக்கூடிய காரியங்களை; 'அவமானம்' என்பது 'மானம்' எனக் குறைந்து நின்றது.

செய்பவோ-செய்வரோ? வரி-புள்ளிகளையுடைய. பண்படுக்கும்-புண்செய்கிற. வள் உகிர்-கூரிய நகங்களையும். நோன்றாள்-வலிய கால்களையுமுடைய. அரிமா - சிங்கத்தின். மதுகையவர்-வலிமையுடையார். பொருளில் ‘இல்லிருந்தின்றி விளியினும்’ என்றிருத்தற்கேற்ப உவமையில் ‘குகையிலிருந்து உணவின்றி இறக்க நேரினும்’ என்றும்; உவமையில் ‘யானை வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றாள்’ என்றிருத்தற்கேற்பப் பொருளில் ‘பெருமுயற்சி கடைபோகச் செய்து முடிக்கும் கூரறிவும் தக்க உபாயமுமுடையார்’ என்றும் வருவித்துப் பொருளுரைக்க.

௧௯௯. தீம்-இனிமையாகிய. திரள் தாள்-திரண்ட தாளையுடைய. உளை-(குதிரை சிங்கம் முதலியவற்றின்) பிடரி மயிர் போன்ற. அலரி-பூவானது. தேன் கமழ் நாற்றம்-தேனொடு கூடிப் பரிமளிக்கின்ற மணம். இழந்து ஆங்கு-இழந்தாற்போல. பொறிக்கும் பேர் ஆண்மை இல்லாக் கடை-தன் பெயரை நிலைநிறுத்தற்கேதுவாகிய பெரிய முயற்சித் திறமை இல்லாதவிடத்து. பிறப்பின்-பிறப்பதனால். என் ஆம்-என்ன பயன் உண்டாம்? (ஒன்றுமில்லை யென்றபடி.)

௨௦௦. பெருமுத்தரையர்-பெருமுத்தரையர் என்பவர்; இதற்குப் ‘பெரிய முத்துக்களையுடைய பாண்டியர்’ எனவும், பெரிய மூன்று நாடுகளையுடைய சேர சோழ பாண்டியர் எனவும் பொருள் கூறுப. முத்தரையரென்பார் ஆசிரியர் காலத்திருந்த கொடைவள்ள லொருவ ரெனக் கோடலே சிறப்புடைத் தென்க. பிறண்டும் ‘நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே, செல்வரைச் சென்றிரவா தார்’ என்றிருத்தல் தெரிக. பெரிது உவந்து-மிக விரும்பி, கருனை சோறு - பொரிக்கறியொடு கூடிய சோற்றை; ‘கருனை’ என்பது பிறகறிகளுக்கும் உபலக்ஷணம். கயவர் ஆர்வர்-கீழ்மக்கள் உண்பர். கருனையை பேரும் அறியார்-பொரிக்கறி என்கிற பெயரையும் அறியாதவராய். நனி விரும்பு தாளாண்மை-(தாம்) மிக விரும்புகின்ற முயற்சியாற் பெற்ற. நீரும் அமிழ்து

ஆய்விடும் - (சோற்றொடு கூடிய) நீ ரொன்றுமே அமிர்தத்தை யொத்த சுவையுடைத்தாம்; உம்மை இழிவு சிறப்பு.

உ0௧. வயாவும் - கருப்பமடையுங் காலத்து உண்டாம் வருத்தத்தையும்; இதனை 'மசக்கை' என்பர் உலகர், 'வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானும் இப் பொருள் பெறப்படுத லுணர்க. வருத்தமும் - கருப்பம்முதிர அதனைப் பொறுத்துத்திரியுங் காலத் துண்டாம் வருத்தத்தையும். ஈன்றக்கால் நோவும் - மகப்பெறுங் காலத்துண்டாம் வருத்தத்தையும்; இதனைப் 'பிரசவவேதனை' என்ப வடநூலார். கவாஅன் - துடைமேற் கிடத்திய. மகன் கண்டு-மகனை நோக்கி; சிறப்புடைமை நோக்கி 'மகன்' என ஆண்பாலைக் கூறினரேனும் உபலக்ஷணத்தாற் பெண்பாலையுங் கொள்க. அசா தான் உற்ற வருத்தம்-(பல்வகைத் தளர்ச்சியானும் (ஒருவன்) அடைந்த துன்பமெல்லாம், உசாஅ தன் கேளிரை - நன்மை கேட்கும் தன் உறவினரை; 'உசா' என்பது உரிச்சொல்; 'உசாவே சூழ்ச்சி' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். கெடும்-இருந்தது தெரியாது நீங்கும்.

உ0உ. அழல்-வெயில், வெம்மை. மண்டு போழ்தின் - மிக்க காலத்து. நிழல் மரம்போல் - நிழலையுடைய மரம் (ஓரமின்றி ஒரு படித்தாய் ஒதுங்குவார் யாவர்க்கும் உதவுவது) போல. நேர் ஒப்ப தாங்கி - (வருந்தி வந்த உறவினரை எல்லாம்) ஒரு படித்தாய்க் காத்து. பழுமரம்போல் - ஆலமரம்போல; இதற்குப் 'பழுத்தமரம்' என் றுரை பகர்வாரு முளர். துய்ப்ப-அநுபவிக்க. 'வருந்தி' என் புழி உம்மை தொக்க தென்க.

உ0௩. அடுக்கல்மலை - (கற்களா ஒன்றின்மே லொன்று) அடுக்கின்ற போன்ற மலை; 'ஒன்றொ டொன்று தொடர்ச்சியான மலை' எனினுமாம். எடுக்கலம் - பாதுகாக்கமாட்டோம். என்னார் பெரியோர் - எனப் பெரியோர் (ஒருபோதுங்) கூறார். அடுத்து அடுத்து - நெருங்கி நெருங்கி. பொறுக்கலா - சுமக்கமாட்டாத. கொம்பு - மரக் கிளை. 'கொம்பு இல்லையே' என்க. 'பெரியோர்' என்றமைக்

கேற்பத் ' தஞ் சேர்ந்தவரை ' என்றது ' தன் சேர்ந்தவரை ' என்றது ஒருமைப் பன்மை மயக்கம்.

உ0௪. உலகு அறிய - உலகத்தார் அறியும்படி. தீர கலப்பினும்-(தொடக்கத்தில்) மிகக் கலந்து நிற்பினும். சிறு இனத்தார் கேண்மை - அல்ப குணமுடையாரது நட்பு. நிலைதிரியா நிற்கும்-தாம் மேற்கொண்ட துறவுநிலை யொழுக்கம் மாறுபடாது அதன் கண் நிற்கின்ற. நெறி அடைய - (வீடென்னும்) நற்கதியைப் பெறுதற்கு. நின்ற ... - தவமுயற்சியிற் பிரியாது நிலைநின்ற அத்தன்மைத்து. ஒற்கம் இல் ஆளர் தொடர்பு - (குணத்) தளர்ச்சியில்லாத பெரியோரது உறவு.

உ0ரு. இன்னர் - இவர். இனையர் - இத் தன்மையர். எமர் - (இவர்) எமக்கு வேண்டியவர். பிறர் - (இவர்) எமக்கு வேண்டாதவர். என்னும் சொல் - என்று சொல்லுகின்ற சொல். என்னும் - மிகச் சிறிதும். இயல்பினால் - தன்மையினால்; 'தன்மையோடு' என்றுரைத்தலுமொன்று. துன்னி-சேர்ந்து. தொலைமக்கள் - (துன்பத்தால்) அழிகிற மனிதரது. யார் மாட்டும் - யாவரிடத்தும். தலைமக்கள் ஆகற்பாலார் - மேன்மக்களாகுந் தகுதியுடையோர். எகாரம் பிரிநிலை.

உ0௬. பொன் கலத்து - பொன்னாற் செய்த பாத்திரத்தில். புலி உகிர் வால் புழுக்கல்-புலிநகம்போல வெண்மையான சோற்றை. அக்காரம்-சர்க்கரை; இஃது 'இக்ஷுஸாரம்' என்னும் வடமொழிச் சிதைவென்றும் அஃது இலக்கணையாற் சர்க்கரைக் காயிற்றென்றுங் கூறுவர் ஒரு சிலர். அமரார் - உறவினராகப் பொருந்தாதவருடைய. கைத்து-கையால் வந்ததை. உண்டலின் - உண்ணுதலைக் காட்டிலும். உப்பு இலி புற்கை - உப்பில்லாததான புல்லரிசிக் கூழை. எ கலத்தானும் - எந்தப் பாத்திரத்திலாயினும். இனிது - (உண்பது) இனிமையுடையது.

உ0௭. நாள்வாய் - காலத்தில். நள்ளாதார் - உறவினரல்லாதவரது. வேளாண்மை - உபகாரமாகக் கொடுக்கப்பட்ட. வெம் கருனை - சூடுமாறாத பொரிக்கறிச் சோறும்; சிறப்பும்மை தொக்

கது. 'விரும்பப்படுகிற கறியமுதும்' எனினுமாம். அபரானப்போழ்தின்-பிற்பகற் போதின்கண்; 'அபராந்ஹம்' என்னும் வடமொழித் தொடர் 'பூர்வாந்ஹம்' என்பதன் மறுதலை. அடகு - இலைக்கறி. தமராயார் - உறவினரானவர்.

உ0அ. முட்டிகை - சம்மட்டி. முனியாது - வெறுப்பின்றி; அஃதாவது ஓயாது; இனி, 'அன்பு காட்டி' என்பது மொன்று. வைகலும் - நாடோறும். கொட்டி - (பிறபொருளை) அடித்தடித்து; 'இன்னது வேண்டுமென வருத்தி' என்பதுமாம். உண்பாரும் - உண்டு உயிர் வாழ்வாரும். குறடு போல்-குறட்டைப்போல; நெருப்பின் வெம்மை நணுகுங்கால் நெருப்பிற் பொருளை விட்டிட்டுத் தான் நீங்கி ஒழியும். கைவிடுவர் - (ஒருவர்க்குத் துன்பம் வந்த காலத்து அவரைக்) கைவிட்டு நீங்குவர். நட்டார் - அன்புடை உறவினர். சுட்டுக்கோல்போல - உலையாணிக் கோலைப்போல. எரியும் - (அப் பொருளுடன்) நெருப்பையு மடைவர்.

உ0கூ. நறுமலர் - நல்லமணம் அமைந்த மலர்களாலாகிய. தண் கோதாய் - குளிர்ச்சி பொருந்திய மாலையை யுடையவளே! நட்டார்க்கு - உறவினர்க்கு. நட்டார் - உறவினர். மறுமையிலும் செய்வது ஒன்று உண்டோ - மறுமையிலுஞ் செய்வதோ ருதவி (உலகத்தில்) உண்டோ? (இல்லையென்றபடி). இறுமளவும் - இறந்தொழியும் வரையும்; உம்மை இழிவு சிறப்பு. அவரொடு இன்பு உறவ இன்பு உற்று - அவர் இன்புறுவனவற்றிற்குத் தாமும் அவரொடு இன்புற்று. எழீஇ - அவரிற் பிரியாது சென்று. அவரொடு துன்பு உறவ துன்பு உறுக்கால் - அவர் துன்புறுவனவற்றிற்குத் தாமும் அவரொடு துன்புறுரெனின். இது மகடூஉ முன்னிலை.

உக0. வேறு இருந்து-தனியே இருந்து. வெருகு கண் வெம் கருனை - பூனையின் கண் போன்ற நிறம் வாய்ந்த சூடான பொரிக் கறியும்; உயர்வு சிறப்பும்மை தொக்கது. தன் போல்வார் - தன்னை ஒத்த உறவினர். தயங்கு நீர் தண் புற்கை-நீர் மிகுந்த குளிர்ந்த புல்லரிசிக்கூழும்; இழிவு சிறப்பும்மை தொக்கது. என்போடு இயைந்த அமிழ்து - உடம்போடு ஒன்றுபட்டு நின்ற அமிர்தமாம். 'என்பு'

என்பது சினையாகுபெயர் 'அமிழ்து' என்பது 'மரணத்தை யொழிப்பது' என்னும் பொருளைத் தரும் 'அமிர்தம்' என்னும் வடசொல்லின் சிதைவு.

உ௧௧. கருத்து உணர்ந்து-கருத்தினுற் கற்கப்படும் நூல்கள் இன்னவென அறிந்து; இனி '(நூல்களின்) உட்பொருளை அறியா நின்று' என்பாரு முளர், அவர் 'உணர்ந்து' என்பது 'உணரா நின்று' என்னும் எச்சத்திரிபு என்பர். கற்று அறிந்தார்-படித்துத் தேர்ந்தவரது. கேண்மை-நட்பு. எஞ்ஞான்றும்- எப்பொழுதும். குருத்தின் கரும்பு தின்று அற்று-நுனிக் குருத்திலிருந்து (அடி வரையில்) கரும்பைக் கடித்துத் தின்றாற் போலும்; அஃதாவது வரவர இனிமை மிகும். மதுரம் இல்ஆளர் தொடர்பு-கல்வியறி வாகிய இனிய தன்மை யில்லாதவர்களது நட்பு. குருத்திற்கு எதிர்செல தின்று அன்ன தகைத்து-(அக் கரும்பையே) குருத்திற்கு எதிரே செல்லும்படி (அடியிலிருந்து நுனிவரையில்) தின்றாற் போன்ற தன்மையுடைத்து; அஃதாவது வரவர இனிமை குறையும்.

உ௧உ. இல் பிறப்பு எண்ணி-(தமது) உயர்குடிப் பிறப்பை நினைத்து. இடைதிரியார்-நடுவில் (தமது நற்குணத்தினின்றும்) மாறுபடார். என்பது ஓர் நல்புடை - என்று சொல்லப்படுவ தொரு நல்ல தன்மையை. கொண்டமை அல்லது-(தாம் நட்புக் கொள்ளுதற்கு ஒரு முக்கிய காரணமாகக்) கொண்ட தன்றி. மனம் அறியப்பட்டது ஒன்று அன்று-(பிறரொருவர்) மனநிலை ஒருவ ரால் அறியப்பட்ட தென்பது ஒரு தன்மை யன்று. ஒருவர் மன நிலை யுள்ளபடி கண்டு நட்புக்கோடல் இசையாது; ஆகலின், உயர்குடிப் பிறந்தாரொடு நட்புக்கொள்ள வேண்டும்' என்பது கருத்து.

உ௧௩. நண்பு ஒரீஇ-நட்பை நீக்கி. கேண்மை-நட்பு. கெழீஇக் கொளல்-தழுவிக் கொள்ளல். அறிந்து அறிந்தும்-பல காலம் பயின்றிருந்தும்; இவ் வடுக்கு மிகுதி பற்றியது. எறிந்த வேல் மெய்ப்பதூஉ-(தன்னொடு பழகினவர்) எறிந்த படையானது தன் உடம்பில் தைத்ததாயிருக்கையில். வால் குழைக்கு நாய்-வாலைக்

குழையவைத்து ஆட்டிக் கொண்டு தன் எளிமையையும் அன்புடைமையும் காட்டி நிற்கும். 'ஒரீஇ, கெழீஇ' என்பன சொல்லிசையளபெடை.

உகச. பக்கத்தார் ஆயினும்-பிரியாது பக்கத்திலிருப்பவராயினும். நெஞ்சில் ஒட்டாரொடு-மனத்திற் பொருந்தாதாரோடு. ஒட்டார்-சேரார். நீத்தார்-பிரிந்தார். கைவிடல் உண்டோ-பிரிதலுண்டோ ? இல்லையென்றபடி. யாத்தாரொடு-(அன்பாற்) கட்டினவர்களொடு. யாத்த - உறுதியாகக் கொண்ட. தொடர்பு-நட்பு.

உகரு. கோட்டுப்பூ-மரக்கொம்பிற் பூக்கும் பூ; இது கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நால்வகைப் பூக்களினொன்று. பின் கூம்பாது - பின்னர்க் குவியாது. வேட்டதே வேட்டது-(முதலில் ஒருவரை யொருவர்) விரும்பியதே (முடிவுவரையும் மாறாது) விரும்பியது. 'நட்பாட்சி ஆம்' என மாறுக. தோட்ட-தோண்டிய; இதனைப் பூவிற் கடையாக்கித் 'தோடு கள்ளயுடைய' எனப் பொருளுரைத்தலு மொன்று. கயப்பூபோல் - குளத்திற் பூத்த பூவைப்போல. பின் கூம்பு வாரை-நாள் செல்லச் செல்ல (அன்பு) சுருங்குவாரை. நயப்பாரும்-விரும்புவாரும். நட்பாரும்-நட்புக்கொள்வாரும். இல்-இல்லை.

உகசு. கடையாயார் - கடைப்பட்டார். கமுகு அனையர்-பாக்கு மரத்தை யொப்பர் ; இஃது இடைவிடாது போற்றி வளர்ப்பி னன்றிப் பயன் தாராது. வனை இடையாயார் - மற்றை இடைப்பட்டார். தெங்கின் அனையார் - தென்னை மரத்தை யொப்பர் ; ஈண்டு 'இன்' என்பது சாரியை, இஃது இடைவிட்டுப் போற்றி வளர்ப்பினும் பயன் தருவது. தலையாயார்-தலைப்பட்டார். எண் அரும் - (பயனை) அளவிடற்கரிய. பெண்ணை போன்று-பனைமரத்தை யொத்து ; இது விதை நட்டு அன்றொருநாளே நீர் வார்ப்பினும் பெரும் பயன் தருவது. இட்டஞான்று-நட்புச் செய்த நாளில். இட்டதே-செய்த உதவியேயாம் ; ஏகாரம் தேற்றம். கமுகு, தென்னை, பனை இவை முறையே வேண்

டியவற்றை இடைவிடாது தருபவரொடு நட்புச் செய்யும் அதமர்க்கும், இடைவிட்டுத் தருபவரொடு நட்புச் செய்யும் மத்திமர்க்கும், ஒரு கால் சிறிதுதவி செய்யின் பெருநட்புக் கொள்ளும் உத்தமர்க்கும் உவமை.

உகஎ. கழுநீருள்-கழுநீரிற் சமைத்த; இது 'கழுவுநீர்' என்பதன் விகாரம். கார் அடகேனும்-பசுமையாகிய கீரையாயினும். விழுமிது ஆ கொள்ளின்-(ஒருவன் நட்பு) சிறப்புடையதாகக் கருதின்; 'விழுமஞ் சீர்மையும் சிறப்பு மிடும்பையும்' (தொல், உரியியல்-ருகு) என்பது காண்க. விழுமிய - சிறந்த. குய் - தாளித்த கறிகளோடும் துவை - துவையல்களோடும். ஆர் - நிறைந்த. மேவாதார் - (அன்போடு) பொருந்தாதவர். கைத்து - கையிலுள்ளதை. காஞ்சிரங்காய்-எட்டிக்காய் போல இன்னாதாம்.

உகஅ. நாய் கால் நாயின் கால்களிலுள்ள. நன்கு அணியர்-மிக நெருங்கினவர். ஈ கால் துனையும்-ஈயினது காலினளவும். என்னும்-என்ன பயனைச் செய்யும்? சேய்த்து ஆனும்-நெடுந் தூரத்திலிருப்பினும். செய் விளைக்கும்-கழனியைப் பயிர் விளையும் படி செய்கின்ற. வாய்க்கால் அனையர் தொடர்பு-வாய்க்காலை ஒத்தவரது நட்பு.

உகக. தெளிவிலார் - தெளிந்த அறிவில்லாதவர்கள். நட்பின்-நட்பையுங் காட்டில். விளியா-எவ்வுபாயத்தானும் தீராமல். அளிய இகழ்தலின்-(ஒருவன் நெஞ்சம்) மிகப் புண்படும்படி பழித்தலையுங் காட்டில். கோறல்-கொல்லுதல். இல்ல புகழ்தலின்-(இல்லாத குணங்களைச் சொல்லிப்) புகழ்தலையுங் காட்டில்.

உஉ0. மரீஇ-பழகி. மயங்கி-கூடி. பொரீஇ-(குணம்) ஒத்து. பொருள் தக்கார் - நன்கு மதிக்கும் பொருளால் தக்கவர்களை. கோடலே - நட்புக்கொள்ளுதலே. பரீஇ-விரைந்து; 'விரும்பி' எனினுமாம். செருக்கும்-அழிக்கின்ற. இன்னு - துன்பத்தைத் தருவதாம்; இன்னது ' என்பது ஈறு தொக்கது. மரீஇ-நட்புக் கொண்டு. பின்னை-(தீக்குணத்தை அறிந்த) பின்பு.

பன்மை யொருமை மயக்க மென்பது மொன்று. இப் பாட்டிற்கு வேறு முடிபும் பிற பொருளுங் கூறுவாரு முளர்.

உஉக. தமர் - தமது நண்பினர். தமர் அன்மை - நண்பின ரல்லாமையை. தமரினும் நன்கு மதித்து-நண்பரினும் மிகக் கௌர வித்து. தம் உள் அடக்கிக்கொளல்-தமது மனத்துள் அடக்கிக் கொள்க; 'கொளல்' என்பது அல்லீற்று உடன்பாட்டு வியங் கோள்.

உகூ0. வினை - (அதற்கு) மாறுன. நாடி திரிவேனேல் - ஆராய்ந்து திரிவேனுனல். நட்டான் - நண்பனது. மறை - இரகசி யத்தை; (பிறர் அறியாது) மறைக்கப்படுவது அல்லது மறக்கத் தக் கது என்பது சொல்லின்படி பொருள். காவா விட்டவன்- மறைத்து வையாது வெளியிட்ட மாபாவி. செல்வுழி - செல்லும் நரகத்திற்கு. அறை - ஒலிக்கின்ற. வையம் - உலகததார்; இஃ தாகு பெயர். நக-(என் செய்கையைப்பற்றி) அவமதித்துச் சிரிக்கும்படி.

உகூக. செறிப்பு இல் - கட்டுக்கோப்பு இல்லாத; செறிப் பாவது அமைதி. கூரை-இஃது ஓலே, வைக்கோன் முதலியவற்றுன் வேய்ந்த சிறுவீடு. சேறு ஆணையாக - சேற்றினுல் அணை அமையச் செய்து. நீர் இறைத்தும் - (உள்ளே புகுந்த) நீரை (வெளியே) இறைத்தும். நீர் ஏற்றும்-(மேல் விழும்) நீரைப் (பாத்திரங்களின்) ஏற்றும். கறை குன்றம் - கரிய மலேகளினின்று; 'அம்' என்பது சாரியை. புனல் வரை-நீ ரெல்லேயுடைய; 'வரை' என்பது 'மலே' யாயின், 'குன்றம்' அதன் சிகர மென்க. தம் கருமம் முற்றும் துணை-தங்கள் காரியம் முடியும் வரை.

உகூஉ. சீரியார் - சிறப்புடையார். சிறந்த சிறப்பிற்று ஆய் - மிக்க சிறப்புடையதாய். மாரி போல் - பெய்யும் மழைபோல. மாண்ட-மாட்சிமைப்பட்ட; 'மாண்' என்பது பகுதி. பயத்தது- பயனுடையது. சிறந்தக்கால் - மிகுந்தால். மாரி வறந்தக்கால் போலும் - மழை (பெய்யாது) வறந்துபோனுல் (அந்நிலேமை) போலப் பயனற்றதாம். ஏகாரம் தேற்றம்.

உ௬௬. நுண் உணர்வினரொடு - நுட்பமான அறிவுடையா ரொடு. நுகர்வு உடைமை - (அவர்கள் கூட்டுறவால் ஆகும் இன் பத்தை) அனுபவித்தல். விண் உலகே ஒக்கும் விழைவிற்று-சுவர்க்க வின்பத்தையே ஒத்திருக்கும் விரும்பத்தக்க மேன்மை யுடையது ; இனி, 'விண் உலகே ஒக்கும்,' 'விழைவிற்று' எனத் தனித்தனி முடித்துப் பொருள் கூறுவாரு முண்டு. ஊதியம்-பயன். புணர்தல்- சேர்தல். நிரயத்துள் ஒன்று-நரகத்துன்பங்களுள் ஒன்றாகும். 'விண் ணுலகு, நிரயம்' என்பன ஆகுபெயர்கள்.

உ௬௭. வை தீ போல் - வைக்கோலிற் பற்றிய நெருப்புப் போல. செல்லாதே-நிலைத்திராது. நந்தும்-அழியும். 'மலை' என் றது ஈண்டுப் பொதியமலையை. பந்தம் - (அன்பின்) கட்டு. தொடர்பு-நட்பு.

உ௬௮. செய்யாத - செய்ய முடியாத காரியங்களை ; இது பெயர். செய்தும் நாம் - யாம் செய்வோம். செய்வதனை - செய்ய முடிந்தவற்றை ; 'செய்வது' என்பது சாதியொருமை. தாழ்த்துக் கொண்டு ஓட்டலும் - தாமதித்துக் கொண்டு காலங்கழித்தலும். இன்பு உறூஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும்-(ஐம்புலன்களான் நுகரும்) இன்பங்களை அடையுந் தன்மையை இகழ்ந்த துறவிகளுக்கும். துன்பு உறூஉம் பெற்றிதரும் - துன்பங்களை அடையுந் தன்மை யைக் கொடுக்கும்.

உ௬௯. ஒரு நீர்-ஒரு குளத்து நீரில். பிறந்து ஒருங்கு-ஒரு சேரப் பிறந்து. நீண்டக் கடைத்தும்-வளரினும். விரி நீர் குவ ளையை-மலருந் தன்மையுடைய நீலத்தை. ஆம்பல்-அல்லி. ஒக் கல்லா-ஒவ்வா. பெருநீரார்-பெருந்தன்மை யுடையார். நீர் அல் லார்-பெருந்தன்மை இல்லாதார். இஃது எடுத்துக்காட் டுவமை.

உ௭0. முற்று அல்-முதிர்ச்சி யில்லாத ; 'முற்று' என்பது முதனிலைத் தொழிற் பெயர். சிறு மந்தி-சிறிய பெண் குரங்கு. முன்பட்ட-தன் எதிரின் வந்த. நெற்று கண்டன்ன-(பயற்றங் காயின்) நெற்றைக் கண்டாலொத்த. குற்றி ஞெமிர்த்திட்டு-நெரித் துக் குத்தி. பறிக்கும்-(அதன் கையிலுள்ள கனி முதலியவற்றை)

அபகரித்தற் கிடமாகிய. இன்னாது-துன்பந் தருவது. ஒற்றுமை கொள்ளாதார்-தமது மனத்தொடு ஒன்று படாதவர்.

உருஅ. முட்டு உற்ற போழ்தின்-(தன்னுடன் நட்புச் செய்தவனுக்குத்) துன்பம் நேர்ந்தபோது. முடுகி-விரைந்து. நட்டான் ஒருவன் கை நீட்டானேல்-(அத் துன்பத்தின் அவனை நீக்குதற்கு) அந் நட்புச் செய்த ஒருவன் வசத்தின் ஒப்பிக்கவில்லை யெனின். கடிமனை-காவலிலுள்ள மனைவியை. கட்டழித்தான்-உறுதியான கற்பை அழித்த பாவி. செல்வுழி-செல்லும் நரகத்திற்கு. கெடு மொழி வையம்-பெருமையாகிய மொழியைக் கூறுகின்ற அறிஞர்கள்; 'புகழ்ச் சொல்லும் பழிச் சொல்லும் அழியாமல் வழங்கும் இவ்வுலகத்தார்' எனவும், 'மிக்க பிரசித்தி பெற்ற உலகம்' எனவும் பொருளுரைப்பதுமாம். நக-(கண்டு) அவமதித்துச் சிரிக்கும்படி.

உருக. ஆன் படு நெய்-பசுவின் நெய். கலனுள்-பாத்திரத்தில். களைந்து-நீக்கி. வேம்பு அடு நெய் பெய்து அனைத்து-வேப்ப நெய்யைப் பெய்து வைத்தாற்போலும். 'அரோ' என்பது அசை. தேம்படு-தேன் கூடுகள் நிறைந்த; 'தேன்' என்பது ஆகு பெயர். நயம் உணர்வார்-நட்பின் நன்மையை அறிவாரது. ஓரீஇ-நீக்கி. புல் அறிவினரொடு-அற்ப புத்தி யுடையவரோடு.

உசல. உருவிற்கு அமைந்தான் கண்-பெருமைக்குரிய சில நற்குணங்களுடையா னிடத்தே; இனி, 'வடிவழகிற்கு ஓர் இடமாகப் பொருந்தினவ னிடத்தே' எனப் பொருளுரைப்பாரு முளர். ஊர் ஆண்மை இன்மை-ஊரார்க்கு உபகாரஞ் செய்யுங் குணமில்லாமை. பருகற்கு-குடிப்பதற்கு. நீர் அளாயற்று-நீர் கலந்தாற்போலும். தெரிவு உடையார் - அறிவுடையார். தீ இனத்தார் ஆகல் - கொடிய நண்பரை யுடையராதல். நாகம்-(உயர்ந்த) நாகப் பாம்பு. விரிபெடையோடு - பெட்டைவிரியன் பாம்பினுடன். ஆடி விட்டற்று - புணர்ந்தாற் போலும்; கெடுவரென்பது கருத்து. நாகம் விரியன்பெடையுடன் புணரிற் சாகுமென்பர்.

உசக. பணிவு இடம் நோக்கி - தாழ்ந்த நிலைமையை யடைந் திருத்தலைக் கண்டு. தகவு உடையார் - நடுவுநிலைமையுடையார். தாமேயும் நாணி-தம்மில் தாமே வெட்கமடைந்து. தலைச்செல் லார்-(அவரை வெல்லுதல் குறித்து)அச் சமயம் போகார். 'காணாய்' என்பது முன்னிலை யொருமை யசை; இதற்குப் 'பாராய்' எனப் பொருள் கூறுவாரு முண்டு. ஆயக்கால் - ஆனால். திங்களை-சந்தி ரனை. அணங்கு அரு துப்பின் அரா-துன்பமில்லாத வலிமையுடைய பாம்பு; 'அரா சேராது' என்றியைக்க. இஃது எடுத்துக் காட்டுவமை.

உசஉ. நளி கடல் - பெரிய கடலின். 'தடவுங் கயவும் நளி யும் பெருமை' என்பது தொல்காப்பியச் சூத்திரம். நல்கூர்ந்த - வறுமையடைந்த. அணி கலம்-ஆபரணம். பணிவு இல் சீர் - அடக்க மில்லாத தன்மையுடனே. மாத்திரையின்றி - அளவின்றி அஃதா வது வரம்பு கடந்து. நடக்குமேல் - நடப்பனானால். வாழும் ஊர் - இவன் வாழ்கின்ற ஊராரால். கோத்திரம் கூறப்படும் - (அவன் பிறந்த) குலம் (இழித்துப்) பேசப்படும். 'கோத்ரம்' என்பது வடசொல்.

உசக. வித்திடினும் - விதைப்பினும்; இஃதொருசொல், 'வித்து இடினும்' எனப் பிரிப்பாருமுளர். காஞ்சிரம் காழ்-எட்டி விதை. தெங்கு ஆகாது - தென்னை மர மாகாது. தென் நாட்டவ ரும்-தென்றிசையிற் பிறந்தோரும். சுவர்க்கம் புகுதலால்-(குண நலத்தாற்) சுவர்க்கலோகஞ் சென்றடைதலான். தன்னால் தான் ஆகும் மறுமை-தன் குணத்திற்கொத்த ஒழுக்கத்தான் மறுமைக் கதி யுண்டாம். கொன்ஆளர்-வீண்காலங் கழிப்போர்; 'கொன்' ஆவது பயனின்மை. சாலப் பலர் - மிகப் பலருண்டு. தென்றும் மிலேச்ச தேசமென்றும், அங்குப் பிறந்தார்க்கு நற்கதியில்லை யென் றுங் கூறும் வடநாட்டார் கொள்கையை மேற்கொண்டு ஓராற்றான் மறுத்தவா றிது. உம்மைகளை முறையே எதிரது இறந்தது தழுவிய எச்சப் பொருளனவாகவேனும், இழிவு உயர்வு சிறப்புப் பொரு ளனவாகவேனுங் கொள்க. நற்கதி பெறுதற்கு ஒழுக்கமே கார

ணம்; இடவேறுபட்டான் அது பெறுதலும் பெறுதலின்மையுங் கூறுத லடாதென்பது கருத்து.

உசச. வேம்பின் இலையுள் - வேப்பிலையில். கனியினும்-பழுத்தாலும். வாழை - வாழைப்பழம்; இஃதாகு பெயர். தீம் சுவை-இனிய உருசி. யாதும் திரியாது-ஒரு சிறிதும் மாறுபடாது. ஆங்கே-அது போலவே; இஃது உவமவுருபு. இனம்-சேர்ந்த கூட்டம். இயல்பு உடையார் - நல்லியற்கை யுடையாரது. மனம் து ஆம் பக்கம் அரிது-மனங் கொடிதாகுந் தன்மை யில்லை.'

உசரு. கடல் சார்ந்தும்-(உப்பு நீரையுடைய) கடலை யடுத்தும். இன் நீர்-இனிய சுவையுடைய நீர். மலை சார்ந்தும்-(இனிய அருவிநீரையுடைய) மலையை யடுத்தும். உப்பு ஈண்டு உவரி-உப்பு நிறைந்த உவர்நீர். தம் தம் இனத்து அனையர் அல்லர்-தங்கள் தங்கள் இனத்தாரை யொத்தவ ரல்லர். 'என்பார்' என்புழிப் படு' விகுதி தொக்கது.

உசசு. பரு அரை-பருத்த அரையையுடைய; 'பராரை' என்னும் பண்புத் தொகை மரூஉ முடிபு. படு-பொருந்தின. ஓராஅலும்-(கூடி) நீங்குதலையும். 'ஓரால்' என்பது 'அல்' ஈற்றுத் தொழிற் பெயர். ஒட்டலும்-(மறுபடி) சேர்தலையும். செய்பவோ-செய்வரோ; செய்யாரென்றபடி. நல்ல மரூஉ செய்தியார் மாட்டும்-நற்குணங்கள் பொருந்தின செய்கையுடையா ரிடத்தும்; 'நல்ல மரூஉ செய்து யார் மாட்டும்' எனப் பிரித்து யாவரிடத்தும் மிக்க நட்பைச் செய்து எனப் பொருள் கோடலுமாம். தங்கு மனத்தார்-உறுதியாய் ஒரு நிலை நிற்கின்ற மனமுடையார். விராய்-ஆராயாது கலந்து. செய்யாமை-நட்புச் செய்யாமை.

உசஎ. உணர உணரும்-(நூற்பொருளை) அறியும்படி ஆராயும். 'புணர இன்பம் புணருமாம்' என்க. புணரின்-கூடுமாயின்; (ஆராய்ந்து) சேரின்' என்பதுமாம். தெரிய தெரியும் - (நூற்பொருள்) விளங்கும்படி ஆராய்ந்தறியும். 'பிரிய நோய் பிரியுமாம்' என்க. 'ஆம்' இரண்டும் அசை. 'உணர, தெரிய

என்பன பிறவினைப் பொருளில் வந்த தன் வினையெனக் கொண்டு 'பிறர் உணர்த்த, பிறர் தெரிவிக்க' எனப் பொருள் கொள்வாரு முளர். இதன்கண், சொற் பொருட் பின்வருநிலை யணி இருத்தல் காண்க.

உசஅ. நிறுப்பானும்-நிறுத்த வல்லவனும். கீழ்-கீழான நிலையில். தலையாக-முதன்மையுள்ளவனாக. தான்-தானே யாவன். ஒருவனுடைய உயர்வு தாழ்வுகளுக்கு அவனுடைய அறிவுடைமையும் அறிவின்மையுமே காரணங்களா மென்பது கருத்து.

உசகூ. கருமம் வரிசையால்-காரியத்தின் முறைமையால்; இனி, '(முற் பிறப்புக்களிற் செய்த) வினைகளது முறைமையால்' என்பது மொன்று. கல்லாதார் பின்னும்-கல்வியறி வில்லாதார் பின்னும். பெருமை உடையாரும்-பெருமை யுடைய அறிஞர்களும். சேறல்-செல்லுதல். அரு மரபின்-அருமையாகிய முறைமையினால். ஓதம் அரற்றும்-அலைகள் இரைகின்ற. பேதைமை யன்று-அறிவின்மையாகாது. 'அது அறிவு' என்றது அஃது அறிவின் காரியமேயாம்; 'ஆய்தம்' செய்யுள் விகாரத்தாற் றொக்கது. 'பேதைமை யன்று' என்றதன் பின் 'அது அறிவு' என்பது அநுவாதம் (வழிமொழிதல்).

உருo. கருமமும்-(பொருளடைதற்குக் காரணமான) தொழில்களையும். உள்படா-உடன்பட்டுச் செய்து. போகமும்-(அப் பொருளா னெய்தற் குரிய) இவ்வுலக வின்பங்களையும். துவ்வா-அனுபவித்து. தருமமும்-(அப் பொருளா னெய்தற் குரிய) அறத்தையும். தக்கார்க்கே-(கல்வி யறி வொழுக்கங்களால்) தகுதி யுடையார்க்கே. செய்யா-செய்து. மூன்றும் ஒருநிலையே முட்டு இன்றி முடியுமேல்-இம் மூன்று காரியங்களும் ஒருபடித்தாகவே தடையின்றி முடியுமானால்; 'ஒரு நிலையே' என்பதற்கு 'ஒரு பிறப்பிலேயே' எனப் பொருள் கோடலு மொன்று. அஃது-அந் நிலைமை. பட்டினம் பெற்ற கலம்-பற்பல தேயஞ் சென்று பண்டமாற்றி ஊதியங் கொண்டு மீண்டு தனது பட்டினத்தை வந்தடைந்த மரக்கலத்தை

ஒக்கும். பட்டின மென்பது நெய்தனிலத்தூர். 'அது கலம் என்ப' என்றியைக்க.

உஙக. அஃது - அந் நுண்ணுணர்வு. பண்ணைப் பணைத்த - மிகவளர்ந்த ; இது 'கன்னங் கறுத்த, சின்னஞ் சிறிய, பென்னம் பெரிய' என்பன போன்றதோ ரடுக்கென்க. பெண் அவாய்-பெண் தன்மையை விரும்பி. ஆண் இழந்த-ஆண் தன்மையை ஒழித்த ; 'பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால், ஆண்மை விட் டல்லத வாவுவ பெண்பால், இருமையு மஃறிணை யன்னவு மாகும்' [நன்னூல்] என்றார் பின்னோரும். கண் அவா தக்க-யாவர் கண்களும் விரும்பத் தக்க. கலம்-ஆபரணங்களை. 'பெண் அவாய் அணியாளோ' என முடிபு செய்க.

உஙஉ. ஆன்ற-நிறைந்த. கேள்வி பயன்-நூற் பொருளைக் கேட்டலான் வரும் பயன்களை. பாடு-பெருமை. அல்லல் உழப்பது-துன்பங்களால் வருந்துவதன் காரணத்தை. அறிதிரேல்-ஆராய்ந் தறிய விரும்புவீராயின். தொல் சிறப்பின்-பழைமையான சிறப் பினை யுடைய. நாவின் கிழத்தி-சரசுவதி. உறைதலால்-(அவர்க ளிடங் கூடி) வசித்தலால். பூவின் கிழத்தி-இலக்குமி. புலந்து-(அவர்களோடு) பிணங்கி. இது தற்குறிப் பேற்ற வணி. 'திரு மாலின் மனைவி இலக்குமியும், அத் திருமாலினிடந் தோன்றிய பிரமன் மனைவி சரசுவதியு மாகலின், மாமியும் மருகியுமாகிய இரு வரும் உலக வியற்கைப்படி ஒத்து வாழ்தலில்லை என்பதாம்; அன்றி, இரண்டு மகளிர் ஒருவனிடத்துப் பொருந்தி ஒத்து வாழ் தல் இல்லை யாகலின், இங்ஙனங் கூறினா ரென்பதுமாம்.

உஙங. கல் என்று தந்தை கழற-கல்வி கற்பா யென்று தந்தை இடித்துப் புத்தி கூற. இகழ்ந்தவன் - அவமதித்தவன். எழுத்து ஓலை-எழுத்தை யுடைய ஓலையை. விளியா-கோபித்து. 'இறந்தாற் போலாகி' என்பது மொன்று ; அன்றி, 'இளியா' எனப் பிரித்து 'அவமதிப்புச் சிரிப்புச் சிரித்து' என்றுரை பகர் வாரு முண்டு. வழு கோலை கொண்டு விடும்-குற்றத்தைத் தரத் தக்க கொம்பை (அடித்தற்கு) எடுத்துக் கொள்வான். இனி,

'வழுக்கு ஓலை' எனப் பிரித்து 'தப்பிப் போதற்குக் காரணமான ஒலியைக் கொள்வான்' என்பாரு முளர்.

உருச. நீண்ட-வளர்ந்த. மெல்ல இருப்பினும்-பேசாமலிருந்தாலும்; 'அடக்கமாக இருப்பினும்' எனினுமாம். இருந்தற்று-இருந்தாற் போன்றதாம். இராஅது-(அப்படிப் பேசாது) இராது; இஃது துயிஉளபெடை; செய்யுளோசை நிறைக்க வந்தது. நாயை உவமையாக்கியது இழிவை நன்கு விளக்குதற் காம்.

உருரு. புல்லா புன்கோட்டி புலவரிடை-அற்ப வறிவொடு பொருந்தாத சபையிலுள்ள புலவர் நடுவில; 'புன்மை புல்லா' என மாற்றி நிறுத்திப் பொருள் கொள்க. கல்லாத-படித்தறியாத வற்றை. கடை எல்லாம்-அதம ரெல்லாரும். 'கடை யெல்லாம் சொல்லும்' என வினை முடிவு செய்க. கற்ற - படித்தறிந்தவற்றை. கடாஅயினும்-(பிறர்) கேட்டாலும்; இஃது இன்னிசை யளபெடை. சான்றவர்-(நற்குண நற்செய்கை) நிறைந்த பெரியோர். பொருள் மேல்-அப் பொருளி னிடத்து. படாஅ-(அவரது அறிவு) பொருந்தாமல்; இது செய்யுளிசை நிறைக்க வந்த அளபெடை. விடு பாக்கு-நீங்குதலே; இது தொழிற் பெயர், அப் பொருள்பட நின்றது பாக்கிற.

உருசு. நாவினர் - நாவன்மை யுடையார். சோர்வு அஞ்சி-(என்ன) குற்றம் (சேருமோ வென்று) பயந்து. மற்றைய ராவார்-கற்றறிவும் நாவன்மையு மில்லாத சிறியோர். பகர்வர்-(குற்றத்திற்கு அஞ்சாது விஷயங்களை ஆராயாது தமக்குத் தோன்றியபடி யெல்லாம்) சொல்லுவர். வற்றிய ஓலை-உலர்ந்த ஓலைகள். கலகலக்கும்-கலகலவென் றொலிக்கும்; இஃதிரட்டைக் கிளவி. 'ஒலி இல்லை' என மாறுக. இஃது எடுத்துக்காட் டுவமை. 'கற்றறிந்த நாவினர் சொல்லார் தஞ் சோர்வஞ்சி' என்பதற்கு 'எஞ்ஞான்றும் பச்சோலைக் கில்லை யொலி' என்பதும், 'மற்றைய ராவார் பகர்வர்' என்பதற்கு 'பனையின்மேல் வற்றிய ஓலை கலகலக்கும்' என்பதும் உவமை யாகலின், இஃது எதிர்நிரனிறைப் பொருள்கோள்.

உருஎ. கூழ் பத்தரில்-கூழ் வார்க்கின்ற தொட்டியில். தேமா வடித்தற்று-மதுரமாகிய மாம்பழத்தின் இரசத்தைப் பிழிந்தாற் போலும். 'தேமா' என்பது இருமடி யாகுபெயர். மாந்தர்க்கு-மனிதர்க்கு; 'மாந்தர்' என்பது எப்பொழுதும் பன்மை; நித்ய பகுவசன மென்ப வடநூலார். அறத்து ஆறு-தருமத்தின் பயனை. கொட்டும்-அடிக்கப்படுகிற. தறிபோல்-மூளை கூர் சிதைவதுபோல. தலைநகர்ந்து-(அத்தருமப் பயன்கள்) தலை சிதறி. சென்று இசையா ஆகும்-போய்ப் பொருந்தாதன வாம். செவிக்கு-செவியில்: இது வேற்றுமை மயக்கம்.

உருஅ. கழீஇ-கழுவி; இது சொல்லிசை யளபெடை. உணக்கினும்-உலர்த்தினும். வாலிது ஆம் பக்கம்-வெண்மை யுடைய தாகின்ற தன்மை. இருந்தைக்கு-கரிக்கு. இருந்தன்று-இருந்ததில்லை; இஃது எதிர்மறை இறந்தகால ஒன்றன்பால் முற்று. கடாஅய் - உட்செலுத்தி; (அவன் காதிற்) கடாவித் தொளை செய்து என்பர் சிலர். குறினும்-குத்தினும்; கூறினும் என்பதன் குறுக்கல் எனக்கொண்டு 'சொல்லினும்' என்பர் சிலர். புகல் ஒல்லா-உட்புக மாட்டா. நோலா உடம்பிற்கு - (முற்பிறப்பிற்) புண்ணியஞ் செய்யாத (உயிரையுடைய) உடம்பிற்கு; 'நல்ல ஊழின்மையால் இயற்கை யறிவில்லாத மனிதனுக்கு' என்றபடி.

உருக. பொழிந்து-(தேனைச்) சொரிந்து. இனிது நாறினும்-நன் மணம் வீசினும். பூ மிசைதல் செல்லாது-பூவிலுள்ள தேனை யுண்ணுதற்குச் செல்லாமல். 'இழிந்தவை' என்பது இடக்கரடக்கல். காமுறும்-விரும்பும். ஈ போல்-ஈயைப் போல. இழிந்தவை-இழிவாகிய பொருள்கள். வாய்-வாயினுண்டாம். தேற்றம் சொல்-தெளிவைத் தருஞ் சொற்களின். தேர்வு-துணிவு. என் ஆகும்-என்ன பயனைச் செய்யும்? ஒரு பயனையுஞ் செய்யா தென்றபடி.

உசுo. கசடு அறு - குற்றமற்ற. பற்றுது - உறுதியாக உட்கொள்ளாது. உதைத்தலான்-இகழ்ந்து தள்ளி விடுதலான். கீழ்-கீழ்மகன். தன்போல் ஒருவன்-தன்னைப் போன்ற வேறொரு கீழ் மகனது. ஓர் புல் கோட்டி கொள்ளும்-தானும் ஓர் இழிவான

பிரசங்கத்தைச் செய்வன். 'கோட்டி' என்பது அங்குச் சொல்லுஞ் சொல்லிற்கு இடவாகு பெயர். 'மற்றமோர், கொள்ளுமாம்' என்புழி 'ஓர்,' 'ஆம்' என்பன அசைகள்.

உசுக. அருகலது - அருகிலுள்ளது; 'அருகல்' என்னுந் தொழிற் பெயரின்மேற் பிறந்த உடன்பாட்டு ஒன்றற்பாற் குறிப்பு வினையாலணைந்த பெயர். பல பழுத்தக் கண்ணும்-பல பழங்களைப் பழுத்திருப்பினும். பொரி தாள்-பொரிந்த அடியை யுடைய. விளவினை-விளா மரத்தை. வாவல்-வௌவால்கள். குறுகா-நெருங்கா. பெரிது அணியர்-மிகவுஞ் சமீபத்திலுள்ளவர். பீடு இலார்-பெருமைக்குண மில்லாதவரது. கருதும் கடப்பாட்டது அன்று-(வறியர்களாற் நமக்குக் கிடைக்குமென்று) நினைக்கத் தக்க முறைமையுடைய தன்று. இஃது எடுத்துக்காட் டுவமை.

உசுஉ. அள்ளிக் கொள்வ அன்ன-(கைகளால்) அள்ளியெடுத்துக் கொள்ளத் தக்கவை போன்ற (அழகு நிறைந்த); 'கொள்வன்ன' என்பது 'கொள்வ வன்ன' என்பதன் தொகுத்தல். குறு முகிழ ஆயினும்-சிறிய அரும்புகளை யுடையனவா யிருப்பினும். கள்ளி மேல்-கள்ளிச் செடியின் மேல். நள்ளார்-விரும்பிச் சேரார்.

உசுரு. மல்கு-மிகுந்த. திரைய-அலைகளை யுடைய; இது குறிப்புப் பெயரெச்சம். கோட்டு - கரையில். வல் ஊற்று - வலிமையான நீர்ச் சுரப்பை யுடைய, அஃதாவது நீர் மெல்லென இடைவிட்டுச் சுரக்கின்ற. 'விரைவில் நீர் சுரக்கும் ஊற்று' எனப் பொரு ளுரைப்பினு மாம். உவர் இல்-உப்புச் சுவை யில்லாத. உண்பர் - (நீரைப்) பருகுவர். சேண் சென்று-வெகு தூரத்திற் போயாயினும். நல்குவார் கட்டே நசை-கொடுக்கும் நன்மக்களிடத்தே விருப்பம் உண்டாம். இதுவும் எடுத்துக்காட் டுவமை.

உசுச. புணர் கடல்-நெருங்கிய சமுத்திரம்; 'அலைகளோடு கூடிய சமுத்திரம்' எனினுமாம். உணர்வது உடையார்-அறிவுடையார். 'அது' என்பது பகுதிப்பொருள் விகுதி. வட்டும் - சூதாடு கருவியம்: 'வட்டு' என்பது ஒருவகைச் செடி என்பாருமுளர்.

வழுதுணையும் - வழுதுணஞ் செடியும். போல்வாரும் - போன்ற கீழ்மக்களும். அரங்கின்கண் நிற்கும் வட்டினை வெட்டி இறக்கினும் அது மறுபடி அவ் வரங்கின்கண் வந்து நிற்குமாறு, சபையின்கண் நின்று அவமானப்பட்டு வெளிவரினும் வெட்கமின்றி மறுபடி அச் சபையின்கண் வந்து நிற்பாரும், சுவைமிக்க இலை காய்களோடு கூடிய வழுதுணஞ்செடி மறைவிற் செழித்துக் காய்த்து அழியுமாறு பயன்மிக்க செல்வத்தைப் பெற்றுவைத்தும் அச் செல்வத்தை மறைத்துத் தாம் வெளித்தோன்றா திருந்து மரிப்பாரும் ஈண்டுக் குறிக்கப்பட்டா ரென்ப. பட்டும் துகிலும் உடுத்துவாழ்வார் என்க. வட்டுப்போல்வார் (பகட்ட வேண்டுதலின்) பட்டுடுத்தும், வழு துணை போல்வார் (தன்மை மறைக்க முயலுதலின்) துகிலுடுத் தும் வாழ்வார் என் றநுவயித்து, இது நிரனிறைப் பொருள்கோ ளென்ப.

உசுரு. நல்லார் நயவர் இருப்ப-நற்குண முடையரான நல்லறி வுடையார் வறியராய் இருக்கவும்; 'நயவர் நல்லார் இருப்ப' என மாற்றுக. ஒன்று - ஒரு செல்வப்பொருள். ஆகிய காரணம் உண் டாகிய காரணம். தொல்லை வினைப்பயன் - முற்பிறப்பிற் செய்த நல்வினைப்பயன். நினைப்ப - எண்ண. வருவது ஒன்று இல் - (அவ் வெண்ணத்தில்) வருவதாகிய காரணம் வேறொன்றில்லை.

உசுசு. நாறா - மணவாத. தகடே போல்- புறவிதழ்போல; 'பொற் றகடு போல' என்பாருமுளர். நல் மலர்மேல் - சிறந்த தாமரைப்பூவின் மேலிருக்கிற. பொன் பாவாய்-பொற் பிரதிமை போ லழகிய இலக்குமியே! 'தகடேபோல் பாவாய்' என இயையும். நீறு ஆய் விளி - சாம்பராய் அழிவாய். வேறு ஆய -(நன்மக்களின்) வேறுபட்ட. புல் மக்கள் பக்கம்-கீழ்மக்களிடம். புகுவாய்-சேர்வாய். பொன்போலும் - பொன்னைப்போலப் போற்றத்தக்க. நல்மக்கள் பக்கம் - மேன்மக்களிடத்தை. துறந்து-விட்டு. நாறாத தகடு என்ற உவமை - பூவின்மேலிருந்தும் அப்பூவின் நறுமணம் புறவிதழுக் கில்லை யாதல் போல, சிறந்த தாமரை மலரில் இடையறாது வாழ்ந்

தும் அம் மலருக்குரிய மென்மைக்குணம் திருமகட்குச் சிறிது மில்லையென்பதை விளக்கி நின்றது.

உகஎ. நயவார்கண் - நற்குணமுடையாரிடத்து. நல்குரவு- வறுமை. நாண் இன்று கொல்லோ-வெட்கமில்லாததோ? பயவார் கண்-(ஒருவருக்கும்) பயன்படாதவரிடத்து அஃதாவது உதவாதவ ரிடத்து. பரம்ப பயின்கொல்-விடாமற் பரவுதற்குரிய பிசினோ? வியவாய் காண்-நீ வியந்து காண். இ இரண்டும்-(நயவார்கண் நல் குரவும் பயவார்கண் செல்வமும் ஆகிய) இந்த இரண்டும். நயவாது நிற்கு நிலை-நன்மை தாராது நிற்கின்ற நிலைமையை. 'கொல்' என்னும் இடைச்சொல் ஈரிடத்தும் ஐயப்பொருளது. ஓகாரம் அசை.

உகஅ. வலவைகள் - நாணிலிகள். 'அல்லாதார்' என்றது நாணமுடையாரை. கால் ஆறு சென்று-தாங்கள் கால்களால் தூர வழி நடந்துபோய். கலவைகள் - (இரந்து பெற்ற) கலப்பான உணவை. கழிப்பார்-(வாழ்நாளைக்) கழிப்பார்கள். கால் ஆறும் செல் லார்-காலால் வழி நடத்தலுஞ் செய்யாதவராய். இருந்து-(கயாது கதவடைத்து) இருந்து. கருனையால் துய்ப்ப - பொரிக்கறியோடு (தனியிருந்து) உண்பார்கள்; 'கருனையால்' என்பது உருபு மய க்கம். மேல் ஆறு பாய - நெய்யாறு பாலாறு தயிராறுகள் மேன் மேற் பெருக.

உகக. பொதியோடு பீள்-(பொதிந்த) கதிர்களோடு கரு வும் வாடா நிற்க. ஒளிர்-விளங்குகின்ற. வானம்-மேகம்; 'அம்' என்பது சாரியை. கான்று உகுக்கும்-நீரை வெளிப்படுத்திச் சொரிதலு முண்டு. வெண்மையுடையார் - அறிவிலிகள். 'விழு' என்பது 'விழுமம்' என்னும் உரிச்சொலின் விகாரம். வண் மையும்-அவர்கள் ஈகையும். 'உம்மை' இறந்தது தழுவிய எச்சம். அன்ன தகைத்து-அதுபோலுந் தன்மையது.

உஎ௦. ஓதியும் ஓதார்-(பல நூல்களைக்) கற்றும் கல்லாதவரே. ஓதாதும் ஓதியனையர்-கல்லாதாராயினுங் கற்றவனை ஒத்தவரே; 'கற்றூற் போன்றவர்கள்' என்பதுமாம். தூய்து ஆக-(மனம்)

பரிசுத்தியுடையதாயிருக்க. இரவாதார்-யாசியாதவர். நல்கூர்ந்தும்-வறுமையடைந்தும். ஈயார் எனின்-(தக்கார்க்குக்) கொடுக்கவில்லையென்றால். 'ஒதியும், செல்வரும்' என்ற உம்மைகள் உயர்வு சிறப்பு. 'ஓதாதும், நல்கூர்ந்ததும்' என்ற உம்மைகள் இழிவு சிறப்பு. இஃது எதிர்நிரனிறைப் பொருள்கோள்.

உஎக. நட்டார்க்கும் - சுற்றத்தார்க்கும். நள்ளாதவர்க்கும் - விருந்தினர்க்கும். உளவரையால்-(தமக்கு) உள்ள அளவிற்கு ஏற்ப. அட்டது பாத்து-சமைத்த உணவைப் பங்கிட்டுக் கொடுத்து; 'அட்டது' என்பது சாதியொருமை. உண்டல்-(பின்பு தாமும்) உண்ணுதல். அட்டு உண்டல்-சமைத்து உண்டு வாழும் விதமாம். அடைத்து இருந்து உண்டு-(கதவை) மூடித் தாம் உள்ளே இருந்து புசித்து. ஒழுகும்-நடக்கின்ற. ஆவது இல் மாக்கட்கு-பயனில்லாத மனிதர்களுக்கு. ஆண்டை கதவு-மேலுலகத்தின் கதவு. அடைக்கும்-(உட்புகாதவாறு) மூடப்படும்; செயப்பாட்டு வினைப் பொருளின் வந்த செய்வினை.

உஎஉ. எ துணையானும்-எவ்வளவேனும். இயைந்த அளவினால்-(தம்மாற்) கூடிய வளவினால். சிறு அறம் செய்தார்-சிறிய தருமங்களைச் செய்தவர். தலைப்படுவர்-மேன்மையடைவார். மற்றை பெருஞ் செல்வம் - அறஞ் செய்தற்குதவாத பெருஞ் செல்வத்தை. 'மற்றை' என்னும் இடைச்சொல் 'பிறிது' என்னும் பொருளது. 'அசைநிலை' யென்பதுமாம். பின் - மூப்பின்கண்; 'செல்வம் இன்னும் மிகின், அதன் பின்' என்பாருமுளர். அறிதும்-அறஞ் செய்தலைப்பற்றி யோசிப்போம். அழிந்தார் - (நிச்சயமாக முழுகி) அழிவார்கள்; இது துணிவுபற்றி வந்த கால வழுவமைதி. பழிகடலத்துள்-(யாவராலும்) பழிக்கப்படுகிற (துன்பக்) கடலினுள்; 'பழிகடல்' என்பது வினைத்தொகை நிலைத்தொடர். இனி, 'பழியாகிய கடலினுள்' எனப் பொருளுரைத்து ஓசையின்பம் பற்றிப் 'பழிக்கடல்' என்றாகாது இயல்பாயிற்றென்ப.

உஎ௩. துய்த்து கழியான்-தான் அனுபவித்துக் காலங் கழியாமலும். துறவோர்க்கு ஒன்று ஈகலான்-துறவறத்தார்க்கு ஒரு

பொருளையேனுங் கொடுத்துதவாமலும், வைத்து கழியும்-(தேடின பொருளைச்) சேகரித்துவைத்துப் (பயன்கொள்ளாது) இறக்கின்ற. மடவோனை-அறிவிலியை. நகுமே-(கண்டு) சிரிக்கும்.

உஎச. துய்த்தலும் - அனுபவித்தலும். தேற்று - அறிந்து செய்யாத; இது தன்வினை பிறவினைகட்குப் பொதுவினை; ஈண்டுத் தன் வினையா மென்க. இடுக்கு உடை-உலோப குணத்தையுடைய. இல்லத்து - குடியிற் பிறந்த. உரு உடை-அழகுள்ள. பருவத்தால்-(அனுபவித்தற்குரிய) காலம் வந்த பொழுதில்; இது வேற்றுமை மயக்கம். ஏதிலான்-அயலானால்.

உஎரு. எறி-(அலைகளை) வீசுகிற. எய்தி இருந்தும்-அடைந்திருப்பினும். அறு நீர் சிறு கிணற்று ஊறல் - (இடையிடையே) அற்று அற்றுச் சுரக்கிற நீரையுடைய சிறிய கிணற்றின் ஊற்றை; 'ஊறல்' என்பது ஆகுபெயர். பார்த்து-தேடிக் கண்டு. ஆக்கத்தின்-பெருஞ் செல்வத்தினும், சான்றோர் கழி நல்குரவே-நற்குண நிறைந்த பெரியோரது மிக்க வறுமையே தலை; சிறந்ததாம். முன்னிரண்டடியிற் 'பிறிது மொழிதலணி' யுளது.

உஎகூ. எனது எனது - என்னுடையது, என்னுடையது. என்று இருக்கும்-என்று (செலவு செய்யாது) இருக்கிற. ஏழை-அறிவில்லாத லோபி. 'யானும்' என்புழி உம்மை இறந்தது தழுவிய எச்சம். தனது ஆயின் - தன்னுடையதானால். வழங்கான்-பிறர்க்குக் கொடான். பயன் துவ்வான் - இன்பப்பயனை அனுபவியான். யானும் அதனை அது-நானும் அப் பொருளை அப்படியே பிறர்க்குக் கொடேன்; அனுபவியேன்.

உஎஎ. வழங்காத-(பிறர்க்கு ஒன்றுங்) கொடாத. நல்கூர்ந்தார்-தரித்திரர். உய்ந்தார்-(துன்பங்களிற்) பிழைத்தார். இழந்தார் எனப் படுதல் உய்ந்தார்-இழந்தார் எனப் பிறரால் இகழப்படுதலிற் பிழைத்தார். உழந்து அதனை காப்பு உய்த்தார்-அப் பொருளை காப்பாற்றுகிற உழப்பினின்றும் பிழைத்தார். கல்லுதலும் உய்ந்தார்-அப் பொருளைப் புதைத்தற்குப் பூமியைத் தோண்டுகிற வருத்

தத்திலினின்றும் பிழைத்தார். தம் கை நோவ யாப்பு உய்ந்தார்-தமது கைகள் நோகும்படி இறுகப் பிடித்தலினின்றும் பிழைத்தார். உய்ந்த பல-(இங்ஙனம் அவர்கள்) தப்பிப் பிழைத்தவை இன்னும் பலவுண்டு.

உஎஅ. தனது ஆக-(பொருள்) தனக்குரியதாயிருக்க. தான் கொடான்-தான் (அப் பொருளைப் பிறர்க்குக்) கொடான். தாயத்தவரும்-ஞாதிகளும். தமது ஆய போழ்தே-தம்முடைய தாயிருக்கும்போதே. கொடுப்பின்-(அதனைத் தான் பிறர்க்குக்) கொடுத்தால். அவர் கடியார்-அஞ் ஞாதிகள் விலக்கார். தான் கடியான்-(இறந்துபட்ட அவன்) வந்து விலக்கான்.

உஎகூ. இரவலர்-யாசகர். கன்று ஆக-கன்றை ஒப்ப. ஈவார்-கொடுப்பவர். ஆ ஆக-பசுவை ஒப்ப. விரகின் சுரப்பது-உற்சாகத்தோடு பயன் தருவதே. வண்மை ஆம்-ஈகைக் குணமாம். வல்லவர் ஊன்ற வடி ஆ போல்-வலியவர் அழுத்தி வருத்தப் பால் தருகிற பசுப்போல. வாய் வைத்து கொல்ல-பல உபாயங்களைச் செய்து வருத்த; 'நிந்தனை செய்து வருத்த' எனவும், 'உறுப்புக்களிற் கருவி கொண்டு வருத்த' எனவும் பொருள் கூறுப. 'கொல்லுதல்' ஈண்டு மிக்க துன்பஞ் செய்தல். சுரப்பது-பயன் தருவது. கீழ் ஆம்-கீழ்மைக் குணமாம்.

உஅ0. ஈட்டலும்-பொருளைத் தேடுதலும். ஒள் பொருளை-சிறந்த பொருளை. கடு துன்பம்-மிக்க துன்பம். கெடின்-(முழுவதும்) அழிந்தால். துன்பக்கு-துன்பத்துக்கு; அத்துச் சாரியை தொக்கது. உறைபதி-தங்குமிடமாம். 'மற்று மற்றை' என்பன அசைகள்.

உஅக. அத்து இட்ட கூறை - செந்நிறம் பொருந்திய (காவி வஸ்திரத்தை); 'தையல் நிறைந்த துணி' என்பதுமாம். அரை-இடையில். பத்து எட்டு உடைமை-பத்தாயினும் எட்டாயினும் பொருளை யுடைத்தாதல். 'பத்து' 'எட்டு' என்பன ஆகுபெயர். பாடு எய்தும்-பெருமையடையும். ஒன்று இல்லாதார்-சிறிதும் பொருளில்லாதவர். செத்த பிணத்தின் கடை-உயிர் நீங்கிய உடம்பாகிய பிணத்தினுங் கடைப்பட்டவராவர்.

உ அஉ. நீரினும் - (மற்றெல்லாப் பொருள்களினும் நுட்பமான) நீரைக் காட்டிலும். நுண்ணிது-நுட்பமானது. 'நெய்யினும் புகை நுட்பம் யாரும் அறிவர்' என மாற்றுக. தேரின்-ஆராயின். இரப்பு இடும்பை ஆளன்-யாசித்தலாகிய துன்பத்தை யாள்பவன். ஈண்டுக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார்; அன்றி, 'யாசித்தலா லாகிய துன்பத்தை யாள்பவன்' என்பது மாம். 'நிரப்பு இடும்பை ஆளன்' எனப் பிரித்து, 'வறுமைத் துன்பத்தை யாள்பவன்' என்பது மொன்று. நூழை-துவாரத்துள். 'நுழைந்து புகும்' என்க. 'உயர்வு நவிற்சி யணி' காண்க.

உ அரு. கல் ஒங்கு உயர்வரைமேல்-கற்களால் வளர்ந்துள்ள உயர்ந்த மலையின்மேல். செம் பொறி-சிவந்த புள்ளிகளையுடைய. 'மலராக்கால் வண்டினம் செல்லாவாம்' எனபது முடிபு. கொல்லை-தினைப்புனத்தில். கலா அல்-கற்களைக் கொண்டு; 'இரத்தினங்களால்' என்றுமாம். கிளி கடியும்-(தினைக் கதிரைக் கவர வரும்) கிளிகளைக் (குறப்பெண்கள்) ஓட்டுகின்ற. இலா அ அர்க்கு-வறியர்க்கு. தமர் இல்லை-(விரும்பி வரும்) இனத்தவர் இலராவர். இஃ தெடுத்துக்காட்டுவமை. அளபெடை இரண்டும் செய்யுளோசை நிறைப்பன.

உ அச. உண்டாய போழ்தின்-செல்வம் உளதாய காலத்தில். 'இன்' என்பது சாரியை. உடைந்துழி-(உடம்பு உயிர் நீங்கிச்) சிதைந்த விடத்து; அகரந் தொக்கது. காகம்போல்-(அதனைத் தின்பதற்கு) அளவில்லாத காக்கைகள் (வந்து சேர்வது போல). தொண்டு ஆயிரவர் தொகுப-ஆயிரம் பெயர் அடிமைகளாய் (வந்து) சேர்வர். வண்டாய் திரிதரும் காலத்து-(உணவுவேண்டி) வண்டைப்போலப் பலவிடத்தும் அலையுங் காலத்தில்; 'ஆய்' என்பது உவம வுருபு. தீது இலிரோ என்பார்-(அவரை நோக்கி நீர்) துன்பமில்லாது இருக்கிறீரோ' என்று க்ஷேமம் விசாரிப்பார். இல்-

உ அரு. பிறந்த குலம் மாடம்-பிறந்த நற்குடியின் பெருமை அழியும். ஆண்மை-(நிறை, பொறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்

னும்) ஆண்மைக் குணங்கள்; வீரகுணங்களெனினுமாம். கல்வி யும்-கல்வித் திறமையும். கறங்கு-ஒலிக்கின்ற. கல்மேல்-கற்களின் மேல் (விழுந்து). கழூஉம்-கழுவுகின்ற. இனி, 'கற்களின் மேற் புறத்தைக் கழுவுகின்ற' என்றுரை பகர்வாருமுளர். கணம்-கூட்ட மாகிய. இன்மை தழுவப் பட்டார்க்கு-வறுமையாற் சாரப்பட் டார்க்கு.

உ௮௬. உள்-வயிற்றினுள். கூர்-மிகுந்த. உழை-தன்னிடம். நசைஇ-(ஒன்றைப் பெற) விரும்பி; இது சொல்லிசை யளபெடை. உள் ஊர் இருந்தும்-ஊர்க்குள் இருந்தும்; 'உள் ஊர்' என்பது இலக்கணப் போலி. ஒன்று ஆற்றுதான்-ஓர் உதவியுஞ் செய்ய மாட்டாத வறியவன். உயிர்-(தனது) வாழ்நாளை; இஃதாகுபெயர். கொன்னே-வீணாக. போய்-வேற்றூர்க்குப் போய். விருந்தினன் ஆவதே-(ஒருவனுக்கு) விருந்தினனாக உண்டிருத்தலே; 'விருந்து' என்பதன் செம்பொருள் 'புதுமை' என்பதாம்.

உ௮௭. நீர்மையே அன்றி-(தமது) நற்குணங்களையே யல் லாது. நிரம்ப எழுந்த-குறைவின்றி யுயர்ந்த. கூர்மையும்-அறிவின் நுட்பத்தையும். எல்லாம்-மற்றுமுள்ள சிறப்புக்களெல்லாவற்றை யும். ஒருங்கு இழப்பர்-ஒருசேர இழந்து விடுவர். கூர்மையின்-கூர்மையுடைமையால்; 'இன்' என்பது ஏதுப் பொருளின் வந்த ஐந்தனுருபு, 'இன்' என்பது சாரியை எனக் கொள்வாருமுளர். அலைக்கும்-வருத்துகின்ற. எயிற்றாய்-பற்களை யுடையவளே! நுந்து மகடூஉ முன்னில்லை. நிரப்பு-வறுமை; (எல்லாப் பொருள்களும்) நிரம்பி யிருத்தலைக் குறிக்கும் 'நிரப்பு' எனனும் முதனிலை திரிந்த தொழிற் பெயர், எதிர்மறை இலக்கணை (விபரீத லக்ஷணை) யால், பொருளொன்று மில்லாமையைக் குறிப்ப தாயிற் றெனக. அல்லல்-துன்பம். 'நிரப்பென்னும் அல்லல்' எனக் காரணத்தைக் காரியமாக உபசரித்தார்.

உ௮௮. இட்டு-அல்பமாகிய; இஃதிப் பொருட்டாதலை, 'ஆசா றளவிட்டி தாயினும் கேடில்லை' என்னுந் திருக்குறளானுந் தெரிக. ஆறுபட்டு-(வறுமையின்) வழியினகப்பட்டு. ஆற்றுது-

கொடுக்கமாட்டாது. முட்டு ஆறுபட்டு - தடைபட்ட வழியிற் பொருந்தி. முயன்று (தன் வயிறு ஓம்புத லொன்றற்குமே) முயற்சி செய்து. நெடு ஆறு சென்று-தூரமாக வழியிற் போய். நிரைமனை யில்-வரிசையா யுள்ள வீடுகளில். கை ஏற்கும்-(பிச்சை வாங்கு தற்கு) கையை நீட்டுகிற. கெடு ஆறு வாழ்க்கையே-கெட்ட வழியில் வாழ்தலே; 'கெட்டவாறு' என்பது 'கெட்டாறு' எனப் பெய ரெச்ச வீறு தொக்கு நின்றது; இனி, 'கெடு' முதனிலைத் தொழிற் பெயர் எனினுமாம். இப் பாட்டின் கருத்து இவ்வதிகாரத்தின் ஆறும் பாட்டின் கருத்தே யாயினும், இந்நூலினு ளொவ்வொரு பாடலும் ஒவ்வொருவராற் பாடப் பெற்றமையிற் கூறியது கூற லென்னுங் குற்றமின்று மென்க.

௨௮௯. கடகம் - கடகமென்னுங் கைவளைகள். செறிந்த - பொருந்திய. வாங்கி-(பல தூறுகளை) வளைத்திழுத்துத் தள்ளி. அடகு-கீரைகளை. அட்டு-சமைத்து. குடை கலன் ஆ-பனங் குடை முதலியனவே உண்கலனாகக் கொண்டு, 'குடை' என்பது இப் பொருளதாதலை 'தோணல முண்டு துறக்கப் பட்டோர், வேணீ ருண்ட குடையோ ரன்னர்' என்னுங் கலித்தொகையினுங் காண்க. உப்பு இலி வெந்தை-உப்பிலலாத (அந்த) வெந்த கீரையை; 'வெந்தை' என்பதன்கண் 'வே' என்பது பகுதியும், 'ஐ' என்பது வினைமுதற் பொருள் விகுதியுமாம். உள் அற்று-ஊக்க மழிந்து. துப்புரவு-அனுபவிக்கப்படும் பொருள்கள். சென்று உலந்தக்கால்- அழிந்தொழியு மாயின்; 'கால்' என்பது எதிர்கால வினையெச்ச விகுதி.

௨௯௦. ஆர்த்த-நிறைந்த. பொறிய-புள்ளிகளை யுடைய. அணி கிளர்-அழகு மிக்க. பூத்து ஒழி-பூப் பூத்து மாறின. செல்லா ஆம்- போகாவாம். நீர்த்து-நீர்வள முடையதாகிய. தாழா-இடையறாது பாய்கின்ற; இஃது ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். வாழா தார்க்கு - (செல்வராய்) வாழாதவர்க்கு. தமர் இல்லை - இனத்தவர் உளராகார். இஃது எடுத்துக் காட்டுவமை. இப் பாட்டு இவ்வதி காரத்தின் மூன்றும் பாட்டோடு ஒத்த கருத்துடையது.

உ௬௧. திருமதுகை ஆக-செல்வம் (தம்மிடம்) வலியுடைத்தாக (அது கொண்டு செருக்கி). திறன் இலார்-தக்க நற்குணமில்லாதார். பெருமிதம்-வரம்பு கடந்த செய்கையை. கண்டக் கடைத்தும்-காணினும்; இதன்கண், 'து' என்பது பகுதிப் பொருள் விகுதி யென்ப; உம்மை இழிவு சிறப்பு. எரி மண்டி-எரிதலொடு பொருந்தி. 'எரி' என்பது முதனிலைத் தொழிற் பெயர். கானம்-காட்டில். தலைப்பட்ட - பற்றி யெழுந்த. கனலும் - கொதிக்கும். 'மானமாவது தம் நிலையிற் றாழாமையுந் தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம்' என்றார் பெரியார். 'மனம் கனலும்' என்க.

உ௬௨. என்பு ஆய் உகினும் - (உணவின்மையால் தமது உடம்பு) எலும்பளவாகிச் சிதையினும். இயல்பு இலார்-நற்குணமில்லாத செல்வரது. 'பின்' என்பது ஈண்டு இடம். தம்பாடு உரைப்பரோ - தமது வருத்தத்தைச் சொல்லி யிரப்பரோ; இரவாரென்றபடி. தம் உடையார் - தமது மானத்தைக் காக்கும் இயல்புடையார். முன் உணரும் - (உரைப்பதன்) முன் (குறிப்பினால்) அறிந்து உதவத்தக்க, 'முன்' என்பது காலமுன். ஒண்மை - கூரறிவு. 'தாம் உள்ள நோய் உரையாரோ' என்க; உரைப்பர் என்றபடி.

உ௬௩. யாம் ஆயின்-வறியவராகிய யாமெனின்; இது கவி வறியரை உளப்படுத்துக் கூறியது. எம் இல்லம் காட்டுதும் - (விருந்தினர்க்கு உணவு பரிமாறுங்கால்) எமது மனையாளை (அவர்) காண இசைவோம். தாம் ஆயின் - செல்வச் செருக்குடையாரெனின். காணவே-காணினும். நாணி-கூசி. 'புறங்கடை' என்பது முன் பின்னாக மாறிய ஆறும்வேற்றுமைத் தொகையாகலின், இலக்கணப் போலி யென்க. 'சோறும்' என்புழி உம்மை இழிவு சிறப்பு. தொடர்பு-நட்பை. இனி, 'இல்லம்' என்பதற்கு 'வீடு' என்றும், 'கற்பு' என்பதற்கு 'உறுதி' என்றும் பொருள்கூறுவாருமுளர். இது தற்குறிப்பேற்றம்.

உகச. இயல் நெறியுங் கைவிடாது-நல்லொழுக்கத்தையுஞ் சிறிதும் விடாமல். உம்மையும்-மறுமையினும். நல்ல-புண்ணியப் பயன்களை ; இது பெயர். பயத்தலால் - தருதலால். செம்மை யின்-நன்றாக. நானம் - கஸ்தூரி. கதுப்பினாய் - கூந்தலை யுடையாளே ! 'காண்' என்பது அசை. மதிப்பு-கொள்கை; 'பிறரால் நன்கு மதிக்கப்படுதல்' என்பாருமுளர்.

உகரு. பாவமும் - (விடாது பின் செல்வதாகிய) பாவமும். ஏனை பழியும்-அஃதல்லாத (இவ்வுலகத்து நிலைப்பதாகிய) பழியும். பட - உண்டாகும்படி. வருவ - நேருங்காரியங்களை ; இது பெயர். சாவினும் - மரணம் நேர்வதாயினும். சான்றவர் - (நற்குண நற்செய்கை நிறைந்த) பெரியோர். செய்கலார் - செய்யமாட்டார். 'பொழுதை' என்பது ஐயீற்றுடைக் குற்றுகரம். அரு நவை - நீக்குதற்குரிய அப் பழிபாவமாகிய குற்றங்களை. ஆற்றுதல் - செய்தல்.

உகசு. மல்லல் - 'மல்லல் வளனே' என்பது சூத்திரம். 'வாழ்பவருள்' என்புழி 'உள்' என்னும் ஏழனுருபு கூட்டிப்பிரித்தற் பொருட்டு. கொடாதவர்-ஈயாதார். நல்கூர்ந்தார் - வறியரே யாவர். 'செல்வரை சென்று இரவாதார் பெருமுத்தரையரே' என்க. 'செல்வரை' என்புழி இரண்டனுருபை ஏழாவதாக்குக ; இது வேற்றுமை மயக்கம். 'பெருமுத்தரையர் என முன்னும் வந்தமை காண்க ; இவர் ஆசிரியர் காலத்திருந்த கொடைக்குண மிக்க திருவாளராதல் வேண்டும்.

உகஎ. கடை எலாம்-அதமர்கள் யாவரும். காய் - வருத்துகின்ற. 'அஞ்சும்' என்பது செய்யுமென்முற்று ; 'கடை' என்பது சொல்லளவிற் பால் பகா வஃறிணைப் பெயராதலின், அது கொண்டு முடிந்தது. இன்னாமை-துன்பத்திற்கு. புடை-பக்கங்களில். தலையெல்லாம் - உத்தமர் யாவரும். சொல்பழி - (உலகத்தாருடைய) சொல்லால் வருகின்ற பழிக்கு.

உகஅ. பெரிது அளியர் - மிக்க கருணையுடையர். நல்கூர்ந்தார்-(இதுபொழுது) வறியராயினர். எற்றி-இகழ்ந்து. சிறுசோக்கு-

அருகிய பார்வையால். கொல்லன் - கருமானது. உலை ஊதும்-உலைக்களத்தில் ஊதுகின்ற. உள் கனலும் - மனங்கொதிக்கும்; 'கொல், ஒ' என்பன அசை நிலைகள்.

உ௯௯. நச்சியார்க்கு - (ஒன்றை) விரும்பித் (தம்மிடம்) வந்தவர்க்கு. நாண் அன்று - நாணம் ஆகாது. நாள் நாளும் - தினந்தோறும். அச்சத்தால் - (அஞ்சவேண்டிய காரியங்களுக்கு) அஞ்சுதலால். நாணுதல் - வெள்குதலும். எச்சத்தின் - (செல்வக்) குறைவினையுடைய. மெல்லியர் ஆகி - அற்பர்களா யிருக்கையில்; இஃதெச்சத் திரிபு. தம் மேலாயார் செய்தது - தம்மினும் மேலான செல்வர்கள் தமக்குச் செய்த எளிமையை. சொல்லாது இருப்பது - வெளிச் சொல்லாதிருத்தல். இனி, பின் வாக்கியத்திற்கு 'தாஞ் செல்வங் குன்றி யிருக்கையில் தம்மினும் மேலான செல்வர் தமக்குச் செய்த உபகாரத்தைப் பலரும் அறிய எடுத்துக்கூறி நன்றி பாராட்டாமை நாணத்திற் கேதுவா மென்பாரு முளர்.

௩00. கடமா - யானையை; மதமுடைமையின் யானைக்குக் 'கடமா' என்பது காரணப்பெயராயிற் றென்க. இனி, 'கடம் ஆ' எனப் பிரித்துக் 'காட்டுப்பசு' என்றுரை பகர்வாரு முளர். தொலைச்சிய - கொன்ற. கான் உறை - காட்டில் வசிக்கின்ற. வேங்கை - பெரும்புலியானது. இடம் வீழ்ந்தது - இடப்பக்கம் வீழ்ந்ததை. உண்ணாது இறக்கும் - தின்னாமலே சாகும். புலி மிகப் பசிப்பினும் இடப்பக்கத்தின் வீழ்ந்த துண்ணாமையையும், அது யானையைக் கொல்லும் வலியினதாதலையும், அது மனவுறுதி யுடையார்க்கு உவமையாதலையும் 'கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென, வன்றவ ணுண்ணா தாகி வழிநாட், பெருமலை விடாகம் புலம்ப வேட்டெழுந், திருங்களிற் றொருத்த னல்வலம் படுக்கும், புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத், துரனுடை யாளர் கேண்மையோ, டியைந்த வைக லுளவாகியரோ' என்னும் புறப்பட்டானுந் தெரிந்து கொள்க. இடம் உடைய-செல்வமுடைய; 'இடம்' என்பது இப்பொருட்டாதலை 'இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்' 'இடமில்லாக்காலும்' (திருக்குறள்) என்னும் பிரயோகங்களா

ளுள் தெளிக. இதற்கு 'விசாலமான' எனப் பொருளுரைப்பாரு முண்டு. வான் அகம் - சுவர்க்கம். கையுறினும்-(முயற்சியின்றிக்) கிடைப்பினும். வேண்டார் - (அச்சுவர்க்கத்தையும்) விரும்பார். விழுமியோர் - சீரியோர். அழுங்க - கெட, வரின்-வருவதாயின்.

௯௦௪. நம்மாலே ஆவர் - நம்மாலேயே வாழ்வார்கள்; ஏகாரம் பிரிநிலை. தம்மால் ஆம் ஆக்கம் இலர் - தமது முயற்சியால் தேடுஞ் செல்வமுடையரல்லர். தம்மை மருண்ட - தம்மைத் தாமே (மதித்து) மயங்கின. தெருண்ட அறிவினவர் - தெளிந்த அறிவுள்ளவர்களும். செல்பவோ - செல்வார்களோ ? செல்லா ரென்றபடி ; ஓகாரம் எதிர்மறை. 'தாம்' என்பது அசைநிலை.

௯௦௨. இழித்தக்க - இழித்துக் கூறத்தக்க செயல்களை. ஆர - (வயிறு) நிரம்ப. உணவின் - உண்ணுதலையுங் காட்டில். பழித்தக்க - பழிக்கத்தக்க செயல்களை. 'செய்யான்' என்பது முற்றெச்சம். தவறோ - குற்றமுடைத்தோ ? அழித்து-அழிந்து' எதுகை நோக்கி இது வலித்தல் விகாரம் பெற்றது. பிறக்கும் (மறுபடி) பிறக்கின்ற. விழித்திமைக்கும் மாத்திரை யன்றோ (மூடின கண்ணைத்) திறந்து இமை கொட்டுதலாகிய அளவுடைய தன்றோ ? 'இயல்பெழு மாந்த ரிமை நொடி மாத்திரை' என்றார் நன்னூலாரும். அன்றி, 'இமைத்து விழிக்கின்ற பொழுதா யிருக்கு'மென விகுதி பிரித்துக் கூட்டினுமாம் ; இனி, 'உறங்கிக் கண் விழிக்கும் அளவன்றோ' என்பது மொன்று ; 'உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு' எனத் திரு வள்ளுவரும், 'பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலும், உறங்க லும் விழித்தலும் போன்ற துண்மையின்' எனச் சீத்தலைச் சாத்த னாருங் கூறியிருத்தல் காண்க.

௯௦௩. இல்லாமை-வறுமை. கந்துஆ-காரணமாக, 'கந்து' என்பது 'கிழங்கு' இங்குக் காரணத்திற்கு இலக்கணை ; 'பற்றுக் கோடாக' எனப் பொருளுரைத்தலுமாம். இரவு துணிந்து - இரத்தற்கு (மனந்) துணிந்து. 'சிறுநெறி செல்வாரும் அல்லர் என மாற்றி, 'அல்ப வழியில் போகாதிரார்' எனப் பொரு

ஞுரைக்க. புல்லா - தழுவிக்கொண்டு. அகம் புகுமின் - எமது வீட்டிற்கு வாரும். முகம் புகுதல்-முகஞ் (சுளித்துக்) காட்டுதலை யும்; ஈண்டு இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஆற் றுமோ-பொறுப்பார்களோ ? பொறாரென்றபடி. மேல்-மேலோர்; இது பண்பாகுபெயர்.

கூ0௪. திரு-இலக்குமி. நீப்பினும்-கைவிடினும். செறினும்-கோபித்து வருத்தினும். உருத்த மனத்தொடு - ஊக்கங்கொண்ட மனத்துடனே. உயர்வு உள்ளின் அல்லால் - (தன்) மேன்மையை நினைத்தலேயன்றி. அருத்தம் செறிக்கும்-(உலோபத்தாற்) பொருளைச் சேர்த்து வைக்கும். எருத்து இறைஞ்சி-பிடர் வளைந்து அஃதாவது தலை குனிந்து. நில்லாது - நில்லான். 'ஆம்' என்பது அசை. மேல்-மேன்மைக் குணமுடையவன்.

கூ0௫. கரவாத - (யாசகர்களுக்குப் பொருளை) ஒளிக்காத. திண் அன்பின் - உறுதியான அன்பினையுடைய. கண் அன்னார்-உறுப்புக்களிற் சிறந்த கண்போல மக்களிற் சிறந்த மேலோரிடத்தும். இரவினை உள்ளுங்கால்-யாசித்தலாகிய தொழிலை நினைக்கும் பொழுதே. உள்ளம் உருகும்-மனங் கரைந்தழிகின்றது. கொள்ளுங்கால் - (ஒருவர் ஒரு பொருளைக் கொடுக்கத் தாம்) ஏற்கும் போது. கொள்வார் குறிப்பு-(அப்படி) ஏற்றுக் கொள்வாரது மனக் கொள்கை. என் கொலோ-என்ன படித்தாகுமோ ? ஓகாரம் இரக்கப்பொருளது, 'கொல்' என்பது அசை.

கூ0௬. இன்னா-துன்பங்கள். இயைக-(நம்மைப்) பொருந்தக் கடவன. இனிய-இன்பங்கள். ஒழிக - (நம்மினின்று) நீங்கக் கடவன. தான் நிரப்ப-தான் நிரம்பச் செய்தலினால்; அஃதாவது திருப்திப் படுத்துவதனால், இனி, 'இரப்ப' எனப் பிரித்து 'தன் மனத்தையே தான் வேண்டிக் கொள்ளுதலினால்' என்பதுமாம். தீர்வதற்கு-நீங்கிப் போம் வறுமைக்கு. காதல் கவற்றும் மனத்தினால்-பொருளாசையானது வருத்துகின்ற மனத்தோடு கூடி. கண் பாழ்பட்டு - கண்கள் பொலிவிழக்கப் பெற்று; 'அறிவழிந்து'

எனினுமாம். எதிலரை இரவு-அயலாரை யாசித்தல். என்னை சொல்-என்ன பயன் கருதியோ?

கூ0எ. புதியார் பிறப்பினும் - புதியராய் மனிதர் பிறந்து கொண்டிருப்பினும். என்றும் அவனே பிறக்கலான்-அவனே எப் பொழுதும் பிறவாதவன்; ஏகாரம் பிரிநிலை. இரப்பாரை எள்ளா மகன்-யாசகர்களை இகழாத மனிதனே. 'மகன் அவனே என்றும் பிறக்கலான்' என் றியைக்க. நற்கதி யடைதல் பற்றி யேனும் அத் தன்மையரைக் காண்டல் கூடாமை பற்றி யேனும் 'இரப்பாரை எள்ளா மகன் பிறக்கலான்' என்றுரைக்க.

கூ0அ. புறத்து-வெளியிலே அஃதாவது உடம்பிலே. இன் மை-வறுமை. நலிய - வருத்த; இது பிறவினைப் பொருளது. அகத்து-மனத்தில். நல் ஞானம் நீக்கி-நல்லறிவை ஒழித்து. நிறீஇ- (அறியாமையை) நிலைநிறுத்தி. ஈயாய்-கொடுப்பாய். இரப்பானேல்- யாசிப்பானாயின். அந் நிலையே-அவ்விடத்திலேயே; அல்லது, அப் பொழுதே. மாயானோ-இறவானோ. ஓகாரம்-இரக்கமும் வினவு மாம். மாற்றி விடின்-(செல்வன் இல்லை யென்று) மறுத்து விடுவா னாயின்.

கூ0க. ஒருவர் - வறியரொருவர். ஒருவரை-செல்வ ரொரு வரை. சார்ந்து ஒழுகல் ஆற்றி வழிபடுதல்-அடைந்து (அவர் கருத் தின்படி) நடத்தலைச் செய்து வணக்கத்தோ டிருத்தலை. வல்லுதல் அல்லால்-வல்லவரா யிருப்பது முறையே யல்லாது. பரிசு அழிந்து- பெருமை கெட்டு. என்னானும் செய்யீரோ என்னும்-யாதாயினும் (உதவி) செய்ய மாட்டீரோ? என்று இரந்து சொல்கின்ற. சொற்கு- சொல்லையுங் காட்டில். இன்னாதே-துன்பந் தருவதோ? அஃதாவது இனிமையா யிராதோ? பைய தான் செல்லும் நெறி-தான் துன்ப முண்டாகப் போகும் வழி; 'பைய' என்பது துன்பப் பொருளை யுணர்த்தும் 'பை' என்பதன் அடியாகப் பிறந்த வினையெச்சம். வறியன் செல்வன் மாட்டுத் தக்கபடி நடந்து வணக்கத்தோடிருத் தல் செய்யத் தக்கதே யன்றி, மானமிழந்து அவன்மாட்டு ஒன்றும்

இரத்தல் கூடாது ; அங்ஙனம் இரந்துண்டு இனிது வாழ்தலினும் வறுமையால் வருந்திக் காலங் கழித்தலே நலம்' என்பது கருத்து.

௩௧0. பழமை கந்து ஆக - பழைய பயிற்சி காரணமாக. பசைந்த வழியே - (ஒருவர் மற்றொருவர்பால்) அன்பு கொண்டவிடத்து. கிழமை தான் யாதானும் செய்க - யாதாயினும் தக்கதோருதவியைச் செய்வாராக. கிழமை பொறாஅர் அவர் என்னில்- அவர் (அப்படித்) தக்கதோருதவியைச் செய்ய ஏற்றுக்கொள்ளாது போவாராயின். பொத்தி-பதிந்து. அறா-நீங்காமல். சுடுவது ஓர் தீ-எரிக்கும்படியான ஒரு தீயாம். 'பொறாஅர், அறாஅ'-என்பன செய்யுளோசை நிறைக்க வந்த உயிரளபெடைகள். பின்னிரண்டடிகளில் உபமான வுபமேயங்களுக்கு ஒற்றுமை கூறுங் 'காட்சியணி' யுளது.

௩௧௧. கோட்டி-சபையில். உறழ் வழி-சேரும் முறைமையை. ஓர் அஞ்ஞானம் தந்திட்டு-அறிவில்லாமைக் குரிய தொரு வார்த்தையை எடுத்துச் சொல்லி. அது-அவ் வஞ்ஞான வார்த்தையை. அற-மிக. துழாய்-பரப்பி. கை ஞானம் கொண்டு ஒழுகும்-அற்ப வறிவைக் கொண்டு நடக்கின்ற; ('குற்ற மென்பாரை அறைதல் முதலிய தொழிலாகிய) கையினது புலமையால்' என்பாருமுளர். கார் அறிவு ஆளர் முன்-மயக்க அறிவை ஆளுதலுடையார் முன்பு. சொல் ஞானம்-(அறிவுடை யொருவன்) சொல்லுதற்குரிய அறிவாகிய பொருளை. சோரவிடல் - தளர விடுக. இஃதுடன்பாட்டு 'அல்லீற்று' வியங்கோள்.

௩௧௨. நா பாடம் சொல்லி-வாய்க்கு வந்த பாடங்களை எடுத்துச் சொல்லி. நயம் உணர்வார்போல் - நூனயத்தை அறிந்தவர் போல. செறிக்கும்-கூட்டஞ் சேர்க்குந் தன்மையுள்ள. இஃதீண்டுப் பிறவினைப் பொருளது. நீ புலவன்-கல்வி யறிவில்லான். செறிவுடையார் - அடக்க முடைய நற்புலவர்கள். கோட்டியுள்-சபையில். குன்ற-(கேட்பவர்) மனம் வருந்தும்படி. குடிபழிக்கும்-(நற் புலவர்களின்) குலத்தைப் பழித்துரைப்பான். அல்லாக்கால்-

அது செய்யாவிடின். தோள் புடைக் கொள்ளா-தோள்களைத் தட்டிக்கொண்டு. எழும்-(சண்டைக்கு) எழுவான்.

௯௧௯. சொற்ற ஆறுகொண்டு-(முன்) சொல்லிய வழியில் (நின்று) கொண்டு அஃதாவது பிடிவாதமாய். அகாரம் செய்யுள் விகாரத்தாற் றொக்க தென்க. இனி, 'சொல் தாறுகொண்டு' எனப் பிரித்துச் 'சொற்களாகிய முட்கோல்களைக் கொண்டு' எனவும், 'சுவைந்து எழுதல் சொற்று ஆற்றுக்கொண்டு' என்றது வயித்து '(நாவில்) தினவுண்டாதலால் (எவற்றையேனுஞ்) சொல்லி (அத் தினவைத்) தணித்துக்கொள்ள' எனவும் பொருளுரைப்பாரு முளர். சுவைத்து எழுதல்-(நாத்) தினவுகொண்டு (வாதஞ் செய்ய) எழுந்திருத்தலை. காமுறுவர்-விரும்புவர்; இது 'காமமுறுவர்' என்பதன் விகாரம். கற்ற ஆற்றல் வன்மையையும்-(பிறரது) கல்வித் திறத்தையும் நாவன்மையையும். தாம் தேறார்-(தாம்) அறியாதவராய். கற்ற-(தாம்) அறிந்தவற்றை. செல-(பிறர் மனத்திற்) புகும்படி. உரைக்கும் ஆறு அறியார்-சொல்லுகின்ற விதம் அறியாதவராய். தோற்பது அறியார்-(வாதப் போரில் தாம்) தோல்வி யடைதற் கேதுவாவனவற்றையும் அறியாதவராய்; 'தோற்பது' என்பது தோல்வித் தானத்தை. பல உரைக்கும் மாந்தர்-பல (வீணான) சொற்களை எடுத்துச் சொல்லும் மனிதர்கள்.

௯௧௪. கற்றதூஉம் - இஃதின்னிசை யளபெடை: உம்மை இழிவு சிறப்பு. கணக்காயர் பாடத்தால் - உபாத்தியாயர் பிற மாணாக்கர்களுக்குச் சொல்லிக் கொடுக்கிற பாடத்தினால். பெற்றது ஆம்-மனப்பாடமாகப் பெற்றதாகிய. பேதை-அறிவிலி; இது பண்பாகு பெயர். ஓர் சூத்திரம் அதனை - ஒரு சூத்திரத்தின் மூல பாடத்தை. 'பேதை பெற்றது ஆம்' என மாறுக. நல்லார்-நற்புலவர். தன் புல் அறிவு காட்டிவிடும்-தனது இழிவான அறிவைப் புலப்படுத்துவன். இது தன்மை நவிற்சி யணி.

௯௧௫. வென்றிப் பொருட்டால் - வெல்வது காரணமாக. 'பொருட்டால்' என்பது நான்காம் வேற்றுமைச் சொல்லுருபு. விலங்கு ஒத்து-மிருகங்கள் போன்று; 'விலங்கு' என்பதற்குக்

'குறுக்கு' என்பது செம்பொருள், அது குறுக்கே வளரும் மரு கத்திற் காயிற்றெனக். மெய் கொள்ளார்-உண்மைப் பொருளை ஏற்றுக் கொள்ளாதவராய். கன்றி கறுத்து-மிகக் கோபித்து. காய் வரோடு ஒன்றி-மனங் கொதிப்பவர்களோடு சேர்ந்து. உரை வித்த கம் எழுவார்-(தமது) சொல்வன்மையைக் காட்ட முயலுவார். சுரைவித்து போலும்-சுரைக்காயின் விதைகள் போன்ற. கையுள் காண்ப-(தமது) கையிற் காண்பார்கள்; 'பல் உதிரக் கன்னத்தி லடிக்கப்படுவ ரென்பது குறித்த பொருளாகலின், இது பிறிதி னவிற்சி யணி. ஏகாரம் தேற்றம்.

௧௬௬. பாடமே-மூல பாடத்தையே; ஏகாரம் பிரிநிலை. பயன்-பொருளை. தெரிதல் தேற்றாத-ஆராய்ந்தறிய மாட்டாத. முனி தக்க-கோபிக்கத் தக்க குற்றமான சொற்களை. கேடு அருஞ் சீர் சான்றோர்-அழிதலில்லாத புகழையுடைய பெரியோர். சமழ்த்த னர் நிற்ப-(அவர்களை அவமானப் படுத்தற்கு) வெட்கங் கொண்டவ ராய் நிற்பார்கள். அவரை ஈன்றாட்கு இறப்ப பரிந்து-அவர்களைப் பெற்ற தாய்க்கு (இப்படிப்பட்ட பிள்ளையை எப்படிப் பெற்றாளோ வென) மிக இரங்கி; 'பெண் பாவி-பெற்றாளே பெற்றாள் பிறர் நகைக்கப் பெற்றாளே, யெற்றோமற் றெற்றோமற் றெற்று' எனப் பரிதல். இதன்கண் 'ஏதுத் தற்குறிப்பேற்ற வணி' யுளது.

௧௬௭. பெறுவது கொள்பவர்-பெற்ற பொருளைக் கைக் கொள்கின்ற விலைமாதராது; 'பெறுவது' என்பது வினையா லணைந்த பெயர்; சாதியொருமை. நெறிபட்டு-(கற்கும்) வழியில் இறங்கி. எளிய-சுலபமாகக் கிரகிக்கத் தக்கனவாம். அம் முறி புரை மேனியர் உள்ளம்போல-மாந்தளிரை ஒத்த நிறத்தையுடைய அவ் விலைமகளிரது மனம்போல. யார்க்கும் அறிதற்கு அரிய-எவர்க்கும் அறிவதற்கு அருமையானவை. பொருள்-(அந் நூற்) பொருள்கள். 'போன்றி யார்க்கும்' என்புழிக் குற்றிய லிகரம் அலகு பெற்றிலது.

௧௬௮. 'புத்தகமே' என்புழி ஏகாரம் பிரிநிலை. சால-மிக. தொகுத்தும்-சேர்த்து வைத்தும். பொருள் தெரியார்-அவற்

றின் பொருள்களை அறியாதவர்களாய், உய்த்து - (அவற்றைக்) கொண்டுவந்து. அகம் எல்லாம் நிறைப்பினும் - வீடு முற்றும் நிறைத்தாலும். அவற்றை போற்றும் புலவரும் வேறே - அப் புத்தகங்களைப் பாதுகாக்கின்ற புலவரும் வேறானவரே. பொருள் தெரிந்து தேற்றும் புலவரும் வேறு-(அவற்றின்) பொருள்களை அறிந்து (பிறர்க்கும்) அறிவிக்கின்ற புலவரும் வேறானவரே. ஏகாரத்தை இவ்விடத்துங் கூட்டிப் பொருளுரை””

௩௧௯. பொழிப்பு அகலம் நுட்பம் எச்சம் இ நான்கின்- பொழிப்புரை, அகலவுரை, நுட்பவுரை, எச்சவுரை ஆகிய இந் நால் வகையுரைகளாலும். கொழித்து-நன்கு ஆராய்ந்து. நூல் அகலம்- நூலின் விரிந்த பொருளை. பழிப்பு இல்-குற்றமில்லாத. நிரை ஆமா-கூட்டமாகிய காட்டுப் பசுக்களை. நன்கு உரை ஆமோ- சிறந்த வுரையாகுமோ? ‘ஆகாது’ என்றபடி. பொழிப்புரையாவது மூலபாடங் காட்டுதல், பதப்பொருள் சொல்லுதல், உதாரணங் கூறல் என்பன. அகலவுரையாவது தான் உரையிடுகின்ற நூலினும் பிறநூல்களினும் உள்ள பொருள்களின் ஒற்றுமை வேற்றுமை நயங்களைப் பற்றித் தானே தடைவிடைகளைக் கூறிப் பல தடை களை எடுத்துக் காட்டுதல். நுட்பவுரையாவது காரணங்களால் தக்க விடை கூறி அந்தத் தடைகளை யொழித்தல். எச்சவுரையா வது இவ்வாறு தடைவிடைகளான் முடிந்த ஒரு பொருளை யுரைத் தல். இவற்றிற்குப் பிற விலக்கணங் கூறுவாருமுளர். அகலம், நுட்பம், எச்சம்’ என்பன ஆகுபெயர்கள். ‘பொழிப்பு, அகலம், நுட்பம், எச்சம்’ என்னுஞ் செவ்வெண் தொகை பெற்று வந்தமை காண்க.

௩௨௦. இல் பிறப்பு-உயர்குடிப் பிறப்பு. ‘எனைத்து’ என் பது ‘எத்தனைத்து’ என்பதன் மரூஉவென்ப. ‘பிறர்சொல்லை’ என வுருபு பிரித்துக் கூட்டுக. சொல் பிறரை காக்கும் கருவிய ரோ-பிறருடைய சொற்களை (இகழாமற்) காத்தற்குரிய (அடக்கம் முதலிய) சாதனமுடையரோ? ‘இலர்’ என்றபடி. நல் அறி வாளர்-விவேகிகள். நவின்ற நூல் தேற்றாதார் புல் அறிவு-(பெரி

யோர்கள்) சொல்லிய நூல்களை அறியாதவர்களுடைய அற்பபுத்தி யை. தாம் அறிவதுஇல் - தாம் கவனித்து அறிவதுமில்லை; (அறி யாதவர் போல உபேக்ஷையா யிருப்பாரென்றபடி.)

கூஉக. அருளின்-தயையினால். அறம்-தருமத்தை. புலவர்-அறிஞர். பொருள்ஆக - பயன் தருவதாக. கொள்வர் - ஏற்றுக் கொள்வர். பொருள் அல்லா ஏழை-ஒரு பொருளாக மதிக்கப் படாத அறிவிலி. பால் கூழை மூழை சுவை உணராது ஆங்கு-பாற் சோற்றினது உருசியை அகப்பை அறியாதது போல, 'கூழ் சுவையை' என வுருபு பிரித்துக் கூட்டுக. 'ஆங்கு' என்பது உவம வுரு பென்க.

கூஉஉ. அவ்வியம் - மனக்கோட்டம்; பொறாமையெனப் பொருள் கூறி ஏனைத் தீக் குணங்களுக்கும் உபலக்ஷணமெனினு மாம். ஆறு-நெறியை. செவ்வியர் அல்லார்-நல்லறிவுடைய ரல்லா தார், அதிகார நோக்கிச் 'செவ்வி' என்பதற்கு 'நல்லறிவு' எனப் பொருள் கூறப்பட்டது. குணுங்கர்-புலையர்களுடைய. செவ்வி கொளல்-சுவையைக் கொள்ளுதலை. தேற்றாது ஆங்கு-அறியாத விதம்போல.

கூஉகூ. இமைக்கும் அளவில்-இமை கொட்டும் போதினுள். மார்க்கம்-வழியை. எனைத்தாலும்-எல்லா வகையாலும். தினை துணையும்-தினையளவாயினும். நன்றி புரிகல்லா-நல்ல காரியத்தைச் செய்யாத; (பிறர்க்கு) உதவி செய்யாத எனினுமாம். மடம்-அறியாமையுடைய. பொன்றில் என்-இறந்தால் வரும் நஷ்ட மென்ன? பொன்றாக்கால் என்-இறவாதிருந்தால் வரும் இலாபம் என்ன?

கூஉச. உளநாள்-(உயிர் உடம்போடு கூடி) வாழ்கின்ற நாட் கள். எமம்-காவல்; இன்பமுமாம். 'பலர் தூற்றும் பழி மன் னும்' என்க. மன்னும்-மிகுதியாம். கண்டாரோடு எல்லாம்-தன்னால் காணப்பட்ட எல்லாரிடத்தும். நகாஅது-இனிய முகத் தனாய் நட்புக் கொள்ளாமல். எவன்-என்? தண்டி-(எவரோடும்

கூடாமல்) விலகி. தனி பகை கோள்-தனியாயிருந்து (பிறரோடு) விரோதங் கொள்ளுதல். 'தனித்து' என்பதிற் பகுதியே வினை யெச்சத் தன்மைப்பட்டது. ,,,, , ...னியாதற் கேதுவாகிய விரோதங் கொள்ளுதல்' என்பது மொன்று. 'ஆல்' மூன்றும் அசை.

கூ௨௫. எய்தி இருந்த - (பலபேர்) கூடியிருந்த. எள்ளி - இகழ்ந்து. வைதான் - தூஷித்தான். 'ஒருவன் சென்று ஒருவனை எள்ளி வைதான்' என் றியைக்க. வைய-(அவ்வாறு) தூஷிக்கையில். வையப்பட்டான் - தூஷிக்கப்பட்டவன்; 'வையப்பட்டான்' என்ப தன் முதற்போலி. வாளா இருப்பானேல் - ஒன்றுஞ் சொல்லாது இருப்பானானால். வைதான் வாழும் எனின்-தூஷித்தவன் (வாழான், ஒருகால்) வாழ்ந்திருப்பனாயின். வியத்தக்கான் - அதிசயிக்கத்தக்க வன்; 'விய' என்பது முதனிலைத் தொழிற்பெயர்.

கூ௨௬. மூப்பு-கிழத்தனம். மேல்வாராமை முன்னே - நெருங்கி வாராதிருத்தற்கு முன்னரே. ஊக்கி-செய்யத்தொடங்கி. முயலாதான்-முயற்சி செய்யாதவன். நூக்கி - தள்ளப்பட்டு. புறத்து இரு-வெளியே இரு. போக - (இவ்விடம் விட்டுப்) போ. இன்னு சொல்-கடுஞ்சொற்களை. தொழுத்தையால் - வேலைக்காரியாலும். இழிவு சிறப்பும்மை தொக்கது; இது 'தொழும்பன்' என்பதன் பெண்பால். கூறப்படும் - சொல்லப்படுவான்.

கூ௨௭. நன்று ஆற்றார் - தானமுஞ் செய்யார். ஏமம் சார் - (உயிர்க்குப்) பாதுகாப்பாகப் பொருந்திய. நல்நெறியும் - நல்ல தரும வழியையும். சேர்கலார்-அடையமாட்டார். தாம் மயங்கி- (யாக்கை, செல்வம் முதலியவற்றின் நிலையாமையை அறியாது) தாம் மயக்கங்கொண்டு. ஆக்கத்துள் தூங்கி-செல்வத்திலேயே ஒன்றுந் தோன்றாமல் இருந்து. அவத்தமே - வீணாகவே. போக்குவார்-கழிப்பர். உம்மைகள் மூன்றும் எச்சப்பொருளன.

கூ௨௮. சிறுகாலேயே - இளம்பிராயத்திலேயே. தமக்கு செல் உழி வல்சி - தமக்கு (இறந்த பின்பு) செல்லும் மறுமைக்குரிய (தருமமாகிய) சோற்றை. இறுக இறுக - மிகவும் அழுத்தமாக-

அகரந் தொக்கது விகாரம். தோள்கோப்பு கொள்ளார் - தோளிற் கட்டிய மூட்டையாக அமைத்துக் கொள்ளாதவர்களாய். இறுகி இறுகி - (பொருளின்) மிகவுஞ் சிக்கெனவாகி ; இகரந் தொக்கது விகாரம். பின் அறிவாம்-(தரும விஷயத்தைப்) பின்பு பார்த்துக் கொள்ளுவோம். கைகாட்டும் - (மரணகாலத்திற் பேச நாவெழா மையால் தங்) கை யாற் குறித்து உருவங் காட்டுகிற. பொன்னும் - பொன்னுருண்டையும். புளிவிளங்காய் ஆம்-புளிப்புச் சுவையுள்ள விளங்காயாம். மரணதசையில் வாயடைத்த பின் தானஞ்செய்தல் குறித்துப் பொன்னுருண்டை வேண்டி அதனளவைக் காட்டினும் (மனைவி மக்கள் அறியாமை பற்றியோ அல்லது மனமின்மை பற்றியோ) காட்டியவளவு புளி விளங்காயைக் கொண்டுவந்து தருவ ராகலின், புல்லறிவாளர்க்குச் செல்வம் பயன்படாமற் போம்' என்பது கருத்து. இனி, 'பிறர்க்குப் பயன் படாமற் போதலுமுண்டு' என்னுங் கருத்துமுள தென்பாருமுண்டு. 'கையாற் பொதித் துணையே காட்டக் கயற்கண்ணு ளதனைக் காட்டா, ளையா விளாம் பழமே யென்கின்றீ ராங்கதற்குப் பருவமன்றென், செய்கோ வெனச்சிறந்தான் போற்சிறவார் கட்டுரையாற் குறித்த வெல்லாம், பொய்யே பொருளுரையா முன்னே கொடுத் துண்டல் புரிமின் கண்டீர்' என்னுஞ் சீவக சிந்தாமணிச் செய்யுள் கண்டு அறியத் தக்கது.

௬௨௩. வெறுமையிடத்தும் - செல்வமில்லாத காலத்திலும். விழு பிணி போழ்தும் - துன்பத்திற் கேதுவாகிய வியாதி வந்த காலத்திலும். மறுமை மணத்தரே ஆகி - மறுமைக்குரிய தருமத் தைச் செய்யுங் கருத்தை யுடையவர்களாய். மறுமையை-மறுமைக் குரிய தருமத்தை. ஐந்தை அனைத்து ஆனும் - சிறுகடுகி னளவாயி னும் ; 'ஐந்தை' என்பது சிறுமைக்கு எடுத்துக் காட்டப்படு வதோ ரளவை. ஆற்றிய காலத்து - (தரித்திரமும் நோயுமின்றி வினைத்ததைச்) செய்யக் கூடிய காலத்தில். சிந்தியார் - நினை யார்.

கூகூ0. என்னே - இஃதென்ன அநீதி! கொன்னே-வீணாக. அன்றோ - ஐயோ! அளவு இறந்த காதல் - வரம்பு கடந்த அன்பை யுடைய. தம் ஆர் உயிர் அன்னார் - தமது அருமையான உயிரை யொத்த உறவினரை. கொள இழைக்கும - (தான்) எடுத்துக் கொண்டு போதற்கு (வேண்டிய முயற்சியைச்) செய்கிற. கூற்றம் - யமனது (செயலை). கண்டும் - (தாம்) பார்த்திருந்தும்; உம்மை பிரித்துக் கூட்டப்பட்டதென்க.

கூகூக. கொலைஞர்-கொலை செய்பவர். உலை ஏற்றி தீமடுப்ப - உலைநீர்ப் பாத்திரத்தை அடுப்பின்மே லேற்றி நெருப்பை மூட்டி எரிக்கையில். ஆமை - (அப்பாத்திரத்தி லிடப்பட்ட) ஆமையானது. நிலை அறியாது - (தனக்கு வந்திருக்கிற அபாய) நிலைமையைச் சிறிதும் உணராமல். அ நீர் படிந்து ஆடி அற்று-அவ்வுலைநீரின் மூழ்கி விளையாடினாற் போலும்; 'ஆடி' என்பது 'ஆடினால்' என்னும் எச்சத்திரிபு. வல்-வல்ல. கோள்பார்க்க - (தம் உயிரைக்) கொண்டு போகும் சமயத்தை எதிர்பார்த்திருக்க. ஈண்டை வலையிடத்து - இவ்வுலக வாழ்க்கையாகிய வலையினிடத்தே. செம்மாப்பார்-மிகக் களித்திருப்பவர். மாண்பு - தன்மை; 'பெருமை' என்னும் பொருள்தரும் இச்சொல் இங்கு எதிர்மறை யிலக்கணையாய், இழிவான தன்மைக்கு வந்தது.

கூகூஉ. ஆடிய-நீராடுதற்கு. ஒருங்குடன் ஓசை அவிந்தபின் - (இக்கடலின்) ஒலிமுழுவதும் ஒருசேர அடங்கின பின்பு. 'ஒருங்கு, உடன்' இவை ஒரு பொருட்பன்மொழி. ஆடுதும் என்று அற்று - நீராடுவோமென்று காத்திருந்தாற் போலும்; 'என்று' என்பது 'என்றால்' என்னும் எச்சத்திரிபு. இல் செய் குறைவினை - குடும்பத்திற்குச் செய்யவேண்டிய காரியக் குறைகளையெல்லாம். அறவினை - தருமகாரியத்தை. மற்று அறிவாம் - பின் அறிவோம். மாண்பு - தன்மை.

கூகூகூ. குலம்-உயர்குடிப் பிறப்பும். தவம்-விரதவொழுக்கமும். குடிமை - (செல்வத்தாலாகும்) குடித்தன வளமும். மூப்பு - பிராய

முதிர்ச்சியும். விலங்காமல் - தவறாமல். எய்தியக் கண்ணும் - (ஒருவனுக்கு) நேர்ந்த விடத்தும். நலம் சான்ற - பெருமை மிக்க. மை அறு - குற்றமற்ற, தொல் சீர் - பழமையான சிறப்பை யுடைய. உலகம் - (மறுமையில் அடையத்தக்க சுவர்க்க மோக்ஷம் என்னும்) உலகங்களின் தகுதியை. நெய் இலா பால் சோற்றின் நேர் - நெய் யில்லாத வெண்ணிறச் சோற்றிற்கு நிகர்; 'பால்சோறு' என்பது உவமத்தொகை.

௩௩௪. கல் - கற்கள். நனி நல்ல - மிகவும் நல்லவை. கடையாய மாக்களின் - அதம மனிதர்களையுங் காட்டில். சொல் நனி தாம் உணரா ஆயினும் - சொற்களை நன்றாகத் தாம் கேட்டு அறிந்து கொள்ள மாட்டாவாயினும். இன்னினியே - அந்த அந்தப்பொழுதிலே; 'இனி இனி' என்பதன் தொகுத்தல். இருத்தல் - உட்காருதலும். கிடத்தல் - படுத்தலும். இயங்குதல் - நடத்தலும். உற்றவர்க்கு - (தம்மை) அடைந்தவர்க்கு. தாம் உதவலான் - (தாம்) இடமாக வுபயோகப்படுதலான்.

௩௩௫. பெறுவது ஒன்று இன்றியும் - (தன்னால்) பெறப்படும் பயன் சிறிதும் இல்லாதிருந்தும். பெற்றானே போல - ஒரு பயனைப்பெற்றவன் போலவே, ஏகாரம் தேற்றம். கறுவுகொண்டு - கோபங்கொண்டு. ஏலாதார் மாட்டும் - தகாதவர்களிடத்திலும். கோத்து - தொடர்ச்சிப் படுத்தி. இன்னா - துன்பந்தருஞ் சொற்களை. உரையாக்கால் - (அச்சொற்களின் பொருளை) விளக்குதலுஞ் செய்யாவிட்டால். நா தின்னும் - நாக்கை வருத்துவது (போலும்). நல்ல சுனைத்து - நல்ல தினவாவது; 'சுனைத்து தின்னும்' என்பது முடிபு.

௩௩௬. தம் கண் மரபு இல்லார் பின் - தம்மிடத்து (அடக்கம் முதலிய) நல்லொழுக்கம் இல்லாதாரிடத்தே. அவரை எம் கண் வணங்குதும் என்பார் - அவரை எம்மிடத்து வணங்கி நடக்கச் செய்வோம் என்று சொல்வாரது. புல் கேண்மை - இழிவான சேர்க்கை; அஃது நீண்டு ஒருதலை நட்பிற்காம். கல் கிள்ளி கை இழந்து அற்று -

கருங்கல்லைக் கிள்ளித் தம் கையை இழந்தாற்போலும். 'கற்கிள் ளிக் கையுய்ந்தா ரில்' என்றார் பழமொழியினும்.

ருருஎ. ஆகாது எனினும் - (தமக்குக்) கிட்டாதாயினும். அகத்து - ஒரு பாத்திரத்தினுள். நெய் உண்டாகின்-நெய் இருக்கு மானால். போகாது-அப் பாத்திரத்தை விட்டுப் போகாமல். புறஞ் சுற்றும்-வெளியிற் சுற்றிக்கொண்டே யிருக்கும். யாதும்-ஒன்றும்; உம்மை முற்றுப்பொருளது. உடையாரை - பொருளுடையாரை. விடா அர் - விட்டு நீங்கார். அளபெடை இரண்டும் செய்யுளோசை நிறைக்க வந்தன. இஃது எடுத்துக் காட்டுவமை.

ருருஅ. நல்லவை-நற்குண நற்செய்கைகளை; இனி 'நல் அவை' எனப் பிரித்து, 'நல்ல சபையை' எனினுமாம். எய்தார்-அடையார்கள். இல்லாதார்க்கு-வறியர்க்கு. யாது ஒன்றும்-எதையும். ஈகலார் - கொடார். எல்லாம் இனியார் - குணஞ் செயல்களி லெல் லாம் இனியரான தமது மனைவியாது. இசைபட வாழார்-புகழுண் டாக வாழார்கள். முனியார் கொல்-வெறுக்கப்படமாட்டார்களோ? தாம் வாழும் நாள்-தாங்கள் பிழைத்திருக்குங் காலங்களையெல்லாம். 'இல்லாதார்க் கியாதொன்றும்' என்புழிக் குற்றியலிகரம் அலகு பெற்றிலது.

ருருகூ. விழைந்து ஒருவர் தம்மை வியப்ப-(யாவராயினும்) ஒருவர் (வந்து) விரும்பித் (தம்மைப்) புகழ்ந்து பேசினும். விழைந்து இலேம் என்று இருக்கும் - (நாம் அதனை) விரும்போமென்று ஏற் றுக்கொள்ளாதிருக்கும். தழங்கு குரல் - முழங்குகின்ற ஒலியை யுடைய; இது 'தழங் குரல்' என விகாரப்பட்டது காண்க. பாய் திரை - பாய்ந்து வருகின்ற அலைகளையுடைய கடல்; இஃது தன் மொழித் தொகை. வையம் - பூமி முழுவதையும். பயப்பினும் - தரு வதாயிருந்தாலும். இன்னாது - (பெரியோர்க்கு) இனியதாகாது; ஏகாரந் தேற்றம். ஆய் நலம் இல்லாதார் மாட்டு - ஆராய்தற்குரிய நல்லறிவு இல்லாத மூடர்களிடத்தே. 'ஆய் நலம் இல்லாதார் மாட்டு கேண்மை' என முடிவு செய்க. ஆய் நலம்-சிறந்த நற்குண

மெனினுமாம். 'கேண்மை' என்றது ஒருதலை நட்பினை; எதிர் மறை இலக்கணையால், 'போலி நட்பினை' என்றவாறுமாம்.

௩௪௰. கண் அகன்ற - மிகப் பரந்த. சாயலும் - மென்மைக் குணமும்; 'சாயன் மென்மை' என்பது சூத்திரம். இல்பிறப்பும்- உயர் குடிப்பிறப்பும். பக்கத்தார் - பிறர். பாராட்ட - புகழ்ந்துபேச. பாடு எய்தும்-பெருமை யடையும். தான் உரைப்பின்-(அவற்றைத்) தானே எடுத்துப் பேசுவானாயின். மைத்துனர் பல்கி - அவனுக்கு மைத்துனர்கள் ஏற்பட்டு; ஈண்டு 'மைத்துனர்' என்றது பரி காசஞ் செய்வோரை. மருந்தில் தணியாத - மருந்தினாற் பரிகரிக்க முடியாத. பித்தன் என்று-பித்தநோயாளனென்று. எள்ளப்படும்- இகழப்படுவன்.

௩௪௧. கப்பி-சொய்யை. கடவது ஆ-போதிய அளவினதாக, காலை-(இரை வேண்டிய) காலத்தில். தன் வாய் பெயினும்-தனது வாயிற் (பிறர் கொணர்ந்து) போகடினும். குப்பை கிளைப்பு ஓவா- (தனக்கு இயல்பாகிய) குப்பை கிளறுந் தொழிலின் நீங்காத. கனம் பொதிந்த - மிக உயர்ந்த பொருளடங்கிய. நூல் - நூற்பொருளை. விரித்து காட்டினும்-விவரமாகத் தெரிவித்தாலும். கீழ்-கீழ்மகன்; இது பண்பாகுபெயர். மனம் புரிந்த ஆறே - (தன்) மனம் விரும் பியபடியே. மிகும்-வரம்பு கடந்து செல்வன்.

௩௪௨. காழ் ஆய கொண்டு - உறுதியான நூற்பொருளை அறிந்து. கசடு அற்றார் தம் சாரல் - குற்றம் நீங்கின பெரியோர் பக்கல். தாழாது போவாம்-காலதாமதமில்லாது செல்வோம். என உரைப்பின் - எனச் சொல்லி (மேன்மகன் ஒருவன்) அழைப்ப னாயின். உறங்குவாம் - நித்திரை செய்வோம். எழுந்துபோம் - அவ் விடம் விட்டு எழுந்துபோவன். அஃது அன்றி-அதுவுமல்லாவிடின். மற்று ஒன்று உரைத்து-வேறு யாதாயினுமொரு காரணஞ் சொல்லி; 'ஒன்று' என்பது ஈண்டு ஆகுபெயராம். மறங்கும்-மறுத்துச் செல் வன். ஆய்தம் மெய்போல ஒலித்த தென்க. 'ஆம்' இரண்டும், 'தான்' என்பதும் அசைகள்.

௩௪௩. பெரு நடை-மிக்க செல்வத்தை ; 'நடைவழி யொடுக் கஞ் செல்வம்' என்பது நீகண்டு. இனி, 'பெரு நடை' என்பதற்குப் 'பெரிய சிறப்பு' என்றுரைப்பாரு முளர். பெற்றி பிழையாது-தம் இயல்பாகிய பெருமைக் குணம் மாறாது. ஒரு நடையார் ஆகுவர்-(எப்போதும்) ஒருவகைப்பட்ட நடக்கையுடையவராவர். பெறற்கு அடைந்தும்-அடைந்தவிடத்தும் ; உம்மை எதிர்மறை. பிறங்கு-விளங்குகிற. வற்றும் ஒரு நடை - (முன்னைய நடைக்கு வேறாகிய) ஒரு நடக்கையின் வல்லவனுவன் ; 'வற்று' என்பது 'வல்' என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்பு முற்று.

௩௪௪. தினை அனைத்தே-தினை என்னும் சிறிய தானியத்தினளவே. செய்த நன்று-ஒருவன் செய்த வுபகாரத்தை. உண்டால்-(தாம்) அனுபவித்தால். பனை அனைத்து ஆ உள்ளுவர் - பனைமரத்தளவு பெரிதாக நினைப்பர். நன்று இல - (அவ்வுபகாரங்கள்) சிறப்பிலவாம். நன்று அறியார் மாட்டு - செய்ந்நன்றி யறியாதாரிடத்தே. 'தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்றெரி வார்' என்னுந் திருக்குறளினையும் 'தினை, பனை யென்பன சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சில அளவை' என்னும் பரிமேலழகர் உரைக் குறிப்பினையுங் காண்க.

௩௪௫. கலத்து-பாத்திரத்தில். புறந்தரினும்-யாதுகாத்துவரினும் ; 'புறந்தா' என்பது பகுதி. பிறர் எச்சிற்கு-அயலார் (உண்டெறிந்த) எச்சிற் சோற்றிற்கு. இமையாது - கண்ணிமை கொட்டாது. அ சீர்-அப்படி. 'ஆ' என்பது 'ஆக' என்பதன் தொகுத்தல். வேறுபடும்-(பெருமைக்கு) வேறுபட்டனவாம்.

௩௪௬. சக்கரம் செல்வம் - பூமண்டலமுழுவதும் ஆளுகின்ற பெருஞ் சிறப்பை ; 'சக்கரம்' என்றது 'ஆக்ஞாசக்கரத்தை' என்பதுமாம். விழுமியோர் - மேலோர். மிகுதி சொல் - வரம்புகடந்த வார்த்தையை. முந்திரிமேல் - முந்திரி யென்னுஞ் சிறிய அளவின் மேல். காணி மிகுவதேல்-காணி யென்னுஞ் சிறிய அளவுகொண்ட செல்வம் மிகுவதானல் ; 'காணி' யென்பது அறுபத்து நான்கி

ஞென்றும், 'மூந்திரி' அதன் நான்கி ஞென்றுமாம். 'காணி மேல் முந்திரி மிகுவதேல்' எனச் சொற்களை மாற்றிப் பொருள் கோடலுமாம். இந்திரன் ஆ-தேவேந்திரனுக. எண்ணிவிடும்-நினைத் துக் கொள்வன்.

௩௪எ. மை தீர்-குற்றமற்ற. மாண்ட மணி அழுத்தி-மாட்சி மைப்பட்ட இரத்தினங்களைப் பதித்து. காற்கே ஆம் - (ஒருவன்) காலிற் கொள்ளுதற்கே உரியதாம்; ஏகாரம் பிரிநிலை. 'எய்திய செல்வத்தர்' என்பது வடநூன் முடிபு; 'செல்வம் எய்தியவர்' என்க. செய் தொழிலால் - (அவர்கள்) செய்யும் இழிந்த செய்கை களால். காணப்படும் - (இவர்கள் கீழ்மக்களென்று) அறியக்கூடும். இஃது எடுத்துக் காட்டுவமையணி.

௩௪அ. கடுக்கென - கடுமையாக. இது குறிப்பிடைச்சொல். சொல் வற்று ஆம்-சொல்லுதல் வல்லவனும். 'சொல்' என்பதனைச் 'சொல்ல' என்பதன் தொகுத்தலாகக் கோடலுமாம். கண்ணோட் டம்-தாக்ஷிண்யம்; இது கண்ணொடியவழி யுளதாவ தாகலின், 'கண் ணோட்டம்' ஆயிற்றென்க. 'பிறர் மாட்டு நடுக்கண் உவக்கும்' என்க. இடுக்கண் - துன்பத்திற்கு. உவக்கும்-மகிழ்வன். அடுத்து அடுத்து - அடிக்கடி. வேகம் - கோபாவேசம். விறல் - பெருமை யுடைய. ஏகும்-(கண்டவிடம்) செல்வன். எள்ளும்-(பிறரை) இகழ் வன். கீழ்-கீழ்மகன். இது தன்மை நவிற்சியணி.

௩௪௯. 'பின் நிற்பின் இவர் பன்னுள் பழையர் என்று' எனப் பொருத்துக. பழையர் இவர் என்று பன்னுள்-இவர்கள் பல நாள் பழகியவரென்று கருதி; 'பழையர்' என்பது 'பழைமை' என்னும் பண்படியாகப் பிறந்த பலர்பாற் பெயர். பின் நிற்பின் - (ஒருவர் தம்) பின் நிற்பராயின் அஃதாவது தயக்கு அடங்கி நடப்ப ராயின். உழை இனியர் ஆகுவர்-அவர்களிடத்து விருப்ப முடையவ ராவர். விழையாதே - (அப்படித் தம் பின் நின்றவர்களை) விரும்பா மலே. கள் - தேனை. உயிர்க்கும் - சிந்துகின்ற. 'நெய்தல் சேர்ப்ப' என்க. எள்ளுவர்-இகழ்வர்.

௧௫௰. கொய் புல் குறைத்து கொடுத்து தீற்றினும்-அறுக்கத் தக்க புல்லை அறுத்து வாயிற் கொடுத்துத் தின்னச் செய்யினும்; கொய் புல்லாவது அறுக்கத்தக்க பக்குவம் வாய்ந்த புல்லென்க. 'தீற்று' என்பது 'தின்' என்பதன் பிறவினை. என்றும் - எக் காலத்தும். வையம்-தேரை. பூண்கல்லா - பூண்டிழுக்கமாட்டா. சிறுகுண்டை - சிறிய எருதுகள். இஃதெடுத்துக்காட் டுவமை.

௧௫௧. ஆர்த்த - (கல்வி கேள்விகளான்) நிறைந்த, ஆண்டு இளையர்-வயதிற் சிறியவர். காத்து ஓம்பி - (ஐம்பொறிகளையுந் தீய புலன்களின் வழியே செல்லவொட்டாது) தடுத்துப் பாதுகாத்து. அடக்குப-(தம்மை அடங்கி நடக்கச் செய்வர். மூத்தொறூஉம்- வயது முதிருந்தோறும்; 'மூ' என்பது முதனிலைத் தொழிற்பெயர்; அளபெடை இன்னிசை யளபெடை. தீ தொழிலே கன்றி - கெட்ட செய்கைகளிலேயே உழன்று வருந்தி. திரிதந்து - (ஒரு பயனுமின்றித்) திரிந்து; இதன்கண் 'திரிதா' என்பது பகுதி. எருவைபோல் - கொறுக்கை போல; 'கழுகுபோல' என்பது மொன்று. போத்து அறார்-உட்டுளை நீங்கார் அஃதாவது உள்ளீடு பெறார்; குற்றம் நீங்காரென்பது மொன்று, இவ்வாறு கொள்ளிற் 'பொத்து' என்பது எதுகை நோக்கி நீட்டல் விகாரம் பெற்றதென் றேனும், 'பொந்து' என்பது வலித்தலும் நீட்டலும் பெற்றதென் றேனுங் கொள்க. கழுகு குரூரகுண முடைய பறவையாகலின் 'எருவைபோல்' என்றா ரென்க.

௧௫௨. பெரும் பொய்கையுள் - பெரிய குளத்தில். வழும்பு அறுக்க கில்லா ஆம் - (தம் உடம்பின் மேலுள்ள) வழுவழுப்பான அழுக்கை நீக்கிக் கொள்ள மாட்டாவாம். நுணுக்கம்-நுட்பபுத்தி; இஃதாகுபெயர். வழும்பு - குற்றம். கற்றக்கண்ணும் - கற்றுப் பழகினும். தேர்கிற்கும் பெற்றி - (அந்நூல்களின் உண்மைப் பொருள்களை) ஆராய்ந்தறியுந் தன்மை. அரிது - இல்லையாம். இஃ தெடுத்துக்காட் டுவமையணி.

௧௫௩. கணம்-கூட்டமாகிய. கண் இன்று - எதிரில் இன்றி, 'கண் நின்று' எனப் பிரித்தல் சிறவாது. குணம் ஏயும்-நற்குணத்

தையும், கூறற்கு அரிது எடுத்துச் சொல்வதற்கு (நாவெழுதல்) அரிது. குணன் அழுங்க - (அவரது) நற்குணங்கள் அழியும்படி. 'உழை நின்று குற்றம் கூறும்' என மாற்றுக. உழை - பக்கல். எற்றால் இயன்றதோ - (தசையினாலன்றி) வேறெதனாற் செய்யப் பட்டதோ. நா-நாக்கு.

ங௬௬ கோடு ஏந்து - பக்கங்கள் உயர்ந்த. அகல் - அகன்ற. பெண்டிர்-குலமகளிர். தம் பெண் நீர்மை-தமது பெண்மைக்குரிய அலங்காரத்தை. புது பெருக்கம் போல- புதுநீர் வெள்ளம் போல. இறப்பர் - (அவர் செல்வத்தை முற்றும் பெற்று அவரை விட்டுப்) பிரிவர். மற்றையவர் - வேசையர். அறிஞர் தற்புகழ்ச்சி செய்ய அறியாரென்பதூஉம், அறிவிலார் தம்மைப்பிறர் நன்கு மதிக்கும் படி தம்மைத்தாமே புகழ்ந்து பேசிப் பொருள் பறிப்பரென்பதூ உட்பட நின்றமையின், இது பிறிது மொழிதலணி.

ங௬௭. தட்டாமல் - (ஒருவர்) தட்டித்தள்ளாமல். செல்லா- உள் இரங்காத. உளி நீரார் - உளியின் தன்மையுடையவராவர். கயவர் - கீழ்மக்கள். அளி நீரார்க்கு - (பிறர் துன்பம் கண்டு இரங் கும்) அருளையே இயற்கைக் குணமாக வுடைய பெரியார்க்கு; அன்றி, பிறர் 'இரங்கும்படியான இயல்புடையார்' எனினுமாம். என்னானும்-யாதோருபகாரத்தையும். எனைத்தானும் - எவ்வளவு பேருதவியையும். இன்னாங்கு செய்வார் பெறின் - தமக்குத் துன் பஞ்செய்வோரைப் பெறுவராயின். 'மாது; ஓ என்பன அசைகள்.

ங௬௮. நலம்-வளத்தை. உள்ளும் - நினைத்துக் கொண்டிருப் பன். பயர்த - (தனக்குப்) பயன் கொடுக்குந் தன்மையுள்ள. ஒரு வர் செய்த நன்று - (தமக்குப்) பிறரொருவர் செய்த உபகாரத்தை. 'சிறந்த உள்ளுவர்' என்புழிச் 'சிறந்து' என்பது எச்சத் திரி பாம்; 'சிறந்த' என்பது பொருள். கயம் - கயவன், அஃதாவது கீழ்மகன்: கயவனைக் 'கயம்' என அஃறிணையாற் கூறியது அவனது இழிவு தோன்றற்கென்க. தன்னை வைததை-(பிறனொரு வன்) தன்னை இகழ்ந்து பேசியதை.

பின்பும்; உம்மை தொக்கது விகாரம். அ நோய் தணியாத உள்ளம் உடையார்-அந்த வருத்தத்தை நீக்க மாட்டாத (வலிய) மனமுடையார். மணி வரன்றி - இரத்தினங்களை வாரிக்கொண்டு. விறல்-வெற்றிபெற்ற அஃதாவது மிகச் சிறந்த. வாழ்வின்-உயிர் வாழ்தலையுங் காட்டில். வரை பாய்தல்-மலையின் மீதேறி விழுந்து உயிர் விடுதல்.

௩எ௰. புது புனலும் - புதிய நீர் வெள்ளமும். பூ குழையார்-அழகிய காதணியுடைய வேசையர்களது. விதுப்பு அற நாடின்-விரைவின்றி (நின்று) ஆராயின்; 'விருப்பமின்றி ஆராயின்' என்பாரு முளர். வேறு அல்ல - வெவ்வேறு தன்மை யுடையன வல்ல. மாரி அறவே அறும் - மழை நீங்கின் ஒழியும். வாரி அறவே அறும்-பொருள் வருவாய் நீங்கின் ஒழியும். இஃ தெடுத்துக்காட் டுவமையணி.

௩எக. ஒளியும்-பிரகாசமும். துளக்கு அற-கலங்குதலின்றி. நாடின் - ஆராயின். வேறு அல்ல - வேறுபட்டனவல்ல. அற்ற கண்ணே - வற்றிய அப்பொழுதே. அவர் அவ்வேசையரது. கை - கையிற் பொருள்; இஃதாகு பெயர்.

௩எஉ. கோடு - பக்கம். ஆய் இழையாள் - ஆராய்ந் தெடுத்த ஆபரணங்களை யுடையாள். செம் கோடு பாய்தும்-செம்மையாகிய மலையுச்சியினேறி அதனின் (நாம் இருவரும் ஒருசேர) வீழ்வோம். என்றான் மன் - என்று (எம்மிடத்திற் பொருள் பெறும்போது அன்பு காட்டி) உறுதியாகக் கூறினாள்; 'மன்' என்னும் இடைச் சொல் ஒழியிசைப் பொருளது, அசையுமாம். காணம் இன்மையால் - (எம்மிடத்திற்) பொருளின்மையால்; 'காணம்' என்பது 'பொற்காசு' 'கையிலொன்றுங் காணமில்லை' என்றார் பெரியாரும். செம் கோட்டில்மேல் மேவாது - செம்மையான மலையுச்சியின்மேல் (ஏறி வீழ்தற்கு எம்முன்) கூட வாராது. கால் கால் நோய் காட்டி-எனது காலின்கண் வாதநோய் வந்துளது (ஆதலின் 'உடன் வர முடியவில்லை' என்று பொய்க் காரணஞ் சொல்லிக்) காட்டி. 'கால் நோய்' என்புழிக் 'கால்' என்பது 'லக்ஷணை

யால்' வாயுவிற்காக, அது வாத நோய்க்காயது; இது லக்ஷித லக்ஷணையாம். இனி, 'கால் கால் நோய்' என்புழிக் 'கால்' என்பது ஏழனுருபு எனக் கொண்டு 'காலின்கண் நோய்' எனப் பொருள் கூறலுமாம். கலுழ்ந்து-(பொய்யாக) அழுது.ஒழிந்தாள்-எம்முடன் வாரா தொழிந்தாள்.

௩௭௩. அம் - அழகிய. கண்-இடமகன்ற. விசும்பின் - வானிலுள்ள. அமரர்-தேவர்களால்; 'மரணம் இல்லார்' என்பது சொல்லின்படி பொருள். மால்-திருமால்; இந்திரனுமாம். 'மன்' என்பது அசை. தம் கை - தமது கையில். ஒன்று - ஒருபொருளும்; உம்மை தொக்கது. கொய்தளிர் அன்னோர் - கொய்தற்குரிய தளிர் போன்ற உடம்பின் நிறத்தையுடைய வேசையர். கையால் தொழுது-கும்பிட்டு வணங்கி. விடுப்பா-கைவிடுவார்கள்.

௩௭௪. ஆணம் இல்-அன்பில்லாத. அணி நீலம்-அழகிய நீல மலர் போன்ற. கடு அனையர் - விஷம்போலக் கடியத்தக்கவர். காண-ஆராய்ந்தறியின்; 'காணவே கண்ணோக்கு காணமில்லாதார் கடு வனையர்' என்க. செக்கு ஊர்ந்துகொண்டாரும் - செக்கு ஆடுதலாகிய இழிதொழிலுடையாரும். செய்த பொருளுடையார்-தேடிய செல்வமுடையாராயின். அக்காம் அன்னோர் - சாதகரை போல இனியராவர். 'செக்கூர்ந்து கொண்டானும்' என்பது பாடாந்தரம்.

௩௭௫. ஒரு தலை - ஒரு புறத்தை. தேம்படு தெள்கயத்து - இனிமை பொருந்திய தெளிந்த நீரையுடைய குளத்திலுள்ள. மீன்-மீனுக்கு. மலங்கு அன்ன-மலங்கு மீனை ஒத்த; 'மலங்கு' என்பது 'விலங்கு' என வழங்குதல் அறிக. மலங்கன்ன செய்கையாவது அவரவர் குணத்தொடு மாறுபடாது ஒத்தொழுகி நின்று அன்பு காட்டுதல். விலங்கு அன்ன - மிருகத்தை யொத்த. வெள் அறிவினார் - அறிவில்லாதார்.

௩௭௬. பொத்த நூல் கல்லும் - துளைத்த (உட்டுளையுடைய) நூலிற் கோத்த இரத்தினத்தையும். புணர் பிரியா அன்றிலும் -

௫௫௭. நன்றி-உதவி. 'செய்தவர்க்கு' என்புழி வேற்றுமை மயக்கம் இருத்தல் காண்க. ஒன்றி எழுந்த - இடைவிடாது தொடர்ச்சியாக நேர்ந்த. பிழை நூறும் - நூறு குற்றங்களையும். பொறுப்பர் - (தமக்கு அவர் செய்த பேருதவியைக் கருதிப்) பொறுத்துக்கொள்வர். ஒன்று தீது ஆயின் - ஒன்று கெடுதியா மாயின். தீதாய் விடும் - கெடுதியாகவே தோன்றும். 'நூறு, எழுநூறு' என்பன 'பல' 'மிகப்பல' என்பனவற்றிற்குக் காட்டிய எண்களாம்.

௫௫௮. எட்டை பருவத்தும் - (பொருளின்மையாற்) றளர்வு வந்த காலத்தும். இற்பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர்கள். செய்வன - செய்யும் நற்காரியங்களை. மோட்டு இடத்தும் - (பொருளுடைமையால்) உயர்ந்த நிலையில் நின்ற காலத்தும். மூழ மக்கள்-மூடர்கள். கோட்டை - (தனது) தந்தங்களில்; இது வேற்றுமை மயக்கம். வயிரம் செறிப்பினும் - பூண் கட்டினும். வாள்-வாள்போன்ற. செயிர் வேழம் - (போரிற்) கோபிக்குந் தன்மையுள்ள யானை. ஆகுதல் - ஒத்தல். இஃது எடுத்துக் காட்டு வமை.

௫௫௯. மூன்று ஆதும் - இன்றையே செல்வராவோம; பிரி நிலை ஏகாரந் தொக்கது. இந்நிலையே-இப்போதே. இனி சிறிது நின்று - இனிச் சிலகாலங் கழித்து. இருந்து - (அறஞ்செய்யாது) இருந்து. உரையின் ஒன்றி மகிழ்ந்து - (மேல் நினைத்தபடி) வாயாற் சொல்லி மகிழ்ச்சி யடைந்து. தம் உள்ளம் வேறு ஆகி - (தாம் நினைத்தபடி நேராமையால்) தமது மனம் மாறுபட்டு. மரை இலையின் - தாமரை யிலைபோல. மாய்ந்தார் - (பயனின்றியே) மாண்டார். செழிப்புற்று நின்று நாளடைவில் இருந்தவிடத்தே அழிதலிற் கயவர்க்குத் தாமரையிலை உவமையாயிற் றென்க.

௫௬o. கிடை அகத்து - நெட்டியுள். 'ஈரம் இல் ஆகும்' என்க. 'ஒரும்' என்பது அசைநிலை; முன்னிலைப் பன்மை மூற் றெனக் கொண்டு 'நீர் அறியும்' என்பதுமாம். நிறை - நிறைதலை

யுடைய அஃதாவது திருப்திக்குக் காரணமாதலுடைய; இனி, 'நிறைப்பெரு' என்பதனை வினைத்தொகை நிலைத்தொடரெனக் கொண்டு வலிமிக்கது எதுகை நயம்பற்றி யென்பாரு முளர். நின்றக் கடைத்தும் - இருந்தவிடத்தும். அறை பெருகல் அன்னார்- பாறையாகிய பெருங் கல்போல இளகுதலில்லாத கயவரை. உடைத்து-இவ் வுலகம் உடையது.

௩௬௧. மழை திளைக்கும் - மேகம் தவழும்படியான. மாடம் ஆய்-உபரிகை யுடையதாய். மாண்பு - சிறப்பு. காப்பாய் - காவலை யுடையதாய். இழை விளக்கு நின்று இமைப்பின் - ஆபரணங்கள் விளக்குப்போல நிலைபெற்று விளங்கினும்; சிறப்பும்மை தொக்கது, 'விளக்கு நின்று இமைப்பின்' என்பது 'குருவி கூப்பிட்டான்' என்பது போன்றதொரு முடிபு. என் ஆம் - என்ன பயனுடைத்தாம். விழை தக்க-விரும்புதற்குத் தக்க. மாண்ட-(குணங்களாற்) சிறந்த. மனையாளை - மனைவியை. இல்லகம்-வீடானது. காண்டற்கு அரியது ஓர் காடு-கண்களாற் காண்பதற்குங் கூடாத மிகக் கொடியதொரு காடுபோலும்.

௩௬௨. வழுக்கு எனைத்தும் இல்லாத - குற்றம் ஒரு சிறிதும் இல்லாத. வாள்வாய் கிடந்தும்-வாளின் காவலிலிருந்தும். வாட்காவலாவது வாளேந்திய வீரர்களால் காக்கப்படுதல். 'வாள் போன்ற கொடிய காவ' லெனினுமாம். இழுக்கினை தாம் பெறார் ஆயின் - (கற்பொழுக்கத்தினின்று) தவறுதலைத் தாம் பெறாதவராயினும்; உம்மையை ஈண்டுங் கூட்டுக. இழுக்கு எனைத்தும் செய்குறு பாணி சிறிதே - சிறு குற்றமேனுஞ் செய்யாது தம்மைப் பாதுகாத்த காலஞ் சிறிதேயாம். கை உறு பாணி பெரிது - நல்லொழுக்கத்தைக் கைக்கொள்ளாத காலம் பெரிதேயாம். மகளிர் கடுங்காவலின் வைகிக் குற்றஞ் செய்தற்குச் சிறிது மிடம்பெறாராயினும் அவர் மனந் தீவழிச் செல்லுதலே பெரும்பான்மை என்பது கருத்து; 'சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர், நிறை காக்குங் காப்பே தலை' எனத் திருக்குறளினும், 'நிறையான் மிகு

கல்லா நேரிழை யாரைச், சிறையா னகப்படுத்த லாகா' எனப் பழ மொழியினும் வருதல் காண்க.

கூகூகூ. எறி என்று-(கணவன் சினந்துழி என்னை) 'அடி' யென்று சொல்லி. எதிர் நிற்பாள்-எதிர்த்து நிற்பவள். கூற்றம்-யமனுக்கு நேர். சிறுகாலை - உதயகாலத்தில். அட்டில் - மடைப் பள்ளியில். அரும்பிணி - (மருந்தாற் றணிக்க) முடியாத நோய்க்கு நேர். அட்டதனை - சமைத்த பொருள்களை. உண்டி உதவாதாள்-உணவாகக் (கணவனுக்கு) இடாது தானே உண்பவள்; அன்றி, 'நீ உண், உண்' எனப் பரிந்து பரிமாறுதவள்' என்பதுமாம். இல் வாழ்பேய்-வீட்டில் வாழ்கின்ற பேய்க்கு நேர். 'மூவர்' என் புழி முற்றும்மை வருவித்துரைக்க. கொண்டானை - கணவனை. கொல்லும்-உயிர் வாங்கும். படை ஆயுதத்திற்கு நேராவர்.

கூகூச. கடி என கேட்டும் - இல் வாழ்க்கையை 'நீக்கிவிடு' எனப் பெரியோர் சொல்லக் கேட்டும்; நகூ வது பாட்டினை நோக் குக கடியான் - நீக்காதவனும். வெடிபட - (தலை) வெடிக்கும்படி. ஆர்ப்பது-(சாப்பறை) ஒலிப்பதை; அது தெளியான்-இல்வாழ்க்கை இத்தன்மைத் தெனத் தெளியாதவனும். பேர்த்தும் ஓர் இல் கொண்டு-மறுபடியும் ஒரு மனைவியை மணந்துகொண்டு. இனிது இருஉம்-இன்பமாக விருக்கின்ற; 'இருஉம்' என்பது 'இருவும்' என்னும் பெயரெச்சம் விகாரப்பட்ட சொல்லிசை யளபெடை. ஏமுறுதல்-மயக்கமானது. கல் கொண்டு எறியுந் தவறு-கல்லை யெடுத் துத் தன்மேல் தானே எறிந்து கொள்வதொரு குற்றம் போல்வது. 'தவறு என்ப' என் றியைக்க.

கூகூரு. தலை-உத்தமமாவது. தவம் முயன்று-தவத்திற் குரிய ஒழுக்கங்களின் முயற்சி செய்து. வாழ்தல்-உயிர் வாழ்தலே; ஏகா ரத்தைப் பிரித்து ஈண்டுக் கூட்டுக. இடை - மத்திமமாவது. இனி யார்கண் தங்கல் - நற்குண நற்செய்கையுடைய மனைவியருடன் கலந்து வாழ்தலே. கடை-அதமமாவது. புணராது என்று எண்ணி-கிட்டாதென்று நினைத்தும்; சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

பொருள் நசையால் - செல்வத்தின்கண் (வைத்த) ஆசையால், தம்மை உணரார்பின்-தமது குடிப்பிறப்பு முதலியவற்றை அறியாதவர்களின்பின். சென்று நிலை-போய் நிற்றலே.

௩௬௬. கல்லா - (ஞான நூல்களைக்) கற்று. கழிப்பர் - காலங் கழிப்பர். தலையாயார் - உத்தமர். நல்லவை - அறநெறியாற் பெற்ற பொருள்களை. துவ்வா - அனுபவித்து. இடைகள் - மத்திமர். கடைகள் - அதமர். இனிது உண்ணேறும் - இனிமையான பண்டங்களை உண்ணப் பெற்றேறு மில்லையே! முனிவினால்-வெறுப்பினால். கண்பாடு - உறக்கம்; இது முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

௩௬௭. செந்நெல்லால்-சம்பாநெல் விதைகளினின்று; 'செந்நெல்' என்றது சாலியை. ஆய - உண்டாகிய. 'முளை' என்பது தொழிலாகு பெயர். மற்றும் - பின்னும். 'விளைதலால்' என்புழி 'ஆல்' உருபு ஞாபகவேதுப் பொருளது. அ நெல் - அந்தச் சம்பா நெல். நிறைய-நிரம்ப. ஊர-ஊர்களையுடைய பாண்டியனே! மகன் அறிவு தந்தை அறிவு - தந்தையின் அறிவே மைந்தனது அறிவாம்; 'மகனுரைக்குந் தந்தை நலத்தை' என்றார் பிறரும்.

௩௬அ. உடை பெருஞ் செல்வரும் - தொன்று தொட்டுவந்த பெருஞ் செல்வ முடையாரும். சான்றோரும்-(நற்குண நற்செய்கை நிறைந்த) பெரியோரும். கெட்டு - (தத்தம் நிலை) மாறிப்போய். புடை பெண்டிர் மக்களும் - (இழிகுண முடைய) வைப்பாட்டிகள் பிள்ளைகளும், கீழும் - (தீக்குணமுந் தீச் செய்கையுமுடைய) கீழ் மக்களும். பெருகி-(செல்வத்தால்) விருத்தியடைந்து, கடைக்கால் தலைக் கண்ணது ஆகி - காற்புறம் இருக்கத்தக்கது தலைப்புறம் இருப்பதாய்; 'கான் மாடு தலை மாடாய்' என்பது இக்கால வழக்கு. குடை கால் போல்-குடையினது காம்புபோல, கீழ் மேலாய் நிற்கும்-கீழ்மை யடையத் தக்கது மேன்மையடைந்து நிற்குந் தன்மைத்து. 'கெட்டு, பெருகி, ஆகி' என்பன காரணப் பொருட்டில் வந்த செயவெ னெச்சத் திரிபுகள்.

௩௬௯. இனியார் - நல்ல நண்பர்கள். தம் நெஞ்சத்து நோய் உரைப்ப-தங்கள் மனத்திலுள்ள வருத்தத்தை எடுத்துச் சொல்லிய

கூடியிருத்தல் நீங்காத அன்றிற் பறவைகளேயும். ஆணும் பெண் ணும் இணைபிரியாத பறவை அன்றில்; இதனை வடநூலார் 'க்ரௌஞ்சம்' என்ப. நிததலும்-எந்நாளும். பிரியலம்-பிரியோம். 'பொன் தொடி' என்பது அன்மொழித்தொகை. போர் தகர் கோடு-போர் செய்யும் ஆட்டுக் கிடாயின் கொம்புபோல. தகர்க் கோடாதலாவது பின்பு திருகி நிற்றல். ஆயினள் - (மாறுபட்ட குணமுடையவளா) ஒள். 'நல் நெஞ்சே' எனப் பிரிக்க. நிற்றியோ-நீ (அத்தகையவளிடம்) நிற்பாயோ? போதியோ - (என்னுடன்) வருவாயோ?

கஎஎ. ஆமா - காட்டுப் பசு. அஃது உடம்பை நக்குமாயின் அப்போது இன்பமாயிருந்து பின்பு மரணம் விளைக்கு மென்பர். 'நாவின்புற நக்கிக், கொல்லுங் சவயமா போல்' என்றார் பிறரும். ஈண்டு ஆமாபோல் நக்குதலாவது முன்பு இன்பஞ் செய்தல். சேமாபோல் - எருதைப்போல; இஃ திருபெயரொட்டு. குப்புறு உம்-கவிழ்ந்து படுத்துக்கொள்ளுகிற. 'குதித்தோடுகிற' எனினு மாம். சில்லைகண்-இழிந்த குணமுடைய வேசையினிடத்தில்; சில்லையாவது இழிவு, அஃது ஈண்டுப் பண்பாகு பெயர். ஏமாந்து - மயங்கி. எமது என்று-எமக்கே உரியதென்று. பெறுப - பெறுவர். பலரால் நகை - பலராலும் இகழ்ச்சியை. 'நகை பெறுப' என்க. 'தாம், ஆம்' என்பன அசைகள்.

கஎஅ. ஏமாந்த - மயங்கிய. இனியார் - அன்புடையார். இன்னார் ஆய்-அன்பில்லாதாராய். 'தாம் ஆர்ந்தபோதே இன்னாராய்த் தகர்க் கோடாம்' என்றநுவயிக்க. இன்னார் ஆய்-அன்பிலாதாராய். தாம் ஆர்ந்தபோது - (வறுமையடைந்து) தாமே விரும்பிச் சென்ற போது. மான் நோக்கின்-மான்போன்ற மருண்ட பார்வையுடைய. தம் நெறி பெண்டிர்-தமக்குரிய களவுவழியில் தவறாது நடக்கின்ற வேசையருடைய; ஒருவருக்கும் வசப்படாது எப்போதும் தமது நிலை நிற்கின்ற வேசையருடைய எனினுமாம். தட - பெரிய. இஃ துரிச்சொல். செம் நெறி-செவ்விய வழியை (முத்திமார்க்கத்தை).

சேர்தும் என்பார் - சேர்வோமென்று கருதுவோர். 'என்பார் சேரார்' என்க.

௩௭௩. ஊறு செய் நெஞ்சம்-துன்பஞ் செய்தற்குரிய தமது எண்ணத்தை. தம் உள் அடக்கி - (பிறர் அறிய வொட்டாது) தமக்குள் மறைத்து. ஒள் நுதலார் - ஒளிபொருந்திய நெற்றியை யுடைய வேசையர். தேற - உண்மையென்று நம்பும்படி. மொழிந்த மொழி-சொல்லிய பசப்பு மொழிகளை. தேறி-நம்பி. எமர் - (அவ் வேசையரை) எமக்கானவர். கொள்வ - நினைப்பர். யார்க்கும் தமர் அல்லர்-(அவ்வேசையர்) ஒருவருக்கும் உறவினராகார். தம் உடம்பி னார் - தமது உடம்பிற்கே உரியவராவர்; தம் உடம்பளவே பற் றுடையராவர் என்றபடி.

௩௭௪. உள்ளம் ஒருவன் உழையது ஆ - (தமது) மனம் ஒரு வன்பாலிருக்க. கள்ளத்தால் செய்யும் - கபடமாகச் செய்கிற கருத்து எல்லாம் - நினைவு முழுவதையும். தெள்ளி அறிந்த விடத் தும் - தெளிவாக ஆராய்ந்தறிந்தபோதும். அறியார்-(அவர் பரிகரிக் கத்தக்காரென்று) உணரார்கள். 'ஆம்' - என்பது அசை. பாவம் செறிந்த உடம்பினவர்-தீவினை மிகுதியையுடைய உடம்பையுடைய வர் (பாவிகள்).

௩௭௫. அரும்பெறல் கற்பின் - பெறுதற்கரிய பதிவிரதா தரு மத்தில்; இரண்டன் தொகை யெனக்கொண்டு 'பெறுதற் கரிய பதிவிரதா தருமத்தையுடைய' என அயிராணிக்கு அடையாக்கு தலுமாம். அயிராணி அன்ன - இந்திராணியை யொத்த; இவள் இந்திரன் மனைவி. பெரும்பெயர் - கீர்த்தியையுடைய. பெண்டிர் எனினும் - பெண்களாயினும் (அவருள்). பெறும் நசையால்-(தன் னைப்) பெற்று அனுபவிக்க வேண்டுமென்கிற ஆசையால். பின் நிற் பார் இன்மையே-(தனது) பின்னே நிற்கும் ஆண்மக்களில்லாமைக் கேதுவாகிய நற்குணத்தையே. பேணும்-விரும்பிப் பாதுகாக்கும். நறு நுதலாள் - அழகிய நெற்றியையுடைய பெண்ணே. நன்மை துணை - (தன் கணவனுக்கு) நன்மை பொருந்திய துணையாவள்;

இனி, தான் பிறந்த குலத்தார்க்கும் புகுந்த குலத்தார்க்கும் (அவரை நற்கதி சேர்த்தலின்) நன்மை பொருந்திய துணையாவ ளென்பதுமொன்று. கணவனை யன்றிப் பிறனொருவனைத் தான் விரும்பாத கற்பு ஒருத்திக் குண்டெனினும், பிறனொருவன் தன்னை விரும்பாதபடி நடந்து கொள்ளுதலும் வேண்டும் என்பது கருத்து. 'நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப், பிறர் நெஞ்சு சுடூஉம் பெற்றியுமில்லை' என்னும் மணிமேகலை யடிகள் கண்டறியத் தக்கன. தான் சுருவனை விரும்பவில்லையாகலின் இந்திராணி கற்புடைய ளென்றிருப்பினும் அவளை அவன் விரும்பினமையின் அவள் நலஞ் சிறவாமை கூறியபடி காண்க.

க.அஉ. குடநீர் அட்டு உண்ணும் இடுக்கண் பொழுதும் - ஒரு குடத்து நீரைக் காய்ச்சி உண்ணும்படியான (உண்டி அகப்படாத) வறுமைத் துன்பம் வந்த காலத்தும். கடல் நீர் அற உண்ணும் கேளிர் வரினும் - கடனீரை வற்றும்படி உண்ணத்தக்க (அத்தனைச்) சுற்றத்தார் வந்தாலும். கடன் நீர்மை-தனது கடமையாகிய குணங்களையே. கை ஆறு ஆ கொள்ளும் - ஒழுக்க நெறியாகக் கொள்ளுகின்ற. மடமொழி மாதர் - இனிய மதலைச் சொற்களையுடைய பெண்ணே. மனை மாட்சியாள் - இல்வாழ்க்கைக்குரிய பெருமையுடையவ ளாவள்.

க.அக. நால் ஆறும் ஆறாய் - நான்கு பக்கங்களிலும் வழியுடையதாய். நனி சிறிதாய் - மிகச் சிறிதாய். எ புறனும்-எல்லாப் பக்கங்களிலும். மேல் ஆறு - மேல் வழியினின்று; அஃதாவது, கூரைப் பொத்தல்களினின்று. மேல்-(தன்) மேல். உறை சோரினும்-மழை நீர் பெருகி வழியினும். மேல் ஆய-சிறந்த தருமங்களை வல்லாளாய்-(செய்ய) வல்லவளாய். தன் புகழும்-தன்னைப் புகழ்தற் கேற்ற. மாண்-மாட்சிமைப்பட்ட. இல்லாள்-மனைவி. அமர்ந்ததே-பொருந்தப் பெற்றதே; ஏகாரம் பிரிநிலை. இல்-வீடாம். பிற இல் காடா மென்றபடி.

௩௮௪. கட்கு இனியாள்-கண்ணிற்கினிய வுருவமுடையவளாயும். காதலன் காதல்வகை புனைவாள்-(தன்) கணவன் விருப்பத்திற்கேற்பத் தன்னை அலங்கரித்துக் கொள்பவளாயும். உட்கு உடையாள்-(செய்யத் தகாதவற்றைச் செய்ய) அஞ்சுதலுடையவளாயும். ஊர் நாண் இயல்பினாள் - ஊராரைக்கண்டு நாணங்கொள்ளுந் தன்மையுடையவளாயும்; இனி, 'ஊரார் தன்னைக் கண்டு வெட்க மடைதற் கேதுவான சிறந்த நல்லொழுக்க முடையவளாயும்' எனினுமாம். உட்கி-(கணவனுக்கு) அஞ்சி. இடன் அறிந்து ஊடி-சமயமறிந்து அவனொடு பிணங்கி. இனிதின் உணரும்-இன்பமுண்டாம்படி உடனே அறிந்து ஊடல் தீர்கின்ற. ஊடலாவது இன்ப நிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்குமாறு கேள்வர்மீது மகளிர் கோபித்தல்; உணர்தலாவது பதங் கண்டு அவ்வூடல் தீர்தல். பெண்-மனைவியாம்.

௩௮௫. சேர்ந்து எழினும்-அணைந்து எழுந்தாலும். அஞ்ஞான்று-(புதிதாக மணஞ்செய்துகொண்ட) அக்காலத்தில் கண்டேம் போல்-யாங் கண்டதுபோல. நாணுதும்-(இன்றும்) நாணமடைகின்றோம். 'பல் மார்பு சேர்ந் தொழுகுவார் எஞ்ஞான்றும் பொருள் நசையால் கெழீஇயினர் என்னை கொல்லோ' எனக் கூட்டுக. பல் மார்பு-பலருடைய மார்புகளை. நசையால்-ஆசையால், கெழீஇயினர்-அவர் (பலரிடத்தும்) உரியராயிருக்கின்றனர்; இது சொல்லிசை யளபெடை. என்னை கொல்லோ-ஈது என்ன தன்மையோ! 'ஆல்; கொல்' என்பன அசைகள்.

௩௮௬. உள்ளத்து உணர்வுடையான் ஓதிய நூல் அற்று-மனதில் நல்லறிவுடையவன் கற்றறிந்த நூற்பொருள் போலும். 'நூல்' என்பது ஆகுபெயர். வள்ளன்மை பூண்டான்கண் ஒண் பொருள் - வரையாது கொடுக்குந் தன்மையை மேற்கொண்டவனிடத்துள்ள மிக்க செல்வமானது. தெள்ளிய - தேர்ந்தெடுக்கப் பட்ட. ஆண்மகன்-வீரன். கையில் அயில்வாள் அனைத்து - கையிலுள்ள கூரிய வாள்போலும். நாண் உடையாள் பெற்ற நலம்-நாண

மூடைய குலமகள் அடைந்துள்ள அழகானது. 'நாணம்' என்பது மடம், அச்சம், பயிர்ப்பு ஆகிய மகளிர்க் குணங்களுக்கும் உபலக்ஷணமா மென்க. 'நல்லறிவாளன் கற்ற நூற்பொருள் போலக் கொடையாளன் பொருளும் யாவர்க்கும் பயன்படும்; அவ்வாறன்றி, சுத்தவீரன் ஏந்தியவாள் எதிரேற்று நிற்பாரை அழித்தல் போலக் குலமகளிர் பெற்ற அழகு அவர் கணவனொழிந்த பிறர் விரும்பி நிற்பின் அவரை அழிக்கும்; அஃதாவது பிறரொருவர்க்கும் பயன் படாது' என்பது கருத்து.

௩அ௭. கருங்கொள்ளும் - தாழ்ந்த கறுப்புக் கொள்ளையும். செங்கொள்ளும்-உயர்ந்த சிவப்புக் கொள்ளையும். 'தூணி' என்பது நான்கு மரக்காலும், 'பதக்கு' என்பது [illegible] மரக்காலு மாம்: இவை முகத்தலளவைப் பெயர்கள். ஒழுங்கு ஒப்ப-(அவற்றின் வேறுபாடு கருதாது) ஒரு நிகராக. கொண்டான் ஆம்-வாங்கிக் கொண்டானும்; 'ஆம்' என்பது ஈண்டு இகழ்ச்சி குறித்து நின்றதென்க. ஊரன் - கிராமத்திலுள்ளா னொருவன். (அது போல); ஒருங்கு ஒவ்வா - முற்றும் ஒத்திராத. 'நன்னுதலார்' என்றது 'வேசையரை.' தோய்ந்த - அனுபவித்த. வரை மார்பன்- மலைபோன்ற மார்புடை என் கணவன்: 'மூன்று ரேகைகளை யுடைய மார்புடையான்' என்பதுமாம், அஃது உத்தம விலக்கணமாகலின். என்னையும் - (குலமகளாகிய) என்னையும்; இஃது தநீதி யென்றபடி. குலமகளிராகிய தங்கள் தூய்மையைக் கூறியது இது.

௩அ௮. கொடியவை - கொடுமையான சொற்களை. கூறுதி- சொல்லாதே. பாண - பாணனே! பாணன் என்பவன் யாழுடன் பாடும் ஓர் இழிகுலத்தான், இவன் தலைமகன் தலைமகளுக்குத் தூது செல்வதுண்டு; 'இவன் மனத்தொடு ஒன்றாத புகழ்ச்சி மொழி யுடையான்' என்பாருமுளர். பைய அடி இட்டு ஒதுங்கி சென்று - மெல்லென அடியிட்டொதுங்கி அப்பாற்போய். துடியின் - உடுக்கையினது. இடம் கண் அனையம் யாம் - நாம் இடப் பக்கத்தைப் போலப் பயன்படா திருக்கின்றோம்: 'கண்' என்றது

அடிக்கு மிடத்தை. ஊரற்கு - தலைவனுக்கு. வலம் கண் அனை யார்க்கு-(அவ்வுடுக்கையின்) வலப்பக்கத்தைப் போலப் பயன்படும் வேசையர்க்கு. உரை - சொல்வாய். உடுக்கையின் வலப்பக்கம் அடிபடுதலும் இடப்பக்கம் அடிபடாமையும் கருதி இவ்வுவமை கூறப்பட்டதென்க. இது தலைவி தன் தலைமகன் பரத்தைபாற் செல்வதைப் பாணன் தன்பாற் கூறியவழி அதைக் கேட்டு ஆற்றாது மறுத்துக் கூறியது.

௩௮௧. சாய்-கோரையை. பறிக்க - பிடுங்கி யெறிந்த வளவில். ஊரன்மீது - ஊர்களையுடையவனான (எனது) தலைவன் மேல். ஈ பறக்க நொந்தேனும் யானே-ஈயானது பறக்கும்போது பொறாது வருந்தியவளும் யானே. 'மன்' என்பது அசை. தீ பறக்க - நெருப்புப் பொறி பறக்கும்படி. தாக்கி முலை பொருத - (வேசையர் தமது) ஸ்தனங்களால் தாக்கிப் போர் செய்த. தண் சாந்து அணி அகலம் - குளிர்ச்சி பொருந்திய கலவைச் சந்தனம் அணிந்த (அத்தலைவன்) மார்பை. நோக்கி இருந்தேனும் யான் - கண்டு பொறுத்திருந்தவளும் யானே. 'என்னோடு கூடியிருந்தஞான்று தலைவன்மேல் ஈப் பறக்கவும் பொறாது வருந்தியவளும் நான், என்னிற் பிரிந்து வேசையரொடு புணர்ந்துவந்த அத்தலைவன் மார்பைக் கண்டு நொந்து நிற்பவளும் நான்' என்று ஒரு தலைவி வருந்திக் கூறினளென்பதாம்.

௩௮௨. அரும்பு அவிழ் தாரினான் - பூவரும்புகள் மலர்ந்த மாலையணிந்த தலைவன். எம் அருளும் என்று - எமக்கு அருள் செய்வனென்று. உரையாதி - சொல்லாதே. கரும்பின் கடை கண் அனையம் நாம் - கரும்பினது கடைக்கணுள்ள கணுக்களை யொத்திருக்கின்றோம் நாம். ஊரற்கு - தலைவனுக்கு. இடை கண் அனையார்க்கு - அக் கரும்பினது இடைக்கணுள்ள கணுக்களை யொத்த பரத்தையர்க்கு. உரை-சொல்லுவாய். கரும்பின் கடைக் கணுக்களில் இனிப்பின்மையும், இடைக்கணுக்களில் இனிப் புண்மையும் வெளிப்படை. இது பரத்தையிற் பிரிந்த தலைவன் பின் தலைவிபால் வர அவள் சினங்கொண்டு ஏற்றுக்கொள்ளாது மறுக்க

அதனால் வருந்திய தலைவன், அவள் சினத்தைத் தணிக்குமாறு ஒரு பாணனை ஏவ, அவன் நயமொழி பல கூறிப் புக அவற்றைக்கேட்ட தலைவி அவனைப் பரிகசித்து வெகுண்டு கூறியது.

௲கக. முயங்காக்கால் - கூடாவிடின். பாயும் பசலை - பசலை நிறம் (உடம்பில்) பரவும்; 'பசலை' என்பது துயிலின்மை, உடலிளைப்பு முதலிய மற்றை விகாரங்கட்கும் உபலக்ஷணம். ஊடி உயங்காக்கால் - ஊடல்கொண்டு வருந்தாவிடின். உப்பு இன்றாம் காமம்-காமநுகர்ச்சி இன்பமுடைத்தாகாது; ஈண்டு 'உப்பு' என்றது இனிமையை. வயங்கு ஓதம் நில்லாத - விளங்குகின்ற கடலானது நிலையாமல். திரை அலைக்கும் - அலைகளான் மோதுகின்ற. சேர்ப்ப - கரையையுடைய அரசனே! புல்லா புலப்பது - முதலிற் கூடிப் பின் ஊடுவது. ஓர் ஆறு - (இன்ப மிகுதற்கு) ஒரு வழியாம். 'மற்று' என்பது அசை. வடநூலார் கூடலை 'ஸம்போகம்' எனவும் ஊடலை 'விப்ரளம்பம்' எனவும், விப்ரளம்பத்தை 'மதுரதரம்'(மிக்க இனிமை) எனவுங் கூறுப.

௲கஉ. தம் அமர் காதலர்-தம்மிடம் விருப்பமுடைய தலைவரது. தார் சூழ் அணி அகலம் - மாலைசூழ்ந்த அழகிய மார்பினை. விம்ம முயங்கும் - (மகிழ்ச்சியினால்) பூரிக்கும்படி தழுவுதற்குரிய. துணை இல்லோர்க்கு - தலைவர் இல்லாத அஃதாவது தலைவரைப் பிரிந்த மகளிர்க்கு. இம்மென - இம்மென்கிற ஓசையோடு; இஃது ஒலிக்குறிப்பு. எழிலி-மேகங்கள். முழங்கும் திசை எல்லாம் - நேர்த்து - (அம்முழக்கம் அவர்க்குச்) சாப்பறை யடித்தாற்போன்ற தன்மையுடைத்தாம்; அஃதாவது மிகுதியும் வருத்துமென்பதாம். கார்காலத்தின் மீண்டு வருவேனென்று காலங்குறித்துச் சென்ற தலைமகன் அக்காலம் வந்தும் வாராமையின், காலத்தை நோக்கித் தலைமகள் ஆற்றாது வருந்திக் கூறியது.

௲கங. கம்மம் செய் மாக்கள் - தொழிலைச் செய்கின்ற மனிதர்; 'கர்மம்' என்னும் வடசொல் 'கம்மம்' எனத் தமிழில் வழங்கிற்றென்ப. கருவி - (தமது) ஆயுதங்களை. ஒடுக்கிய - (வேலையில்

லாது) அடங்கச்செய்த. மம்மர் கொள் மாலை - மயக்கத்தைக் கொண்ட மாலைப்பொழுதில். ஆய்ந்து - ஆராய்ந்தெடுத்து. பூ தொடுப்பாள்-மாலை தொடுப்பவளாகிய தலைமகள். கைமாலை இட்டு-(தனது) கையிலுள்ள மாலையைப் போட்டு. கலுழ்ந்தாள் - மனங் கலங்கி அழுதாள். துணை இலார்க்கு - தலைமகனைப் பிரிந்த மகளிர்க்கு. இ மாலை என் செய்வது என்று - இந்த மாலை யாது பயன் படுமென்று (நினைத்து). தலைமகன் பிரிவுணர்ந்தவழித் தலைமகள் தான் தொடுத்த மாலையைப் போகட்டு அழுதாளெனத் தோழி தலைமகற்குக் கூறியது.

௩௯௪. செல்சுடர் - (மேலைக்கடலை நோக்கிச்) செல்கின்ற சூரியனை; மறையுஞ் சூரியனையுடைய மாலையை எனினுமாம், இப்பொருட்குச் 'செல் சுடர்' என்பது அன்மொழித் தொகையாம். சிதர் அரி - சிதறிய செவ்வரிகளையுடைய. கண்கொண்ட நீர் - (தனது) கண்களில் நிறைந்த நீரை. மெல்விரல் - மெல்லிய விரல்களால். ஊழ் தெறியா - முறைமையாக (அடிக்கடி) எடுத்தெறிந்து. விம்மி - தேம்பி அழுது. நாள்வைத்து - (நாம்) பிரிந்து சென்ற நாட்களைக் குறித்து. நம்குற்றம் - நமது குற்றத்தை. 'அந்தோ' என்பது இரக்கக் குறிப்பிடைச்சொல். தோள் வைத்து-தனது தோள்களையே தலையணையாகக் கொண்டு. அணைமேல் கிடந்து - சயனத்தில் படுத்து. இது பிரிந்த தலைமகனொருவன் மீண்டு வருகையிற் பாகனொடு கூறியது. 'வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற, நாளொற்றித் தேய்ந்த விரல்' என்றார் திருவள்ளுவனாரும்.

௩௯௫. கண் கயல் என்னும் கருத்தினால் - (எனது தலைவியின்) கண்களை கயல் மீன்களென் றெண்ணுகிற எண்ணத்தினால். காதலி பின் சென்றது - எனது தலைவியின் பின்னே தொடர்ந்து போயிற்று. 'அம்ம' என்பது வியப்பிடைச் சொல்; இனி 'அம்ம கேட்பிக்கும்' என்றிருத்தலின், 'பாங்கனே! நீ கேள் என்றுமாம். சிறு சிரல் - சிறிய சிச்சிலிப்பறவை அஃதாவது மீன் குத்திப் பறவை. பின் சென்றும் - (அப்படிப்) பின் தொடர்ந்து

சென்றும். ஊக்கி எழுந்தும்-முயற்சி செய்தும். எறி கல்லா-(அஞ்சி அக்கண்களைக்) குத்தித் தின்னமாட்டாதாயிற்று; துவ்வீறு தொக்கது ஒள் புருவம் கோட்டிய வில் வாக்கு அறிந்து-(அவளது) ஒளிய புருவம் வளைந்த வில்லின் வளைவுபோல விருந்ததை அறிந்து; 'வாக்கு' என்பது முதனிலை திரிந்த தொழிற் பெயர், 'வாங்குதல்-வளைதல்'. இது மயக்கவணி தலைமகளது கண்ணழகில் லீடுபட்ட தலைமகன் அதனை வியந்து தோழனோடு சொல்லிய துறை இது.

௩௧௬. அரக்கு ஆம்பல் நாறும் வாய்-சிவந்த ஆம்பல் மலரை ஒத்த வாயையும்; 'செவ்வாம்பல் மலர்போல் மணம் வீசும் வாயையும்' என்பதுமாம். அம்மருங்கிற்கு - அழகிய இடையையுமுடைய எனது மகளுக்கு; 'மருங்குல்' என்பது ஆகுபெயர். 'அன்ஞே' என்பது இரக்கக் குறிப்பிடைச் சொல். பரல் கானம் ஆற்றின கொல்லோ - பருக்கைக் கற்களையுடைய காட்டைப் பொறுத்தனவோ? அரக்கு ஆர்ந்த பஞ்சிகொண்டு ஊட்டினும் - (முன்னே) செந்நிறம் பொருந்திய பஞ்சுக் குழம்பைத் தடவினும். பையென பையென என்று-மெல்ல மெல்ல வென்று; அடிக்கு ஈண்டு அச்சப் பொருளது. அஞ்சி-(அதனையும் பொறுக்க முடியாது) அச்சங் கொண்டு. பின் வாங்கும்-இளைத்துப் பின் வாங்கிய. அடி-(அவளது) பாதங்கள். தலைவன் தலைவியை இடைச்சுர நெறியாக உடன் கொண்டுபோன செய்தியை அறிந்த நற்றாய் அச்சுரத்தின் கொடுமையையும் தன் மகளது மென்மையையுங் கருதிக் கவன்று கூறியது இது.

௩௧௭. ஓலை கணக்கர்-ஓலையிலெழுதுங் கணக்கர்களுடைய; இனி, 'ஒலி யடங்கு' என்றிருத்தலின், ஓலைக் கணக்கர்' என்பது ஓலையிலெழுதிப் படிக்கும் பள்ளியிற் பிள்ளைகள்' என்றலே பொருந்து மென்பாருமுளர். ஒலி அடங்கு-ஓசை ஒழியும்படியான. புல் செக்கர் மாலைப் பொழுதின் - அல்பமாகிய செவ்வானத்தையுடைய மாலைக்காலத்தில். மணந்தார் பிரிவு உள்ளி - (தலைமகள் தனது) தலைவன் பிரிந்து செல்வதை நினைத்து. மாலை - பூமாலை, முத்துமாலை முதலியவற்றை, பரிந்திட்டு - கழற்றி யெறிந்து.

வனம் - அழகு மிக்க. கோலம் செய் சாந்தம் திமிர்ந்து - ஒப்பனை செய்த கலவைச் சந்தனத்தையும் உதிர்த்து ஒழித்து. தலைவனது பிரிவாற்றாத தலைவியின் நிலைமையைத் தோழி கூறியது; அன்றி, தலைவி பிரிவுடன்படாமையைத் தோழி தலைவற்குக் கூறிய துறையாகவுங் கொள்க.

கூகூ௯. கடக்க அரும் கானத்து-கடந்து செல்வதற்கு அருமையான காட்டில்; அகரந் தொக்கது விகாரம். காளை பின் - இளவெருதுபோன்ற தலைவன் பின்னே; 'காளை' என்பது ஆகுபெயர். நாளை - நாளையதினம். நடக்கவும் வல்லையோ - நடந்து செல்லவும் மாட்டுவாயோ? என்றி - என்று (என்னை நோக்கிக்) கூறினாய்; இது முன்னிலை யொருமை முற்று. சுடர்த் தொடீஇ - ஒளி யமைந்த வளையல்களை யுடையவளே. 'சுடர்த்தொடி' என்னும் அன்மொழித் தொகை அளபெழுந்து விளியுரு பேற்றது. பெற்றான் ஒருவன் பெருங் குதிரை - பெரியதொரு குதிரையைப் பெற்றவனாகிய ஒருத்தன். அ நிலையே-பெற்ற அப்பொழுதே. கற்றான் அஃது ஊரும் ஆறு-அதனை ஏறி நடத்தும் வகையினையுங் கற்றவனே யாவன்; ஆய்தம் ஈண்டு உயிர்போல ஒலித்தல் காண்க. பின்னிரண்டடிகளிற் 'பிறிது மொழிதலணி' யுளது. ஒரு தலைவற்கு வாழ்க்கைப்பட்ட யான் அவன் பின் செல்லவும் வல்லேனென்று தலைவி தனது தோழியை நோக்கிக் கூறிய துறை இது. 'கணவன் பின் செல்வது அரிதன்று' என்பது குறிப்பு.

கூகூகூ. முலை கண்ணும்-முலைக்காம்புகளும். முத்து-முத்துமாலையும். முழு மெய்யும் புல்லும்-எனது உடம்பு முற்றுந் தழுவிய. இலக்கணம்-அடையாளத்தை. யாதும் அறியேன்-அப்பொழுதும் சிறிதும் அறிந்திலேன். கலை கணம்-மான் கூட்டம். வேங்கை வெரூஉம் - வேங்கைப் புலிக்கு அஞ்சித் திரிகின்ற; வேங்கையின் வெரூஉம்' என்றேனும், 'வேங்கையை வெரூஉம்' என்றேனும் பிரிக்க. 'அச்சக் கிளவிக் கைந்தமிரண்டு, மெச்ச மிலவே பொருள்வயி னான' என்பது தொல்காப்பியம். நெறி - காட்டு வழியில். செலிய போதும் - செல்லுதற்குப் போதும். 'செலிய என்பது

செய்யிய வென்னும் வாய் பாட்டு எதிர் கால வினையெச்சம். 'போலும்' என்பது உரை யசை; அஃதீண்டுத் தற்குறிப்பேற்ற வுருபாத லுணர்க. பூம் பாவை-அழகிய சித்திரப் பிரதிமைபோன்ற மகள்; தாமரைத் தவி சுகந்த இலக்குமிபோன்ற மகளெனினு மாம். செய்த குறி - அப்பொழுது செய்த அடையாளம். மகளைப் போக்கிய நற்றாய் கவன்று கூறியது இது.

௬௯. கண்மூன் றுடையானும் - மூன்று கண்களையுடைய சிவபெருமானும்; கண் மூன்றும் முச்சுடரென்க. பை அரவும் - படத்தையுடைய (இராகு வென்னும்) சர்ப்பமும். என் ஈன்ற யாயும் - என்னைப் பெற்ற தாயும். பிழைத்தது என் - (எனக்குப்) பிழை செய்தது யாது? (ஒன்று மில்லை). 'பொன்' நின்ற - பொன் போன்ற தேமல் பொருந்திய: 'பொன்' என்பது ஆகுபெயர். கோங்கு அரும்ப அன்ன-கோங்கரும்பு போன்ற. பொருள் வயின்-பொருளினிடத்து ஆசையால். பாங்கனார் - (எனது) தலைவர் சென்ற நெறி - போந்த நெறியே. (எனக்குப் பிழை செய்தது); பயனிலை வருவிக்கப்பட்டது. மன்மதனை உருவழித்துப் பின்னும் அவனை உளனாக்கிய சிவபெருமானும், தன் கூட்டிற் பொரித்த குயிலின் குஞ்சைக் குத்திக் கொல்லாதுவிட்ட காக்கையும், சந்திரனை விழுங்கிப் பின்பு உமிழ்ந்திட்ட இராகுவும், தன்னைப் பெற்ற போதே கொல்லாது வளர்த்த தாயுமே பிழை செய்தனரென்று கருதற்குக் காரணம், கணவனைப் பிரிந்த காலத்து மன்மதனுங் குயிலுஞ் சந்திரனும் வருத்துதலும், தாய் பிறந்தபோதே கொல் லாமை இத்தகைய துன்பத்திற்கெல்லாம் தன்னை உள்ளாக்கின மையுமாம். 'எனது தலைவர் பிரியாது உடனிருப்பின், மன்மத னுங் குயிலுஞ் சந்திரனுமென்னை வருத்தக் காரணமில்லை, சிவ பெருமான் முதலியோர்மீது பழி கூற வழியில்லை யாகலின் அவர் சென்ற நெறியே எனக்குப் பிழை செய்ததென்று கூறவேண்டிய தாயிற்று' எனத் தலைவி தோழிக்குத் தனது பிரிவாற்றாமையைக் கூறியது இது.

# பாட்டு முதற்குறிப் பகராதி



# அருஞ்சொற் கோவை

